

# உலகால் அறியப் படாத ரகசியம்

டாக்டர்
எம்.எஸ்.உதயமூர்த்தி

# உலகால் அறியப்படாத ரகசியம்

டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி



கங்கை புத்தக நிலையம்

13, தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை – 600 017.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | மார்ச், 1994 |
| பத்தாம் பதிப்பு | : | டிசம்பர், 2000 |
| பதினைந்தாம் பதிப்பு | : | டிசம்பர், 2003 |
| இருபதாம் பதிப்பு | : | ஏப்ரல், 2008 |
| இருபத்து ஒன்றாம் பதிப்பு | : | ஜனவரி, 2009 |
| இருபத்து இரண்டாம் பதிப்பு | : | ஜனவரி, 2010 |
| இருபத்து மூன்றாம் பதிப்பு | : | ஏப்ரல், 2011 |
| இருபத்து நான்காம் பதிப்பு | : | ஆகஸ்ட், 2012 |
| இருபத்தி ஐந்தாம் பதிப்பு | : | ஜூலை, 2013 |
| இருபத்தி ஆறாம் பதிப்பு | : | மே, 2014 |
| இருபத்தி ஏழாம் பதிப்பு | : | பிப்ரவரி, 2015 |
| இருபத்தி எட்டாம் பதிப்பு | : | பிப்ரவரி, 2016 |
| இருபத்தி ஒன்பதாம் பதிப்பு | : | ஜனவரி, 2017 |
| முப்பதாம் பதிப்பு | : | ஆகஸ்ட், 2018 |
| முப்பத்தி ஒன்றாம் பதிப்பு | : | ஆகஸ்ட், 2020 |



**விலை : ரூ.95.00**

| | | |
|---|---|---|
| ❒ Title | : | **ULAGAL ARIYAPPADATHA RAGASIYAM** |
| ❒ Author | : | **Dr. M.S. UDHAYAMURTHI** |
| ❒ Language | : | Tamil |
| ❒ Edition | : | Thirty First Edition, August, 2020 |
| ❒ Pages | : | xx + 154 = 174 |
| ❒ Published by | : | **GANGAI PUTHAKANILAYAM**<br>23, Deenadayalu Street,<br>Thyagaraya Nagar, Chennai-17.<br>☎ 24342810, 24310769 |
| ❒ Price | : | **₹ 95.00** |

Printed at : Novena Offset Printing Co., Chennai - 5 ☎ 28446891, 2844616

காணிக்கை

மகான்

யோகி ராம் சுரத் குமார் அவர்களின்

பாத கமலங்களில்

# சித்தர் தத்துவத்துக்குத் தங்க மூலாம்!

---

**மூலிகைமணி வெங்கடேசன்**

முப்பது ஆண்டுகளுக்கு முன் என் தந்தையின் அலமாரியிலிருந்து நான் எடுத்துப் படித்த முதல் சித்த மருத்துவ நூலின் பெயர் – 'சட்டமுனி ஞானம்'. அதில் வரும் ஒரு பாடல் என்னைப் பெரிதும் கவர்ந்தது.

"அண்டத்திலுள்ளதே பிண்டம்
பிண்டத்திலுள்ளதே அண்டம்
அண்டமும் பிண்டமும் ஒன்றே
அறிந்துதான் பார்க்கும் போதே!"

என்று அந்தப் பாடல் கூறும் கருத்து அப்போது புதிராக இருந்தது! பல ஆண்டுகள் இந்தப் பாடலைப் பற்றிச் சிந்தித்தபின் இதனுள் 'மாபெரும் விஞ்ஞான உண்மை' மறைந்து கிடப்பதை அறிந்தேன்.

'மண், விண், காற்று, தீ, நீர்' எனப்படும் ஐவகை மூலப்பொருட்களால் உருவானதுதான் இந்த 'அண்டம்' எனப்படும் Macro Universe.

அதே ஐவகை மூலங்களின் கலவையால் உருவானதுதான் நம் உடம்பு எனும் 'பிண்டம்' Micro Universe என்று குறிப்பிடலாம். உயிருக்கும் உலகத் துக்கும் இடையறாத தொடர்பு இருப்பது அவசியம். 'இந்தத் தொடர்பு தடுமாறும்போதோ அல்லது அற்றுவிடும்போதே உயிர் பிரிகிறது' எனும் நுட்பமான கருத்தைப் பல்லாண்டுகளுக்கு முன்னரே 'சட்டமுனி' எனும் சித்தர் பல பாடல்களில் குறிக்கிறார்!

'இந்தக் கருத்தை இன்னும் உலகு அறிய வில்லையே' என்று நான் அவ்வப்போது ஏங்குவது உண்டு!

நேற்று கோவையில் புத்தகக் கடை ஒன்றில் கண்ணோட்டம் விட்டேன். 'உலகால் அறியப்படாத ரகசியம்' என்ற தலைப்பில் புத்தகம் கண்ணில் தட்டுப் பட, எடுத்தேன், படித்தேன். 'சிந்தனைச் செல்வர்' டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி எழுதியுள்ளதைக் கண்டு மகிழ்ந்தேன்.

என்னுடைய மேற்கண்ட ஏக்கத்தைப் போக்குவதுபோல் புத்தகத்தைத் தொடங்குகிறார் உதயமூர்த்தி:

'நம் புலனுக்கு அப்பாற்பட்ட ஒரு மாபெரும் சக்தி, ஒரு மாபெரும் பேரறிவு, எப்போதும் நமக்கு உதவத் தயாராக இருக்கிறது.

நமக்கும் மூலம் என்ற பிரபஞ்ச சக்திக்கும் ஒரு தொடர்பு இருக்கிறது என்பதையும், அது சதா நமக்கு உதவக் காத்திருக்கிறது என்பதையும் நாம் உணர்வ தில்லை.

'பிரபஞ்ச சக்தியுடன் மனித சக்தி ஒன்றும் போது தான் மாபெரும் நிறைவு வாழ்வில் கிடைக்கிறது' எனும் நம் ஞானிகள் உணர்த்திய உண்மையை நோக்கித்தான் இன்றைய விஞ்ஞான ஆய்வுகள் போய்க் கொண்டிருக்கின்றன என்று சுவையாக விளக்கிச் செல்கிறார் நூலாசிரியர் உதயமூர்த்தி.

தமிழகச் சித்தர்களில் முதல்வரான திருமூலர் தொடங்கி, வள்ளலார் மற்றும் திருவண்ணாமலையில் 'வாழும் சித்தராக' விளங்கும் யோகி ராம்சுரத்குமார் வரையிலான பல ஞானியர்களின் அனுபவ வெளிப்

பாடுகளை விஞ்ஞான நோக்குடன் உதயமூர்த்தி விளக்குவது எளிதாகப் புரிந்துகொள்ள உதவுகிறது.

திருமூலரின் புகழ்பெற்ற வரியான 'தன்னை அறிந்தால் தனக்கொரு கேடில்லை' எனும் வரிக்கு அவர் பின்கண்ட விளக்கம் தருவது பொருத்தமாகவும் வியப்பாகவும் உள்ளது:

'தன்னையறிதல் என்பது தனக்குள்ளே இருக்கும் ஆத்மனை அறிதல்... நமக்குள்ளே ஒரு மாபெரும் சக்தி குடிகொண்டிருக்கிறது என்பதை உணர்தல்' என்பார்கள். இந்த 'உணர்தல்' என்பதைச் சிலர்தான் உணர்ந்து துணிச்சலாகச் செயல்படுகிறார்கள்.

'விகடனின் இணையாசிரியர் மதன், சென்னை மாநிலக் கல்லூரியில் பௌதிகம் படித்தவர். உள்ளுக் குள்ளே ஓவியம் வரையும் ஆர்வம். எனினும், அவர் ஓர் ஓவியப் பள்ளிக்குச் சென்று பயிற்சி பெற்றதில்லை. படம் போடுவதோ, கார்ட்டூன் போடுவதோ ஒரு மதிக்கத் தகுந்த நல்ல வருவாயைக் கொடுக்கக்கூடிய தொழிலாக இல்லாதிருந்த காலகட்டம் எனினும் மதன் விகடனில் கார்ட்டூனிஸ்டாகச் சேர்ந்தார். இன்று அகில உலகிலும் விஷயம் தெரிந்தவர்கள் போற்றும் மனிதராகத் திகழ்கிறார்' என்று விவரிக் கிறார் உதயமூர்த்தி. திருமூலர் 1,500 ஆண்டுகளுக்கு முன் கூறிய ஒரு தத்துவக் கருத்துக்கு 'மதன்' வாழ்க்கையை நடைமுறை உதாரணமாக விளக்கும் உதயமூர்த்தியின் 'எழுத்தில்' நான் என்னைச் சில நிமிடங்கள் இழந்தேன்!

இந்த நூலில் எனக்கு மிகவும் பிடித்த ஒரு தொடர் 'பிரபஞ்சலயம்' என்பதாகும். நான் வெகு காலமாக உணர்ந்து பலருக்கும் சொல்வது —

"இயற்கையை வெல்ல நினைப்பது துன்பத்தில் முடியும்;

இயற்கையோடு ஒன்றுதலில்தான் பேரின்பம்!"

எனவே, தினசரி சில நிமிடங்களாவது வானம், நட்சத்திரங்கள், ஆறு, கடல், சோலை — ஒன்றுமே இல்லாவிட்டால் 'மொட்டைமாடி'யில் மௌனமாக அமர்ந்து தியானம் செய்யுங்கள்" என்பேன். இதன் பயனே 'பிரபஞ்ச லயத்துடன்' ஒன்றுதலாகும்.

இந்தப் 'பிரபஞ்சலயம்' பற்றிப் பல பக்கங்களில் உதயமூர்த்தி சுவைபட விளக்குகிறார்.

'திருவனந்தபுரத்தில் ஒரு கோயில் கொடிக் கம்பம் நட ஆழமான குழியைத் தோண்டி விட்டு, யானையை ஏவி அந்தக் கொடிக்கம்பத்தைத் தூக்க வைத்தார்கள். கொடிக்கம்பத்தைத் தூக்கிய யானை அதைக் குழிக்குள் போட மறுத்தது. விஷயம் என்ன வென்று பார்த்தால், அந்தக் குழியில் தவறிப் போய் விழுந்துவிட்ட பூனைக்குட்டி ஒன்றிருந்தது தான்! யானைக்கு ஏன் இந்தக் கருணை உணர்வு?'

இப்படிச் சுவையான சம்பவங்களுடன் பிரபஞ்ச லயத்தைப் பற்றி விளக்கும் உதயமூர்த்தி, அதனுடன் நம்மைப் பிணைத்திருப்பது 'நம் மூச்சுக் காற்று' என்ற திடுக்கிடும் உண்மையை விளக்குகிறார்.

உதயமூர்த்தி சார்! சித்தர்களின் தத்துவத்துக்கு இந்த நூல் மூலம் தங்க முலாம் பூசியுள்ளீர்கள். Hats Off!

தமிழறிந்த ஒவ்வொருவருக்கும் ஒரு சித்த மருத்துவன் என்ற தகுதியில் நான் எழுதும் Prescription:

'உலகால் அறியப்படாத ரகசியம்' எனும் இந்த நூலை 'சோர்வு' அடையும்போதெல்லாம் படியுங்கள்!

ஓம்! ஓம்! ஓம்!

நன்றி: ஆனந்தவிகடன், 20.11.94

# முன்னுரை

யாருமில்லை சாட்சியாக
மனமே கேள்வியாக

என்ற கவிதையை — அந்த இரண்டு வரிகளை — படித்தேன். அதிலேயே தோய்ந்து போனேன்.

மனம் பல கேள்விகளை எழுப்புகிறது.

நாம் விடை காண முயல்கிறோம்.

பல நூல்களைப் படிக்கிறோம்; சிந்திக்கிறோம். பல பெரியவர்களைச் சந்திக்கிறோம்; சிந்திக்கிறோம்.

வாழ்வில் ஏதாவது அர்த்தமிருக்கிறதா? எதற்காக வாழ்கிறோம்? ஏன் இங்கே வந்தோம்? இந்த ஊர், உலகம், வாழ்க்கை எல்லாம் நமக்குப் பிடிக்கவில்லை என்றால் போய்விடலாமல்லவா?..... யாருமில்லை சாட்சியாக, மனம்தான் கேள்வியாக.

வயது பல அனுபவங்களைத் தருகிறது. வயதுக்கு நன்றி சொல்ல வேண்டும். இளமையின் ரத்தத் துடிப்பு 'திமிர்' ஆணவம், நான் 'என்னைச் சுற்றித்தான் உலகம்' என்பது வேறு; 'ஆன்று அவிந்து அடங்கிய' கொள்கை வேறு.

ஞானிகளையும், யோகிகளையும் 'பைத்தியக் காரர்கள்' — வாழ்விலிருந்து தப்பிக்க முயல்பவர்கள்

என்றது வேறு; இன்று, அவர்களை உண்மையைக் கண்டவர்கள், வாழும் வழியைச் சொல்லிக் கொடுக்கும் மகான்கள் என்று தெளிவு பெறுவது வேறு.

விஞ்ஞான அறிவும் விஞ்ஞான மனோ பாவமும் உலகில் எல்லோருக்கும் இருக்குமானால் இவ்வுலகம் ஒரு அற்புத உலகமாயிருக்கும் என்று எண்ணியது ஒரு காலம். மனிதன் தன்னையறிந்து கொள்ளவில்லை, தன்னை அறிந்து கொள்ளாமலே வாழ்கிறான் என்று உள்நோக்கிய பயணத்தில் நடப்பது ஒருகாலம்.

பாரிஸ் விமான நிலையத்தில், முதுகில் கனமான பையைச் சுமந்துகொண்டு அதில் பாண்டிச்சேரி என்று எழுதியிருப்பதைப் பார்த்து அந்த வெள்ளைக் கார இளைஞர்களை "எங்கே பாண்டிச்சேரிக்கா போகிறீர்கள்?" என்று அகலக் கண்விரித்துக் கேட்டது ஒரு காலம். அதே சமயம் பணம்பண்ண, வசதியுடன் வாழ நாம் மேற்கு நோக்கி (அவர்கள் கிழக்கு நோக்கி வரும்போது) அமெரிக்காவிற்குச் சென்று கொண் டிருக்கிறோமே என்று மனம் எண்ணி, கண்ணீர் வடித்த திருப்புமுனை ஒரு நேரம்.

வயது சில அனுபவங்களைத் தருகிறது என்று சொல்கிறோம்; ஞான சம்பந்தர், அரவிந்தர், ரமணர் எல்லாம் இளவயதிலே ஞானம் பெற்றவர்களே. அங்கே வயதா தேவையாக இருந்தது? அங்கே யாரு மில்லை சாட்சியாக, மனம்தான் கேள்வியாக.

ஒன்றே ஒன்றுதான் புரிந்தது. யார் ஒத்துக் கொண்டாலும் சரி, யார் ஒத்துக்கொள்ளா விட்டாலும் சரி, நமது பெரியவர்கள் சொல்லிவிட்டுப் போன ஒரு விஷயம்தான் உண்மை. மாறா உண்மை. என்ன அது?

## அவனருளாலே அவன்தாள் வணங்கி

அவன் தாளை வணங்குவதற்குகூட அவன் அருள் வேண்டும். யோகி ராம் சுரத் குமார் அவர்களை நான் திருவண்ணாமலையிலே பார்த்தேன். என் நண்பர் பேராசிரியர் வெங்கடேசனுடைய வேண்டுகோளுக்காக என்றுதான் சொல்ல வேண்டும். "யாரோ ஒருவர்," "ஏதோ ஒரு சாமியார்" என்ற எண்ணம்தான் மிஞ்சியது.

அவரைப் பூரணமாகத் தெரிந்து கொள்ள 'அவனருள்' வேண்டியிருந்தது. என்னை மீறிய ஒரு சம்பவத்தினால்தான் புரிந்து கொண்டேன்.

எங்கோ போய்க் கொண்டிருக்கும் நம்மை திசை திருப்பி சரியான பாதையில் செல்ல வைக்க அங்கே ஒரு மனிதர் — ஒரு வழி காட்டி — தோன்றுகிறார். எங்கிருந்து தோன்றுகிறார், ஏன் தோன்றுகிறார்?

அதற்கும் விடையைப் பெரியவர்களே சொல்கிறார்கள். "சீடன் தயாராக இருக்கும்போது குரு தோன்றுவார்" என்று.

இது எல்லாத் துறைகளுக்கும் பொருந்தும். உங்கள் மனம் தொழில், வியாபாரம், செல்வம் என்று அதிலேயே தோய்ந்து நிற்கும்போது அதற்கான வழிகள் 'சட்'டென்று தோன்றுகின்றன. எந்தத் தேவைக்குமே அப்படி ஒரு வழி பிறக்கிறது.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

எங்கிருந்து இப்படிப்பட்ட உதவி, வழி காட்டுதல், 'ஞானம்', 'தெளிவு' நமக்குக் கிடைக்கிறது?

நம் புலனுக்கு அப்பாற்பட்ட ஒரு மாபெரும் சக்தி — ஒரு மாபெரும் பேரறிவு — எப்போதும் நமக்கு உதவத் தயாராக இருக்கிறது.

இதைச் சரிவர நாம் உணர்வதில்லை; புரிந்து கொள்வதில்லை. ஏதோ தற்செயலாக நிகழ்ந்தது, எதிர் பாராது விளைந்த அதிசயம் என்று எடுத்துக் கொள்கிறோம்.

நமக்கும், மூலம் என்ற பிரபஞ்ச சக்திக்கும் ஒரு தொடர்பு இருக்கிறது என்பதையும், அது சதா நமக்கு உதவக் காத்திருக்கிறது என்பதையும் நாம் உணர்வ தில்லை; புரிந்து கொள்வதில்லை.

சொல்லப்போனால் இந்தப் புலன் ஆகாத உலகைப்பற்றி நாம் சட்டை செய்வதில்லை. நம் கவன மெல்லாம், இந்தப் புலன்களுக்கு, கண், காது, மூக்கு, வாய், உடல் உணர்வு என்ற ஐந்து புலன்களுக்கு ஈடு கொடுக்கின்ற அன்றாட வாழ்விலேயே போய் விடுகிறது. இந்த வெளி உலகம் - பொருள் உலகம் - தரும் வாழ்வுதான் எல்லாம் என்று, அதிலேயே மூழ்கி விடுகிறோம்.

பொருள் உலகம் அவசியம்தான். ஏனெனில் நாம் உடலோடு பிறந்திருக்கிறோம். அதைத் தியாகம் செய்யத் தேவை இல்லை. ஆனால் அதற்கும் மேலாக புலனுக்கு அப்பாற்பட்ட ஒரு உலகம், ஒரு சக்தி இருக்கிறது என்பதை உணராமல் போய்விடுகிறோமே அதுதான் பேதைமை. அது பற்றிய அறிவை வளர்க்காமல் போய்விடுகிறோமே அதுதான் நமக்கு நாமே போட்டுக் கொள்ளும் திரை.

**ம**னமே கேள்வியாக எழுந்ததன் விளைவாக எழுதப்பட்ட சில கட்டுரைகளைத்தான் இங்கே படிக்கப்போகிறீர்கள். வாழ்வின் சூட்சுமம் எங்கே இருக்கிறதென்று தேடினேன். “பாவித்தால் போதும் பரம நிலை எய்துதற்கே” என்று பாடுகிறாரே

பாரதியார். அப்படியானால் 'பாவனை' செய்தால் கற்பனை செய்தால் போதுமா என்று கேட்டு அசந்து போனேன். எண்ணங்களை மனத்தில் சீரமைத்து ஒழுங்குபடுத்திக் கொண்டால் போதும் என்பதைக் கண்டேன்; ஜேம்ஸ் ஆலன் சொன்னார்:

ஒரு கட்டுப்பாட்டில்தான் பிரபஞ்சம் இயங்கு கிறது. எனவே வாழ்வில் சுய கட்டுப்பாடு என்பது தேவை, அது ஒரு நிரந்தர உண்மை என்பதைக் கண்டேன்.

உள்ளுணர்வு நமக்கு எப்படி உதவுகிறது என்பதைத் தெரிந்து கொண்டபோது கடந்த பத்தாண்டுகளில் உள்ளுணர்வை உபயோகித்து பிரச்சினைகளுக்கு முடிவு காணும் முறையை அமெரிக்கப் பல்கலைக்கழகங்கள் சொல்லிக் கொடுப்பதை அறிந்து ஆச்சரியப்பட்டேன்.

காந்தி என்ற பொக்கைவாய்க் கிழவரிடம் ஒரு இனம்புரியாத கவர்ச்சி எப்படி ஏற்பட்டது என்பதை 'கரிஸ்மா' என்ற கட்டுரையில் கண்டுகொள்ள முயன்றேன்.

இவை எல்லாவற்றையும் விட என்னைப் பாதித்த விஷயம் இதுதான். சமீப காலமாக நான் நடத்திக் கொண்டிருக்கும் அன்றாடப் போராட்டம் இதுதான்.

சில நாட்களில், சில சமயங்களில் அதிகாலை யில் சில நூல்களை நான் எடுத்துப் படிக்கும்போது, ஜேம்ஸ் ஆலனின் நூல்கள், பால் பிரண்டனின் புத்தகங்கள், சி.டபிள்யு. லெட்பீட்டரின் குண்டலினி பற்றிய நூல்கள், பாரதியின் கவிதைகள், ரமணரின் விளக்கங்கள், அரவிந்தர் மற்றும் அன்னையின் உரையாடல்கள், உபதேசங்கள், ஸ்ரீ ராமகிருஷ்ணரின்

வாழ்க்கை வரலாறு, தாயுமானவரின் பாடல்கள், சுவாமி சித்பவானந்தரின் ராஜயோக விளக்கம் என்று நான் படிக்கும்போது ஒரு உயர்ந்த உணர்வுக்கு — ஒரு தெய்வீக உணர்வுக்கு — நான் அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறேன்.

பேரின்பநிலையை தியானத்தின் மூலம்தான் அடைய முடியும் என்பது உண்மைதான். அதேபோல குண்டலினியை எழுப்புவதன் மூலமும் இந்த பிரபஞ்ச சக்தியுடன் நாம் ஒன்றாகலாம் என்பதும் உண்மை தான்.

அதேபோன்ற ஒரு பேருணர்வை, ஒரு அற்புதமான மனநிலையை — அதே உயர் நிலையை - இத்தகைய நூல்களும் அளித்தன. அப்படி அந்த நூல்களும் அளிக்க முடியும் என்ற உண்மையை பின்னால் பெரியவர்கள் வாயிலாக அவர்களின் எழுத்துக்களிலிருந்து அறிந்து கொண்டேன்.

நான் ஒரு முயற்சி செய்தேன்.

அதாவது, அந்தப் பேருணர்வு நிலையை, அன்றாட வாழ்வில் தூக்கம் தவிர 24 மணி நேரமும் என்னுள் கொண்டு வர முடியுமா என்று முயன்றேன்.

இப்படி ஒரு பரிசோதனை.

சில நாட்கள் இந்த உணர்வு காலை 11 மணிவரை இருந்தது. சில நாட்கள் மாலை நான்கு மணிவரை இருந்தது. சில நாட்கள் காலை எட்டரை மணி அளவிலேயே அந்த உணர்வு விடை பெற்றுக் கொண்டது.

ஒரு சமயம் யோகி ராம் சுரத் குமார் அவர்களிடம் சென்றேன். அவர் பாதார விந்தங்களைப் பற்றிப் பணிந்தேன். அவர் என் கைகளைப் பற்றிக்

கொண்டார். தடவிக் கொடுத்தார். நம்ப மாட்டீர்கள், அந்தப் பேருணர்வு என்னுடன் சுமார் நான்கு நாட்கள் இருந்தன.

உணர்ந்து கொண்டேன்; இதை நான்தான், எனது பயிற்சி மூலம் — தொடர்ந்த பயிற்சி மூலம் — என்னுடையதாக்கிக் கொள்ள வேண்டும் என்பதை. அதாவது, ஆன்மீக உணர்வுகளை — ஓர் உயர் மன நிலையை — அன்றாட வாழ்வில் இறக்கி வாழ்கின்ற முயற்சி.

ஏன் அது?

அப்போது என்ன நேர்கிறது என்று நீங்கள் கேட்கலாம்.

கோபம் எழுவதில்லை

எதிலும் ஒரு நிதானம்

படபடப்பு, அவசரம் இல்லை.

வார்த்தைகளும் பேச்சும் மெதுவாக, அழகாக வெளிவருகின்றன.

யாரைப் பார்த்தாலும் எதைப் பார்த்தாலும் ஒரு அன்பு.

அமைதி, ஆனந்தம்

மனத்திலே ஒரு தெளிவு

மாபெரும் நிறைவு.

எதுவுமே சிக்கல் இல்லை; தீர்க்க முடியாத பிரச்சினையாக இல்லை.

அடக்கமான நம்பிக்கை கொண்ட மனம்.

மனத்தில் பெரும் மௌன நிலை.

இதில் நான் லயித்துப் போனேன்.

சிலநாள், சில சமயம் மட்டிலுமே.

ஏதோ நான் புதிதாகக் கண்டுபிடித்துவிட்டதாக எண்ணிவிடாதீர்கள்.

முட்டாள்கள் அனுபவம் என்ற பள்ளிக் கூடத்தில்தான் கற்றுக் கொள்கிறார்கள்.

நான் ஒரு மாணவன்.

புத்தரின் எட்டுவழிப்பாதை, அன்றாட உலகில் நம்மை வாழ வைக்க, அவர் கண்ட பேருண்மைகள் ஆகும். அன்றாட வாழ்வும் ஆன்மீகமும் இன்று தனித்தனியாக இருக்கின்றன. ஒன்று சந்தைக்கடை அனுபவமாகவும் மற்றது கோயினுள் ஏற்படும் அனுபவமாகவும் இப்படி இருக்கத் தேவை இல்லை.

இரண்டையும் நாம் இணைக்க வேண்டும். இணைக்க முடியும்.

தன்னைத்தான் அறியும் முயற்சி நம் யோகிகள் காட்டிய வழி. அந்த யோக நிலையை அன்றாட வாழ்வில் இறக்குவதற்கு வழி காட்டுபவர் புத்தர்.

புத்தர் மட்டுமல்ல, சீன ஞானி லாட்சே போன்றவர்கள்.

அதனால்தான் இந்தியர்களைத் தத்துவ விசாரணையில் கடைசிவரை செல்பவர்கள் என்றும், சீனர்களை நடைமுறை வாழ்வில் அதிகம் கவனம் செலுத்தியவர்கள் எனவும் பேராசிரியர் நக்காமுரா எழுதுகிறார். நமக்கு இரண்டும் தேவை — அன்றாட வாழ்வில்.

விஞ்ஞானப் பயிற்சியும், விஞ்ஞான அறிவும் பெற்ற நான், இன்று விஞ்ஞானிகளின் சமீபத்திய ஆராய்ச்சிகளைப் படிக்கிறேன். ஆச்சர்யமாக இருக்கிறது. அவர்களும் நமது ஞானிகள் கண்ட முடிவிற்குத்தான் வருகிறார்கள்.

ஒரே ஒரு வேடிக்கையான வித்தியாசம். மெனக்கெட்டு, பாடுபட்டு, சுற்றி வந்து மூக்கைத் தொடுகிறார்கள்!

**உ**லகின் பேருண்மைகள்

அன்பு

அறிவு

அமைதி

ஆனந்தம் என்பவைதான்.

இவற்றை அன்றாட வாழ்வில் நாம் கைக் கொண்டு வாழமுடியும். இவை பற்றிப் புரிந்துகொள்ள நான் பதஞ்சலியைப் படித்தேன். திருமூலரிடம் தேடினேன்.

சித்தர்களது பாடல்களைப் படித்தேன். ரமணர், அரவிந்தர் என்று தொடர்ந்தேன். எல்லாம் ஓரளவு தான்;

முழுமையாக அல்ல.

எழுந்த எண்ணம், என்னுள் — இதுதான்.

"அடடா! பதஞ்சலி முனிவர் நமது சிதம்பரத்தில் தானா பிறந்தார்? இங்கா நடந்திருக்கிறார்? திருமூலர் என்ற மகான், திருவாடுதுறையிலா பிறந்தார்? இந்த மண்ணிலா, இந்த ஊரிலா நடந்தார்? வெளிநாட்டில் பிறந்த அன்னிபெசண்ட் அம்மையாரும், மேடம் பிளாட்வ்ஸ்கியும், லெட்பீட்டரும், சர் ஜான் உட்ரப்பும் இந்தியாவுக்கா வந்து அடையாற்றிலா ஒரு ஆலயம் அமைத்தார்கள்? வங்காளத்தில் பிறந்த அரவிந்தரும், பிரான்சில் பிறந்த அன்னையும் இந்த பாண்டிச்சேரியிலா அமர்ந்தார்கள்? என்னப்பன், யோகி ராம்சுரத் குமார் கங்கைக்கரையிலே பிறந்து திருவண்ணாமலைக்கா வந்து சேர்ந்தார்?

*ஏ தமிழ் மண்ணே!*

*என் கண்கள் குளமாகின்றன!*

*நான் பாக்கியம் செய்தேன் தமிழ் மண்ணில் பிறக்க. அவர்களின் பாதச்சுவடுகளைக் கண்களில் ஒற்றி நானும் தமிழ் மண்ணில் நடக்கிறேன் என்பதுதான் என் பாக்கியம்.*

சகபயணி

**— எம்.எஸ். உதயமூர்த்தி**

உலகால் அறியப்படாத ரகசியம்

| உள்ளே | இருக்கிறது |
|---|---|

செல்லுங்கள் !

# பொருளடக்கம்

**1**

# உள்ளே இருக்கிறது மனம் எனும் சூட்சுமம்

---

"நீயே அது. நீயே தெய்வம். உனக்குள் இருக்கிறான்; உணர்ந்துகொள்" என்று எளிதாக இரண்டே வார்த்தைகளில் சொல்லி விட்டுப் போயிருக்கிறார்கள் உபநிடதத்தில்.

வயது, மனப்பக்குவம், ஞானம் – இவை இருந்தாலன்றி இதன் ஆழமான அர்த்தத்தைப் புரிந்து கொள்வது கடினம். அப்படி மனப்பக்குவம் பெறும் போதும், எண்ணிப் பார்க்க பார்க்க பல்வேறு பொருள்களையும், பல்வேறு விளக்கங்களையும், பல்வேறு தொடர் சிந்தனைகளையும் கொடுக்கிறது இந்த இரண்டு வார்த்தைகள்.

"நீ எதை எண்ணுகிறாயோ அதுவாக ஆகிறாய்" என்பதுதான் அதன் பொருள். நாம் பொருளைப் பற்றி எண்ணினோமானால் – செல்வம் சேர்ப்பதைப் பற்றி சிந்தித்தோமானால் – பணம் சேர்க்கும் முயற்சிகள் தான் நம்மை விரட்டுகின்றன. 'செக்ஸை'ப் பற்றி எண்ணும் போது காம உணர்வுகள் நம்மை

ஆட்கொண்டு, நம் உடலில் பரவி, அந்த எண்ணங்கள் நமது ஆசைகளைத் தூண்டுகின்றன.

"நான் யார்? ஏன் பிறந்தேன்? ஏன் உலகில் இத்தனை அவலங்கள், கொடுமைகள், துன்பங்கள் என்று புத்தரைப் போல எண்ணும் போது அது சம்பந்தமான விஷயங்கள், உண்மைகள் — புலப்படு கின்றன. துக்கம் தீர்வதற்கான மார்க்கங்கள் புலப்படு கின்றன.

எதைத் தேடுகிறோமோ அது கிடைக்கிறது. தன்னை மறந்து ஒரு பொருளின் தன்மையைப் பற்றித் தன் முழு மனதையும் செலுத்தும் விஞ்ஞானி, அதிலே ஆழ்ந்து அதைப் பற்றிய விஞ்ஞான உண்மைகளைக் கண்டு பிடிக்கிறான். ராகங்களில் தோய்ந்து அதிலே சஞ்சாரம் செய்யும் ஒரு பாடகன் தானே சிருஷ்டித்துக் கொள்ளும் ஒரு தனி உலகில் மிதக்கிறான்.

நான் யார்?

"நான்தான் அந்தப் பொருள். நான்தான் அந்த இசை. நான்தான் விஞ்ஞான உண்மை."

நான்தான் பரமன். நான்தான் பரம்பொருள் என்று, எதை - எதை எல்லாம் நாமாகப் பாவிக் கிறோமோ அதுவாக நாம் மாறுகிறோம். ஒரு பொருளைப் பற்றி தீவிரமாக, ஆழமாக எண்ணும் போது மூலாதாரத்திற்கே நாம் செல்கிறோம். அந்த மூலாதாரத்தை நாம் தொடுகிறோம். மூலாதாரத்தைத் தான் 'நாதப் பிரம்மம்' என்கிறான் இசைக் கலைஞன். அந்த மூலாதாரத்தைத்தான் ஆக்க சக்தி கொண்ட பிரபஞ்ச ஊற்று என்கிறான் எழுத்தாளன். 'அதுதான் உலகின் மாபெரும் சக்தி ஆண்டவன்!' என்கிறார்கள் சமயப் பெரியார்கள். அதையே பிரபஞ்ச சக்தி

என்றும், ஆகாயப் பேரேடு என்றும் விஞ்ஞானிகளும், திரிகால ஞானிகளும் கூறுகிறார்கள்.

ஆனந்த பரவச நிலை பற்றி எண்ணும் யோகிகள் அதைப் பெறுகிறார்கள். அதைச் சமாதி நிலை என்று கூறுகிறார்கள்.

“அருட்பெரும் ஜோதி எங்கும் ஒரே ஒளிமயம். அது அன்பாக - கருணையாக - அருளாக எங்கும் பொங்கி வழிகிறது. என்னைத் தழுவுகிறது. இவ்வுலகை - இப்பிரபஞ்சத்தை அரவணைத்து மகிழ்கிறது” என்று கூறுகிறார்கள். பாடுகிறார்கள் அதைக் கண்டவர்கள்.

நம்மிடம் மனம் என்ற அற்புதமான ஒரு யந்திரம் - ஒரு சாதனம் - ஒரு சூட்சுமம் - ஒரு விசை இருக்கிறது. அதை எப்படி இயக்குவது என்பது நம்மில் பலருக்குத் தெரிவதில்லை. அதை மட்டும் சரியாக இயக்கக் கற்றுக் கொண்டோமானால் சொர்க்கத்தை இப் பூவுலகில் கொண்டு வந்து விடலாம். ஏனெனில் மனம் என்கிற சூட்சுமத்தை உணர்ந்து அதை இயக்கும் போது நாம் எதை விரும்புகிறோமோ அதை அடைய முடியும். ஏனெனில் நமது மனம் என்ற சின்னஞ் சிறிய யந்திரத்திற்கும், இப்பிரபஞ்ச சக்தி என்ற மாபெரும் சக்திக்கும் ஒரு தொடர்பு இருக்கிறது.

இந்த மனம் எனும் யந்திரத்தை இயக்கும் சாவி நம்மிடம்தான் இருக்கிறது. இந்த பூட்டைச் சரியான சாவி போட்டுத் திறக்கும்போது இப்பிரபஞ்சம் நம் முன் விரிகிறது. அங்கே நோயில்லை; மூப்பில்லை; காலமில்லை. இறந்தகால, எதிர்கால நிகழ்ச்சிகளை எல்லாம் இப்போது நடப்பது போல் பார்க்கின்ற ஒரு நிலை. பொருள்களின் தன்மைகளுக்குப் பின்னால் இருக்கும் விஞ்ஞான உண்மைகள் எல்லாம் அவிழ்க்கப்பட்ட நிலை அது.

'நீயே அது!' என்ற மகத்தான உண்மையை யார் கண்டு பிடித்தார்கள்?

காலை எழுந்ததிலிருந்து அன்றாட வாழ்வின் தேவைகள், நெருக்கடிகளுக்கு நாம் ஆளாகிறோம். அதற்கு ஈடு கொடுத்து வாழ்கிறோம். நாம் வாழும் உலகம் - பொருள், உணவு, துணி, மணி, உடல், மனிதர்கள், மரஞ் செடி கொடிகள், காற்று, மழை, கடல், மலை என்று பொருள்களால் நிறைந்த ஒரு உலகம், அதற்கு ஈடு கொடுத்து ஒரு ஜட வாழ்வை, "பிறந்தோம், வாழ்கிறோம், மடிவோம்!" என்று வாழ்ந்து வருகிறோம்.

அதற்கும் மேலாகச் சென்று நம் முன்னோருள் சிலர், "நான் யார்? இப்படி எண்ணுகிறேனே, அந்த எண்ணம் எங்கிருந்து கிளம்புகிறது? நான் உடலா? ஜீவனா? இவ்வுடலில், என்னை, 'நான்' என்று எண்ணு கிற ஜீவன் எங்கிருக்கிறது? அதை அடக்க - அதைத் தொட - அதை ஆராய - அதைக் கட்டுப்படுத்த முடியுமா?" என்றெல்லாம் எண்ணியிருக்கிறார்கள். எண்ணத்தின் மூல இடம்தான் 'நான்'. எல்லா நினைவு களையும், எல்லா உணர்வுகளையும் அந்த மூலத்தில் கொண்டு நிறுத்தும்போது அங்கே 'நானே' எல்லாமாக விரிகின்ற நிலை ஏற்படுகிறது. இப்பிரபஞ்சத்திலுள்ள மாபெரும் சக்திக்கும், எனக்கும் உள்ள தொடர்பு தெரிகிறது. "உலகம், மரஞ் செடி கொடி மனிதர்கள் எல்லாம் செத்து மடிவன; தோன்றி மறைவன; நிரந்தர மற்றவை; ஆகவே மாயை; இந்த புறத்தோற்றம் நிரந்தர மானதல்ல. இந்த புறத்தோற்றத்திற்குப் பின்னால் ஆத்மா இருக்கிறது. அது சர்வ வல்லமை படைத்தது. எல்லாவற்றையும் அது உண்டுபண்ணக் கூடியது. அத்தகைய அற்புதமான ஆத்மாவாக நீ இருக்கும்

...

போது, உன்னைப் பார்த்து நீ பரிதாபப் படுவதென்ன? இயலாமை, இல்லாமை என்று கூறி வருத்தப்படுவ தென்ன? நீயே எல்லாமாக இருக்கிறாய்! மனிதா, உன்னைப் புரிந்துகொள். உன்னை உணர்ந்து கொள்! உன்னிடம் இருக்கும் மாபெரும் சக்தியை வெளிப் படுத்து. பிரபஞ்ச சக்தியுடன் தொடர்பு கொண்டு அதை இப்பூவுலகில் இறக்கு. உனக்கும், பிறருக்குமாக ஒரு தேவலோகத்தை, சொர்க்கத்தை உண்டு பண்ணு!" என்று நம் மனம் நம்மிடம் சொல்கிறது.

இதுதான் உண்மை.

இதுதான் "நீயே அது" என்ற தத்துவம் காட்டும் பாதை; நம்மை அழைத்துச் செல்லும் இடம்.

இப்படி நம் முன்னோர் கண்டுபிடித்ததை ஞானிகள், சித்தர்கள் தெளிவாகவும், சூசகமாகவும், மறைபொருளாகவும் எழுதி வைத்து இருக்கிறார்கள்.

இதை எப்படிப் பெறுவது?

தேடுங்கள், கிடைக்கும்.

தட்டுங்கள், திறக்கப்படும்.

கேளுங்கள், கொடுக்கப்படும்.

என்று ஏசுபிரான் வழி சொல்லிக் கொடுக்கிறார். தேடினால்தான் கிடைக்கும். எதில் கருத்து செலுத்து கிறோமோ அதுவாக நாம் ஆகிறோம்; அது கிடைக் கிறது. இப்படித் தாங்கள் கண்டுபிடித்ததைத்தான் **'தத்துவமசி'** என்று எழுதி வைத்தார்கள் உபநிடதத்தில். தத் என்றால் அது. துவம் என்றால் நீ. அசி என்றால் ஆகிறாய். அதாவது "நீ அது ஆகிறாய்". "நீயே அது" என்பதுதான் பொருள். தத்துவம் என்பதற்கு ஒரு பொருள். முடிந்த முடிவு; எல்லாவற்றிற்கும் பின்னா

லிருக்கும் உண்மை. நீதான் தத்துவம்; நீதான் அது; எல்லாவற்றிற்கும் பின்னாலிருக்கும் உண்மை. நீதான் அது; நீயே அது."

எத்தகைய மாபெரும் உண்மை! எண்ணிப் பாருங்கள்! அந்த எண்ணத்திலே தோய்ந்து நில்லுங்கள்! பிரபஞ்சமாக நாம் விரிவதை உணருங்கள். ஒரு செடியின் இலையைத் தொட்டால் கூட அது நம்முடன் பேசுவதை உணருங்கள். அதற்குள் நாம் இருப்பதை அறியுங்கள்.

காக்கைச் சிறகினிலே நந்தலாலா நின்றன்
கரிய நிறம் தோன்றுதையே நந்தலாலா
தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா – நின்னைத்
தீண்டுமின்பம் தோன்றுதடா நந்தலாலா

என்கிறார் பாரதி.

தீக்குள் விரலை வைக்கிறார். அங்கே அதுவாக மாறுகிறார். அங்கே தீயின் சூடு தெரிவதில்லை. வெளிச்சத்தைக் கொண்டு வருவதில் இன்பம் காண் கிறார். தத்துவங்களை எல்லாம், அதன் பின்புலங் களை எல்லாம் இளவயதிலே புரிந்து கொண்ட கவிதா ஞானி பாரதி.

இந்த உலகில் உங்களுக்கும், எனக்கும் எது முக்கியமென்று எண்ணி, எதை நம் முன்னோருடைய சொத்தாக நமக்கு மொழிபெயர்ப்புச் செய்து தந்து விட்டுப் போயிருக்கிறார் பாரதி?

பகவத் கீதையை.

பதஞ்சலி யோக சூத்திரத்தை.

இவ்விரண்டிலுமே இவ்வுலகம் –இப்பிரபஞ்சம் – மனித வாழ்க்கைக்கு வேண்டிய அறிவு – அனைத்தும் இருக்கிறது. அவை போதும் என்று அவர் எண்ணி

இருக்க வேண்டும். வீரத்திற்கும், ஜீவத்துடிப்பிற்கும் பெயர் போன தேசிய மகாகவி பாரதி; ஆனால் எத்தனை பேர் அதையும் தாண்டி அந்த தத்துவ ஞானியை தரிசித்திருக்கிறார்கள்? மனிதர்களுடைய இயல்புகளை அறிந்தவன் அவன். அதனால் தான் அவர்களைப் பாப்பா பாட்டில் இருந்து அழைத்துச் செல்கிறான் குயில் பாட்டு வரை, பகவத் கீதை வரை; பதஞ்சலி யோக சூத்திரம் வரை. தெரியாமலா சொன்னான் "எனக்கும் முன்னர் சித்தர் பலர் இருந்தாரப்பா, யானும் வந்தேன் ஒரு சித்தனிந்த நாட்டில்" என்று?

பாரதி தத்துவ தரிசனம் செய்து வைக்கிறான். ஹரிஜனையும், பிராமணனாக்கியவனல்லவா அவன்! தத்துவ தரிசனம் பெறுங்கள். புனிதம் பெறுங்கள். அசுத்தங்கள் நீங்கட்டும்! புடம் போட்ட தங்கமாகத் தூய்மையுடன் வெளி வாருங்கள்.

'நீயே அது' என்பதைப் பாரதியார் கூறுகிறார். இன்னும் எளிமையாக, "பாவித்தால் போதும் பரம நிலை எய்துதற்கே!" என்று. பாவித்தால் போதும். பாவனை செய்தால் போதும். கற்பனை செய்து கொண்டால் போதும். இதையே தான் பைபிள் கூறுகிறது "As a man thinketh so is he" எதை மனிதன் எண்ணுகிறானோ அதுவாக அவன் மாறுகிறான் என்று. பிரபஞ்சத்தின் உண்மையை வெவ்வேறு காலத்தில், வெவ்வேறு நாட்டில், வெவ்வேறு மனிதர்கள் கண்டுபிடித்து இருக்கிறார்கள்.

புத்தர் சொல்லி இருக்கிறார், "மனத்தில் தோன்றிய எண்ணம்தான் அந்த மனிதனை உருவாக்கி இருக்கிறது. நமது எண்ணங்கள்தான் நம்மை

உருவாக்கி இன்றைய நிலைக்குக் கொண்டு வந்திருக் கின்றன" என்று.

புத்தரைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அவர் பர உலகைப் பற்றி அதிகம் பேசுபவ ரல்ல. "இவ்வுலகில் பிறந்திருக்கிறோம். உலக உண்மை களை, நியாயங்களைப் புரிந்து கொள். அதற்கேற்ப வாழ்ந்து விடு" என்று பேசும் நடைமுறை உலக மனிதர் – மகான்: யதார்த்தவாதி.

அவரும் வாழ்வைப் பற்றி நிறைய யோசிததிருக் கிறார். ஆகாயப் பேரேட்டைப் படித்திருக்கிறார்; மூலாதாரத்தைத் தொட்டிருக்கிறார். அவருக்குச் சில தெளிவுகள் பிறந்தன. பல உண்மைகள் விளங்கின. தன் உடலை ஒடுக்கி வருத்திப் பார்த்திருக்கிறார். பின் உணர்கிறார் – இவ்வுடல் ஒரு வாய்ப்பு; இவ்வுடலி லுள்ள மூளை மூலம்தான் நாம் சிந்திக்க முடியும். ஆகவே இவ்வுடலைப் பேணு. சரியானபடி வளர்த்துக் கொள் என்ற ஞானம் பெறுகிறார். பிறகு தியானம் செய்கிறார். யோக நிலையில் – எல்லாப் புலன்களை யும் ஒருங்கிணைத்த நிலையில் – மூலாதாரத்துடன் ஐக்கியமாகிறார். "பிரபஞ்ச சக்தி, ஆண்டவன், கடவுள், எல்லாம் ஒரே இயக்கம்" என்ற பேருண்மை கள் புரிந்தாலும் "வாழ்க்கை ஏன்? துக்கம் ஏன்? பிணி ஏன்? மூப்பு ஏன்?" என்ற கேள்விகள் எழுப்பிச் சிந்திக் கிறார். எதைக் கேட்கிறோமோ அதற்கான விடை கிடைக்கிறது. அவருக்கு வாழ்வின் தாத்பரியம் புரிகிறது. "இவ்வுலகில் பிறந்த நாம் என்ன செய்ய வேண்டும்? எப்படி வாழ்வது?" என்பதைக் கற்கண்டு போல நமக்கு எடுத்து வழங்குகிறார்.

அவர் வேறு ஒரு கோணத்தில் இருந்து வாழ்வை அணுகுகிறார். வாழ்வின் பரவச நிலையைத் தடுப்பது

எது? என்று தேடுகிறார். நமது எண்ணங்களும் அதைத் தான் தேடுகின்றன. "இவ்வுலகில் ஏன் இவ்வளவு பிணிகள், துன்பங்கள்? இதிலிருந்து மீள்வது எப்படி?" என்பதைத் தீர்க்கமாகச் சிந்தித்து விட்டு வழி கூறுகிறார்.

"துக்கம் என்றால் என்ன? அதன் காரணம் என்ன? அதைப் போக்கும் வழிகளென்ன? எந்த வழியைக் கடைப் பிடித்தால் துக்கம் போக்கி மகிழ் வுடன் வாழ முடியும்?" என்று கேட்டு விடை தருகிறார். துக்கம் என்பது விளைவு. ஆகவே "இன்றி ருக்கிற சூழ்நிலை ஏற்பட என்ன காரணம்?" என்ற கேள்வியை நாம் எழுப்புவோமானால் நமக்கு விடை கிடைக்கிறது.

"வாழ்வை வெறுத்தொதுக்காதே; வாழ்விலிருந்து தப்பிக்க முயலாதே. இவ்வுலகில் அவதிப்பட வேண்டிய அவசியமில்லை. இந்தக் கோடி, அந்தக் கோடி என்று நீ ஒதுங்காமல் வாழ்வில் ஒரு நடுப் பாதையில் நட. அங்கே எட்டு படிகள் உள்ளன. ஒவ்வொரு படியாக எடுத்து வை காலை. உன் வாழ்வு அற்புதமாக அமையும்" என்று கூறுகிறார்.

இல்லற வாழ்க்கை வாழும் எல்லோரையும் பார்த்து நீயே அது என்ற தாரக மந்திரத்தை எட்டு நிலைகளில் உபயோகியுங்கள். வாழ்வின் எல்லாப் பிரச்சனைகளுக்கும் முடிவுகளைக் காண்பீர்கள் என்று கூறுகிறார்.

அருமையான கண்டுபிடிப்பு.

எளிதான உண்மைகள்.

புரிந்து கொண்டால் ஞானம் வரும்.

கடைப்பிடைத்தால் சூழ்நிலைகளின் கெடுபிடி களிடமிருந்து மீளலாம்.

புத்தர் காட்டும் பாதை என்ன? இதுதான் அந்த எட்டு வழிப் பாதை.

1. சரியாகப் புரிந்து கொள்: வாழ்வையும், உலக இயல்புகளையும், வாழ வேண்டிய நெறிகளையும் புரிந்து கொள்.

2. சரியாக எண்ணு: மனத்தில் தூய்மை இருக் கட்டும். கொடுமையையும், கெட்ட எண்ணத்தையும், ஆசை வெறியையும் அகற்று.

3. சரியானபடி பேசு: சாந்தமாகப் பேசு. பொய் சொல்லாதே. புறஞ் சொல்லாதே. கடுமையான வார்த்தைகளை உபயோகிக்காதே. வம்பு பேசாதே.

4. சரியான செயல்களில் ஈடுபடு: உன் செயல் தூய்மையான செயலாக இருக்கட்டும். துன்பம் கொடுக்காதே, அழிக்காதே. அவர்களது நிதானத் திற்குப் பங்கமேற்படுத்தாதே.

5. சரியான தொழிலைத் தேர்ந்தெடு: நாணய மான தொழிலைச் செய். பிறருக்குக் கேடு செய்யாதே. நியாயமற்றவைகளைச் செய்யாதே.

6. சரியான முயற்சியில் ஈடுபடு: உழைப்பதிலும், முயற்சியிலும் ஈடுபடும்போது கெட்ட எண்ணம் எழாது. நல்லெண்ணங்களை வளர்த்துக் கொள்.

7. சரியான சிந்தனை: மனத்தைப் பற்றி - உடலைப் பற்றி - உன் உணர்வுகளைப் பற்றி - இயற்கையைப் பற்றி - சரியாகச் சிந்தித்துத் தெரிந்து கொள்.

8. சரியான கவனம்: மன சக்தியை ஒன்று திரட்டிக் கருத்தில் செலுத்து. அமைதி பெறுவாய். உள்ளொளி பெறுவாய்.

"நான் யார்? ஏன் வந்தேன்? இவ்வுலகில் எப்படி வாழ வேண்டும்?" என்றெல்லாம் தெரிந்து கொள்ளு முன் நாம் வாழத் துவங்கி விடுகிறோம். வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

பிள்ளைகளை எப்படி வளர்ப்பது என்கிற ஞானம் பெறுமுன் கைகளில் குழந்தைகளை ஏந்திக் கொண்டு இருக்கிறோம்.

மனம் எப்படி இயங்குகிறது என்று தெரிந்து கொள்ளுமுன் அதில் எல்லாக் குப்பைகளையும் கொட்டி வைக்கிறோம்.

ஒரு வெள்ளிக்கிழமை இரவில், ஒரு பெண் ஒரு ஆணுடன் கை கோத்துக் கொண்டு ஓடிக் கொண்டு இருந்தாள். திடீரென்று கூவினாள். ஏய்! உன்னுடைய அறைக்குப் போகுமுன் உன்னுடைய பெயரை நான் தெரிந்து கொள்ளட்டும்! என்றாள். பெயரைக்கூடத் தெரிந்து கொள்ளுமுன்பாக உறவை நாடி ஓடுகிறார்கள்! அவ்வளவு அவசரம்!

இந்த உலகம் முட்டாள்தனமான அவசரத்தில், அறியாமையினால் ஏற்பட்ட அவசரத்தில் ஓடிக் கொண்டிருக்கிறது. நில்லுங்கள் கொஞ்சம்! எப்படி வாழ வேண்டுமென்று புரிந்து கொள்ளுங்கள். அதை முதலில் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுங்கள்.

யாருடைய வாழ்விலும் நேர்ந்திராத புதிய புதிய சோதனைகள் உங்கள் வாழ்வில் ஏற்படும். ஒவ்வோர் சமயமும் இந்த எட்டுப் படியின் அடிப்படைகளை உபயோகியுங்கள். ஆரம்ப காலத்தில், "இது உதவி செய்யாது!" என்று எண்ணுகிற அளவுக்கு அவ

நம்பிக்கை தரும் சந்தர்ப்பங்கள் நேரிடும். தைரியமுடன் நம்பிச் செயல்படுங்கள்.

காலப்போக்கில், இவ்வுலகை இயக்கும் உண்மைகளைப் புரிந்து கொள்வீர்கள். நமது வாழ்வை இயக்கும் தாத்பரியங்களை அறிந்து கொள்வீர்கள். வாழ்வின் தாத்பரியமே 'நல்லெண்ணம்' என்ற ஒரு சொல்லில் அடங்கி இருப்பதாக நான் அறிந்து கொண்டேன்.

இப்பிரபஞ்சம் முழுதும் நிறைந்து கிடக்கும் ஒரு மூலப்பொருள் இருக்கிறதென்றால் - ஒரு ஈர்ப்பு சக்தி இருக்கிறதென்றால் - ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டிருக்கும் வலை இருக்கின்றதென்றால் அதன் பெயர்தான் நல்லெண்ணம். அதன் மறுபெயர் அன்பு. அதற்குக் கட்டுப்பட்டுத்தான் இப்பிரபஞ்சம் இயங்குகிறது. நல்லெண்ணம் என்ற ஒரு சொல்லின் விரிவைத்தான் தேவைக்கேற்ப எட்டு படிக்கட்டுகளாலான பாதையாகக் காட்டி, புத்தர் பிரான் நம்மை அழைத்துச் செல்கிறார்.

புத்தம் சரணம் கச்சாமி.
ஓம் நமசிவாய.
ஓம் நமோ நாராயண.

# 2

# சிந்தனை முறைகளைச் சீரமையுங்கள்

**ஊ**ரில் ஒரு கல்யாணம், அல்லது கார்த்திகை என்று வந்துவிட்டால் எல்லோரும் கூப்பிடுகிற ஒரு நபர் கண்ணப்பனைத்தான். காரணம், மனிதர் அவ்வளவு அருமையான நிர்வாகி. எதையும் நுணுக்க மாகச் செய்வார்; சிறப்பாகச் செய்வார். தசாவதானி போலப் பல விஷயங்களை ஒரே சமயத்தில் கையாளக் கூடிய திறமை படைத்தவர்.

அப்படிப்பட்ட மனிதர் என்ன தொழில் செய்கிறார் என்கிறீர்கள்?

ஒரு கடையிலே கணக்கெழுதுபவராக வாழ்க் கையை ஓட்டிக் கொண்டிருக்கிறார்.

யானைக்குத் தன்பலம் தெரியாது என்பதைப் போல, பலருக்கும் தங்கள் வலிமை எதில் இருக்கிறது என்பது புரிவதில்லை. தங்களைத் தெரிந்து கொள்ள அவர்கள் முயற்சிப்பதில்லை; தங்கள் திறமையைப் பூரணமாக உபயோகிப்பதில்லை.

பேச்சுப் போட்டியிலும், வாதங்களிலும் வல்லமை உடைய இளைஞர் - வழக்கறிஞர்

தொழிலில் பிரகாசித்திருக்க வேண்டியவர் - மாட்டுப் பண்ணையை நிர்வகித்து வருகிறார். எதையும் 'துரு துரு' வென்று ஆராயும் மனோபாவம் கொண்ட இளைஞர் - விஞ்ஞானத்தில் ஆர்வம் கொண்டவர் - சப்-ரிஜிஸ்டிரார் அலுவலகத்தில் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்.

**கையிருப்பு — திறமை — வலிமை**

பார்த்தோமானால் மிகப்பலர் கிடைத்த ஒன்றில் இறங்கி, "ஏதோ ஒரு வேலை - ஏதோ ஒரு தொழில்" என்று வாழ்க்கையை முடிக்கின்றனர். அவர்களது அந்திமக் காலத்தில்தான் "நாம் அதில் இறங்கி யிருக்கலாமோ?" என்கிற ஞானம் ஏற்படுகிறது. இதனால் வாழ்வு தங்களுக்கும், சமுதாயத்திற்கும் பயனின்றி முடிந்து போகிறது.

பக்கத்து வீட்டுக்காரர் மளிகைக் கடை வைத்தார் என்று தானும் வைத்து முதலீட்டை இழந்த வர்கள் ஏராளம். இந்தத் தொழிலை விட்டு விட்டு திடீரென்று வேறு தொழிலில் இறங்கினால் "பிறர் என்ன சொல்வார்களோ - எப்படி விமர்சிப்பார் களோ?" என்று தங்கள் திறமைகளைக் கோட்டை விட்டவர்கள் ஏராளம். தன் கையிருப்பை - தன் திறமைகளை உணராமல் - அவற்றை வெளிக் கொணராமல் - தன்னைப் பூரணமாகக் காட்டிக் கொள்ளாமல் - மாண்டு போனவர்கள் ஏராளம்.

ராமலிங்க அடிகளார் பாடுகிறார்:

தன்னை யறிந்தின்பமுற - வெண்ணிலாவே
ஒரு தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே!

"தன்னை அறிந்தால் தனக்கொரு கேடில்லை" என்கிறார் திருமூலர்.

'தன்னையறிதல்' என்பது தனக்குள்ளே இருக்கும் ஆத்மனை அறிதல் – நமக்குள்ளே ஒரு மாபெருஞ் சக்தி குடிகொண்டிருக்கிறது என்பதை உணர்தல் — என்பார்கள். அது தத்துவ ரீதியான உண்மை. அதுவும் அவசியம்; ஆனால் அன்றாட வாழ்வில் ஈடுபட்டிருக்கும் நாம், வாய், வயிறு, உறவு என்ற ஜீவ தாகங்களை நிறைவேற்ற வேண்டிய நாம், இந்த நிஜ உலகில் வாழ, நமது கையிருப்பு என்ன, நமது திறமை என்ன, நமது உள்ளுணர்வு எதில் நம்மை உந்துகிறது என்றும் புரிந்து கொள்ள வேண்டும். **நம்மைப்** புரிந்து கொள்ள வேண்டும்.

அதனால்தான் மார்ஷா சைனிடார் என்ற ஒரு பெண்மணி இந்த ஒரு மாபெரும் வாழ்க்கை உண்மையை நூலின் தலைப்பாக்கி ஒரு புத்தகம் எழுதி இருக்கிறார்.

"எது உங்களுக்குப் பிடித்த விஷயமோ, தொழிலோ, அதில் ஈடுபடுங்கள். பணம் தானாக வரும்" என்று.

பணம் சம்பாதிக்கும் வாழ்வில், எதில் நிறைய சம்பாதிக்கலாம் என்று பார்க்கிறோமே ஒழிய, எது நமக்குப் பிடித்தது - எதில் நமக்கு ஆர்வம் - என்று பார்ப்பதில்லை. கல்லூரியில் படிக்கும் மாணவன் எந்தப் பாடம் எடுத்தால் உடனடியாக வேலை கிடைக்கும் என்று படிப்பைத் தேர்ந்தெடுக்கிறானே ஒழிய, தனக்குப் பிடித்த பாடம் எது, அறிவியல் துறை எது என்று தேர்ந்தெடுப்பதில்லை.

'இந்த பஸ்ஸில் இடம் இருக்கிறது' என்று இடம் கிடைத்த பஸ்ஸில் ஏறி உட்கார்ந்து நாம் பயணம் செய்வதில்லை. இது சென்னை செல்லுமா அல்லது செங்கோட்டை செல்லுகிற பஸ்ஸா என்று பார்த்துத்

தான் ஏறுகிறோம். அப்படி பஸ்ஸைத் தேர்ந்தெடுக்கும் நாம், நம் வாழ்க்கைப் பயணத்திலோ கிடைத்த வண்டியில் ஏறிக்கொண்டு பயணம் செய்கிறோம்.

ஒரு சிலர்தான், வாழ்வில் சில ஆண்டுகள் ஆனவுடன் நாம் தவறான வண்டியில் ஏறியிருக்கிறோம் என்பதை உணர்ந்து, அதிலிருந்து இறங்கி சரியான வண்டியைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

விகடன் துணை ஆசிரியர் மதன், சென்னை மாநிலக் கல்லூரியில் பௌதிகம் படித்தவர். உள்ளுக்குள்ளே ஓவியம் வரையும் ஆர்வம். எனினும் அவர் ஓர் ஓவியப்பள்ளிக்குச் சென்று பயிற்சி பெற்றதில்லை. படம் போடுவதோ, கார்ட்டூன் போடுவதோ ஒரு மதிக்கத்தகுந்த, நல்ல வருவாயைக் கொடுக்கக்கூடிய தொழிலாக இல்லாதிருந்த கால கட்டம். எனினும் மதன் விகடனில் கார்டூனிஸ்டாக சேர்ந்தார். இன்று அகில உலகிலும், விஷயம் தெரிந்தவர்கள் போற்றும் மனிதராக திகழ்கிறார்.

## உள்ளுணர்வு

நமக்குள்ளே ஒரு மகத்தான சக்தி இருக்கிறது. அதற்குப் பெயர் உள்ளுணர்வு. அந்த உள்ளுணர்வு பல விஷயங்களை நமக்குத் தெரிவிக்கிறது. செல்ல வேண்டிய திசையைக் காட்டும் அடையாளங்களாகச் சில சமயம் வாழ்வில் சில அறிகுறிகள் – சகுனங்கள் – தென்படுகின்றன. சில சமயம், நம் உணர்வு நம்மை உந்தி நம்மைச் சில திசைகளில் கொண்டு தள்ளுகிறது. சில சமயம் நம் தலைக்குள் யாரோ பேசுவது போன்ற குரல் கேட்டுக்கொண்டே இருக்கிறது – “இங்கே போ, இப்படிச் செய்” என்று வழி காட்டுதலாக.

சில சமயம் அடிவயிற்றிலிருந்து ஓர் உணர்வு எழுகிறது "இப்படிச் செய்யாதே" என்று. நாம் புரிந்து கொள்வதில்லை. அதற்கு மதிப்புக் கொடுக்காமல் தர்க்கவாத உலகின் அறிவால் ஈர்க்கப்பட்டு நாம் மாறுபட்ட காரியத்தைச் செய்யத் துவங்கி மாட்டிக் கொள்கிறோம்.

நம்மை வழிகாட்டி நடத்திச் செல்லும் மனிதன் நம்முள்ளேதான் இருக்கிறான்! அவனுக்கு மூலம் எனப்படும் ஒரு மாபெரும் புலனாகாப் பெருஞ்சக்தி யுடன் தொடர்பு உண்டு. அந்த உள் மனிதனை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்; புரிந்து கொள்ள வேண்டும்; வாழ்வில் பயன்படுத்த வேண்டும். நாமோ தீர்வுகளுக்காக வெளியிலே தேடுகிற அளவுக்கு உள்ளே தேடுவதில்லை.

### அனுபவப் பள்ளிக்கூடம்

காசு, பணம், சம்பளம் என்று ஏதும் பெறாமல் பொதுத் தொண்டு மட்டுமே செய்யும் ஒரு நிறுவனத்தில் வந்து சேர்ந்தார் ஒரு மனிதர், நிர்வாகி என்ற பெயரில். அவருடைய இயல்போ அதிகாரம். 'தான்' என்ற ஆணவம். 'உலகையே உடனடியாகப் புரட்டி விடலாம்' என்ற மனோபாவம். மனித உறவு களாலும், இனிமையான அரவணைப்பாலும் வளர்ந்து வந்த அமைப்பு இவர் கையில் சின்னா பின்னப்பட்டுக் கொண்டிருந்தது. அந்தப் புதிய மனிதர் தன் கையிருப்பை உணர்ந்து கொள்ளவில்லை. அந்த அமைப்பின் கையிருப்பை — அதன் நீரோட்டத்தை — உணர்ந்து கொள்ளவில்லை.

சொந்த அனுபவம் என்கிற பள்ளிக்கூடத்தில் தான் மூடர்கள் கற்றுக் கொள்கிறார்கள். புத்தி

சாலியோ பிறருடைய அறிவுரையிலிருந்தும், அனுபவத்தில் இருந்தும் தன் வாழ்வைத் திருத்திக் கொள்கிறான்.

கிராமத்தில் பிறந்த என் நண்பர், பரஞ்சோதி பெரிய மனிதராக வாழ்வில் உயர்ந்தவர். அவருடைய அண்ணன் கிராமத்திலே பிறந்த மனிதர், தன் தம்பிக்கு எழுதினார், 'தம்பி! உலகில் சரியான நேரம் எது என்று எல்லோரும் லண்டனிலுள்ள 'கிரீன்விச்' நேரத்தைப் பார்த்துத் தங்கள் கடிகாரத்தைச் சரி செய்து கொள்கிறார்கள். அதுபோல நீ பல பெரிய மனிதர்களுடைய வாழ்க்கையைப் பார்த்துப் பார்த்து உன் வாழ்க்கையைச் சரி செய்து கொண்டிருக்கிறாய்" என்று.

## சிந்தனையைச் சீரமையுங்கள்

சொல்லப்போனால், ஒரு காரியத்தைச் செய்வதற்கு முன்போ, ஒரு காரியம் நிகழ்ந்த பின்னோ, அதைப்பற்றி ஆராய்வதில்லை. ஒரு காரியத்தின் வெற்றிக்கோ தோல்விக்கோ காரணமாய் இருந்த உள் உண்மையை உணர்ந்து கொள்வதில்லை. அறிவும் அனுபவமும் வெளி உலகிலிருந்து பெறுகிறோம். ஆனாலும் உள் நோக்கி அந்த அறிவையும் அனுபவத்தையும் தீரப் பரிசீலிப்பதன் மூலமே வாழ்க்கைக்கு, அதன் பாடத்தை, நாம் உபயோகித்துக் கொள்ள முடியும்.

சாதனை, செயல் எல்லாம் சிந்தனையில், மனித மனத்தில் தோன்றும் எண்ணங்களில்தான் தோன்றுகிறது. நம்மிடமுள்ள பழக்க வழக்கங்கள் எல்லாம் – நம்முடைய குணங்கள் எல்லாவற்றிற்கும் காரணம் நமது சிந்தனைகள்தான் – எண்ணங்கள் தான்.

வெளி உலகில் நமக்கு நேரும் தோல்வியையும் துன்பங்களையும் கண்டு மனம் பதைக்கும். நாம் அதன் மூல காரணமென்ன என்று பின்னோக்கிச் சென்று அதன் எண்ண மூலத்தை உணர்வதில்லை. விளைவு களின் காரணம் நமது செயல்கள்தான். நமது செயல் களின் காரணம் நமது நம்பிக்கைகள்தான். நமது நம்பிக்கைகளின் மூலகாரணம் நம் மனத்தில் கொண் டிருந்த எண்ணங்கள்தான். எனவே நமது வாழ்வில் நிகழும் விளைவுகள் வேறுவிதமாக இருக்க வேண்டு மானால் என்ன செய்ய வேண்டும்? எண்ணங்களைச் சீரமைத்துக் கொள்ள வேண்டும். தீய விளைவுகளோ, நமக்குப் பிடிக்காத விஷயங்களோ, நமது தொழில் நஷ்டங்களோ, நம் தோல்விகளோ எதை நிரூபிக் கின்றன?

நாம் கொண்டிருந்த எண்ணங்கள் சரியில்லை என்பதைத்தான், — நமது கட்டட அமைப்பின் 'டிசைன்' சரியில்லை என்பதைத்தான் — அது காட்டு கிறது. நாம் எண்ணங்கள் என்ற 'புளூ பிரிண்டை' (Blue Print) மீண்டும் மாற்றிப் புதிய வரைபடம் போட வேண்டும். இப்படித்தான் சொல்கிறார் ஞானகுரு ஜேம்ஸ் ஆலன்.

அதனால்தான் சொல்கிறார்கள், இன்றைய தொழில் கல்வி போதிக்கும் பேராசிரியர்கள்: "ஒரு நிறுவனம் நஷ்டத்தில் ஓடிக்கொண்டிருந்தால், அல்லது தேக்க நிலையை அடைந்தால், அங்கே உள்ள அமைப்புகளை மாற்றி அமைக்க வேண்டும் - அங்கே உள்ள மனிதர்களை இடமாற்றம் செய்ய வேண்டும்" என்று பேசுகிறார்கள். "நிர்வாகம், தனது எண்ணங் களை முதலில் மாற்றிச் சீரமைக்க வேண்டும் என்ற

அடிப்படையை மறந்து விடுகிறார்கள்" என்று எழுது கிறார்கள்.

"போட்டியாளர்கள் ஒரு தரமான ஒரு புதிய பொருளை விற்க முன் வந்தால் அதுபற்றிக் கவலைப் படும் நிர்வாகிகள் அதன் மூல காரணங்களை அறிய, அதை நிரந்தரமாகக் கிள்ளி எறிய தங்களது சிந்தனை முறையை வலுப்படுத்திக் கொள்வதில்லை; கவனம் செலுத்துவதில்லை" என்று கூறுகிறார்கள்.

ஒரு நாட்டில் ஆகட்டும், ஒரு நிறுவனத்தில் ஆகட்டும், எங்கும் தேவையான அடிப்படைப் பொருட்கள் இருக்கின்றன. அதாவது மனிதர்கள், கச்சாப் பொருட்கள், உழைப்பு, அதன் விளைவாக வருமானம் என்று எல்லாம் இருக்கின்றன.

நிர்வாகிகளுக்கு - நாட்டுத் தலைவர்களுக்கு - எதற்காகச் சம்பளம் கொடுக்கப்படுகிறது? தங்களிட முள்ள கச்சாப் பொருள்களையும், மனிதர்களையும், மூலதனத்தையும் எப்படிப் பயனுள்ள முறையில் பயன்படுத்தினால் அதிக லாபம் நன்மை பெற முடியும் என்று சிந்திப்பதற்காகத்தான் சம்பளம் கொடுக்கப்படுகிறது. சரியான சிந்தனை - சரியான யோசனை - சரியான எண்ணம் மட்டும் இருந்து விட்டால் அதற்குப் பிறகு திட்டம், செயல், உழைப்பு என்பனவெல்லாம் தானே தொடரும். செயல்புரிவ தில் தீவிரம் காட்டும் பலர், செயலுக்கு மூலகாரண மான சிந்தனை சரியாக இருக்கிறதா என்று யோசித்துப் பார்ப்பதில்லை; சிந்திக்க நேரம் எடுத்துக் கொள்வதில்லை.

சிந்தனையிலே பல்வேறு கோணங்கள் இருக் கின்றன. ஒரு கச்சாப் பொருளை வாசனைத் தைலத் திற்கு வாங்குகிறோம் என்றால், அதன் நிறம், மணம்,

அதன் அடர்த்தி, அதன் நச்சுத் தன்மை, அதன் விலை, மக்கள் அந்த வாசனையை விரும்புவார்களா என்கிற விஷயம் - என அதைப் பல்வேறு கோணங்களிலே ஆராய்கிறோம்.

அதேபோல நமது எண்ணங்களையும் எண்ண அமைப்பு முறையையும் -

அது நல்ல, தோதான, பொருத்தமான புதிய யுக்தியா?

பிரச்னையைத் தீர்க்குமா?

நல்ல முடிவுள்ளதா?

தோல்வி ஏற்பட வாய்ப்பிருந்தாலும் பெரும் பாலும் வெற்றி தரும் திட்டம் தானா?

தொலை நோக்கில் நல்ல பலன் தருமா என்று பல்வேறு கோணங்களில் நாம் ஆராய வேண்டும்.

அப்படி ஆராய்ந்து நிதானமாக ஒரு முடிவுக்கு வர வேண்டும்.

எனது பம்பாய் நண்பர் ஒருவர் தன்னைப் பற்றிச் சொன்னார்: "நான் ஒரு விஷயத்தை எடுத்துக் கொண்டேனானால், பல நாள் — பல மாதங்கள் — அதைப் பற்றிச் சிந்தித்து கொண்டிருப்பேன். பார்ப்ப தற்கு நான் வேலை ஏதும் செய்யாதது போலத் தோன்றும். என் மனத்தில் தீவிரமாகச் சிந்தித்து- சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்து விட்டேனானால் உடனடியாகச் செயல்பட ஆரம்பித்து விடுவேன். விரைவில் காரியம் முடிந்துவிடும்" என்று.

என் மனத்தைவிட்டு அகலாத சம்பவம் அவர் சொன்ன வார்த்தைகள்.

## "கெய்சன்" – தொடர்ந்த முன்னேற்றம்

அத்துடன் ஒன்றே ஒன்றைச் சேர்த்துக் கொள்ளுங்கள். ஜப்பானியர்கள் இன்றைய நிர்வாக அறிவில் ஒரு புதிய சொல்லைச் சேர்த்திருக்கிறார்கள். அதன் பெயர் 'கெய்சன்' (Kaizen) என்பதாகும். அதன் பொருள் "தொடர்ந்த கண்காணிப்பு; தொடர்ந்த முன்னேற்றம்".

நமது சிந்தனையின் விளைவுகளைத் தொடர்ந்து கண்காணித்துக் கொண்டிருக்க வேண்டும். விளைவு கள் நாம் எதிர்பார்த்த பாதையிலிருந்து கீழே இறங்கு மானால் மீண்டும் எண்ணங்களைச் சீரமைத்துத் திருத்த முயல வேண்டும். எண்ணங்களையும் விளைவு களையும் கண் காணிக்க வேண்டும். அப்போதுதான் வெற்றி – முன்னேற்றம் – தொடர்ந்து ஏற்படும்.

நமது நாட்டின் தேக்கத்திற்கு மூல காரணம் என்ன என்று யோசியுங்கள்.

எது முக்கியம் (Priority) என்பவை முதலாவதாக எடுத்துக் கொள்ப்பட்டிருக்கிறதா என்று யோசி யுங்கள். 65 சத மக்கள் விவசாயத்தை நம்பி வாழும் போது அவர்கள் வாழ்வில் முன்னேற்றம் காண வழி வகுத்தோமானால்தான் நாட்டில் பொருளாதார முன்னேற்றம் பரவலாக ஏற்படும். செய்தோமா என்று சிந்தியுங்கள்.

அல்லது முக்கியமல்லாத விஷயங்களில், மதம், மொழி, சாதி என்று கவனம் இறங்கிவிட்டதா என்பதையும் யோசியுங்கள்.

அடுத்து, திட்டமும் வளர்ச்சியும் தொடர்ந்து கண்காணிக்கப்படுகிறதா என்று பாருங்கள். அரசியல் கூடிவாளங்களான, நீதிமன்றம், சட்டசபை, அரசாங்க

இயந்திரம், பத்திரிகைகள் என்ற நான்கும் தொடர்ந்து அரசியல் தலைமையைக் கண்காணித்துச் சுதந்திர மாக இயங்குகின்றனவா அல்லது ஆட்சியாளர் களைச் சார்ந்து நிற்கின்றனவா என்று யோசியுங்கள்.

தொடர்ந்த முன்னேற்றத்திற்கு வழி தொடர்ந்த கண்காணிப்பு; அடிப்படையில் எது முக்கியம், எது தேவை என்ற தெளிவு; தன் திறமைகளையும் வாய்ப்புக்களையும் - தன் கையிருப்புகளை - முழுமை யாக உபயோகிக்கும் புத்திசாலித்தனம்; இதுதான் தேவை — ஒரு நிறுவனத்திற்கும் சரி; நாட்டுக்கும் சரி!

# 3

# தன் மதிப்பைத் தரும் மனச்சாட்சி

அங்கே யாருமில்லை சாட்சியாக
மனம்தான் கேள்வியாக
எனக்குள்ளே ஒருவன் நீதி தேவன்
கூண்டிலேற்றினான் குற்றவாளியாக

மனச்சாட்சி! ஏதோ இன்றைய நாவல் ஒன்றின் தலைப்புப்போலத் தோன்றுகிறது. இப்படிப்பட்ட தலைப்பைக் கூட இப்போது யாரும் அதிகம் உபயோகிப்பதில்லை. ஒழுக்கம், நாணயம், நேர்மை, உண்மை என்பதெல்லாம் பழங்காலத்து வார்த்தைகளாகப் போய்விட்டன. அதிலே ஏதும் சத்தில்லை. 'எதையும் உனது சௌகரியம் போல் செய். எதற்கும் சமாதானம், நியாயம் சொல்லிக் கொள்ளலாம்' என்று போகும் இன்றைய உலகில், சில மனவியல் அறிஞர்கள் நிரூபித்திருக்கிறார்கள். "நோயில்லாமல் வாழ வேண்டுமானால் - தூக்கம் இழக்காமல் இரத்த அழுத்தமின்றி வாழ வேண்டுமானால் - நிம்மதியாக, மகிழ்வுடன் வாழ வேண்டுமானால் - மதியுங்கள் உங்களை. நேர்மை நியாயத்திற்குக் கட்டுப்பட்டு வாழுங்கள். சில அடிப்படை உண்மைகளுக்கும், நோய்க்கும் நேர் உறவு இருக்கிறது, அதைப் புரிந்து

கொள்ளுங்கள். இதுதான் சரியான வழி. இவற்றுக்குத் துரோகம் செய்வோமானால் தன் மதிப்பு - சுய கௌரவம் - போய் விடும். எல்லாவிதங்களிலும் வாழ்க்கை பாழடையும்."

மனவியல் அறிஞர்கள் மட்டும் சமீபத்தில் இந்தப் புதிய கண்டுபிடிப்பை வெளியிடவில்லை. கடந்த சில ஆண்டுகளாக அமெரிக்காவின் தலை சிறந்த தொழில் நிர்வாகப் பயிற்சிப் பள்ளியான ஹார்வர்டுப் பல்கலைக்கழகத்திலும் கூட. ஒரு பேராசிரியர் எழுதினார்:

"சில, சில நேர்மைக்குறைவுகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தால், நாம் தொழிலில் முன்னேற முடியாது. தொழில் செய்பவர்கள் முன்னேற்றம் ஒன்றில்தான் குறியாக இருக்க வேண்டும்" என்று. மிகப் பிரபலமான 'வால்ஸ்டீரீட் ஜர்னல்' என்ற பொருளாதாரத் தினசரிப் பத்திரிகை யில் எழுதினார்.

எழுந்தது புரட்சி!

"இப்படி நேர்மை இல்லாமல் தொழில் செய்ய லாம் என்று கற்றுக்கொள்ளத்தானா ஹார்வர்டுக்கு அனுப்புகிறோம்?" என்று பொங்கி எழுந்தார்கள் பெற்றோர்கள். "நீங்கள் அமெரிக்காவின் தொழில் பாரம்பரியத்தையே அவமதிக்கிறீர்கள்!" என்று சீறினார்கள் தொழிலதிபர்கள். ஹார்வர்டுப் பல்கலைக் கழகத் தலைவர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்!

நிர்வாகத் துறையில் இன்று அதிகமான அளவுக்குப் பயிற்சி தரப்படும் ஒரு பாடம் இருக்கு மானால் அது தொழிலில் நாணயம், நேர்மை (Ethics) என்பதுதான்.

பல உண்மைகள், காலத்துக்குக் காலம், மீண்டும் கண்டுபிடிக்கப்பட வேண்டி இருக்கின்றன. அப்படி மீண்டும் கண்டு பிடிக்கப்பட்ட உண்மைகள் தான் ஒழுக்கம், நேர்மை, உண்மை, நியாயம், சொல்லப் போனால் 'பஞ்ச சீலங்கள்' என்பன. எண்ணிப் பார்த்தால், புத்தர் காட்டிய நன்னோக்கம், நன்முயற்சி, நற்செயல் என்ற எட்டுப்படிப் பாதைதான் அது.

டாக்டர் விநாயகத்திற்கு இன்றைக்கெல்லாம் வயது இருபத்தெட்டு இருந்தால் பெரிய காரியம். நல்ல துடிப்பான இளைஞர். களையான முகம், தொழிலில் மிக்க ஈடுபாடு, அவர்களுடைய அலுவலகத்திலே சில பிரச்னைகள்.

சம்பளம் போதவில்லை. நிர்வாகம் சரியில்லை. அவருடன் வேலை பார்க்கும் சில பெண் நர்ஸ்கள்; இவர்கள் தரும் பிரச்னைகளால் அவரால் தூங்க முடியவில்லை. இரவில் திடீரென்று எழுந்து விடுகிறார்; தவிப்பு, கோபம், நெருக்கடி என்று. அன்றாட வேலைகளில் இதனால் பாதிப்பு.

சென்றார் மனவியல் அறிஞர் பரஞ்சோதியிடம். "இந்த இடம் எனக்குப் பிடிக்கவில்லை" என்றார். பிறகு தம் தகுதிக்கேற்ற சம்பளம் கொடுக்காதது ஒரு கோபம், அவமானம், என்றார்.

பிறகு சொன்னார்: "ஒரு நர்ஸ் இருக்கிறார். திருமணம் ஆகப் போகிறவர். நல்ல குணம். வேலையில் நாங்கள் நெருங்கிப் பழக வேண்டி இருக்கிறது. எனினும் உரிமையோடு பெயர் சொல்லிக் கூப்பிடுவோம். இரவு டியூட்டியில் பேச வேறு நபர் இல்லாததால், சினிமாவிலிருந்து தத்துவம் வரை எல்லா விஷயங்களையும் பேசுவோம். ஒரு நாள் கை பட்டு

விட்டது. பேசாமல் இருந்தாள். மறுநாள் குனிந்த போது தலை முட்டிக் கொண்டது. சிரித்தாள். இன்று நெருங்கிப் பழகுகிறோம். தவறியும் உடலுறவு கொண்டதில்லை. அவள் தன் கணவனாகப் போகு பவனுக்கு உண்மையுடன் இருக்கிறாள். அவனை மதிக் கிறாள். இருந்தும் என்னைத் தொடவும், முத்தமிடவும், வேடிக்கை செய்யவும் அனுமதிக்கிறாள். இருந்தும் ஒரு நாளும் நாங்கள் தவறு செய்ததில்லை" என்றார்.

"இது நியாயம் என்று படுகிறதா?"

"அன்புடன் பழகுகிறோம். எதையும் மீற வில்லை."

"எதில் கொண்டுவிடும் என்று தெரியுமல்லவா?"

"நான் கட்டுப்பாடு மிகுந்தவன்."

"உங்கள் ஆழ்மனத்தில் போராட்டம் நடக்கிறது."

"நான் அவளைக் காணும்போதும் பழகும் போதும் சரி, அவள் இல்லாதபோதும் சரி சந்தோஷ மாக இருக்கிறேன்."

"ஆசிரியர்களும் டாக்டர்களும் மாணவி களுடனும், நர்ஸ்களுடனும் பழகும்போது அவர் களுக்கு ஒரு 'மேல் அந்தஸ்து' இருக்கிறது. இது பதவி தரும் கவர்ச்சி. அறிவும் படிப்பும் கொடுக்கும் அந்தஸ்து. இதில் பெண்களுக்கு மயக்கம் ஏற்படுவது சகஜம்!"

"நான் தவறு செய்யவில்லை. அவளும் தவறு செய்பவளல்ல" என்று கோபித்துக் கொண்டு போய் விட்டார் விநாயகம்.

'அவரால் முன்போல எல்லாருடனும் சகஜ மாகப் பழக முடியவில்லை. அதனால்தான் வந்தார்' என அறிந்து கொண்டார் பரஞ்சோதி.

மீண்டும் ஒரு நாள் டாக்டர் விநாயகம் வந்து, "எனக்குப் படபடப்புக்கு மருந்து கொடுங்கள். தூக்க மருந்தும் சாப்பிடலாம் என்று எண்ணுகிறேன்" என்றார்.

'விளைவுகளைக் கற்பனை செய்து பாருங்கள். நாளைக்கு மருத்துவமனையில் இதுபற்றி கிசுகிசு பேசப்படுகிறது என்றால் உங்கள் கௌரவம், தொழில், பதவி என்னாகும்? நாளைக்கு அவளுக்குக் கணவனாக வரப்போகிறவன் உங்களைச் சந்தித்துச் சந்தேகக் கணைகளைத் தொடுப்பானானால், தலைக்குனிவு யாருக்கு? நீங்கள்தானே உயர் பதவியில் இருக்கிறீர்கள்! 'மனைவி சோரம் போனாள்' என்று கருதும் கணவன், மனைவியிடம் காட்டும் கோபத்தை விட இதற்குக் காரணமானவன் மீதுதான் தன் பழியைத் தீர்த்துக்கொள்ள முயல்வான். நீங்கள் வேறு ஊருக்கு மாற்றல் பெறுங்கள். அல்லது அவளை வேறு ஊருக்கு மாற்றல் பெறச் சொல்லுங்கள்."

டாக்டர் விநாயகம் திரும்பிப் போனார். யோசித்தார். அந்தப் பெண்ணுடன் பேசி அவர்கள் செல்லும் பாதை தவறு என்ற முடிவுக்கு வந்தார்கள். அவள் மாற்றல் வாங்கிக் கொண்டு போனாள்.

விநாயகம் சொன்னார்: "ஒழுக்கம், நியாயம், உரிமைகள் இவற்றிற்கெல்லாம் நான் சமாதானம் செய்து கொண்டேன். இதன் விளைவாக உள்ளமும் உடலும் பாதிக்கப்பட்டன. காரணத்தை நான் உணர வில்லை; உணரப் பிரியப்படவில்லை.

"இன்று அவள் சேலத்தில் இல்லை, தர்மபுரியில் இருக்கிறாள். இப்போது என்னைப் பற்றி நான் பெருமைப்படுகிறேன். தலை நிமிர்ந்து நடக்கிறேன். வரப்போகிற அவள் கணவனுடன் நண்பனாகப்

பழகுகிறேன். எனது தவிப்பும் பயமும், தூக்கமின்மையும் போய்விட்டன.”

வாழ்வதற்குச் சில விதிமுறைகள் – மாத்திரைகள் – தேவை. தன் மதிப்பை இழந்து வாழ்பவனை அவன் மனச்சாட்சி விடுவதில்லை. அவன் உள்ளத்திலும் உடலிலும், சூழ்நிலையிலும் மாறுதல்கள் உண்டு பண்ணுகின்றன. அவன் கஷ்டப்படுகிறான். ‘எது நியாயம்? எது நியாயமில்லை’ என்பது நமக்குத் தெரிகிறது. தெரிந்தும் நாம் சுயநலத்திற்காக, சமாதானம் செய்து கொள்கிறோம். நம்மை நாமே ஏமாற்றுகிறோம். நமக்குள்ளே ஒரு மனிதன் இருக்கிறான். அவன் சங்கடப்படுகிறான்; நிம்மதி இழக்கிறான். விளைவுகளை அனுபவிக்கிறான். **மன அமைதிக்கும் ஆனந்தத்துக்கும் உள் மனிதனைப் போல உதவக்கூடியவர்கள் யாருமில்லை.** ‘நீதி, நேர்மை, ஒழுக்கம்’ எல்லாம் வெறும் வார்த்தைகளல்ல. வாழ்க்கைத் தத்துவங்கள்; வாழும் வழிகள்!

ஆழமாகப் பார்த்தோமானால், இன்றைய உலகம் அடிப்படை உண்மைகளை இழந்து, ‘இழப்பதனால் நஷ்டமில்லை’ என்கிற நோக்கில் நடந்து கொண்டிருப்பதாகப் படுகிறது.

இன்றைய அரசியல் பிரமுகர்கள் சிலரைச் சந்தித்தேன். “தவறு செய்பவர்கள், தங்கள் வாழ்க்கையைச் சீர்குலைத்துக் கொள்கிறார்களே! நீதி மன்றத்தில் பதில் சொல்ல நேரிடாவிட்டாலும், என்றாவது இதற்கு ஒரு விலை கொடுத்துத்தானே ஆக வேண்டும்? தர்ம நியாயங்கள் சும்மா விடுமா?” என்று கேட்டபோது ஒருவர் சொன்னார்.

“ஐயா! நீங்கள் சொல்வது உண்மைதான். அனுபவிக்கிற வரையில் அனுபவிப்போம். பின்னால்

இதற்காகக் கஷ்டம் அனுபவிக்க வேண்டி இருந்தாலும் பரவாயில்லை. இப்படிப்பட்ட வாய்ப்பு இனி கிடைக்காது என்றுதான் எல்லாரும் சமாதானம் சொல்லிக் கொண்டு ஈடுபடுகிறார்கள்” என்றார்.

தெரிந்தும் தவறு செய்பவர்களிடம் என்ன சொல்ல முடியும்?

**ம**ற்றொரு பேராசிரியர் என்னை மடக்கினார்.

“நீதி நியாயம் என்கிறீர்களே! எஸ்கிமோ சமுதாயத்தில் ஒரு காலத்தில் ஒரு பழக்கம் உண்டாம். விருந்தினர்களை உபசரிக்க இரவில் மனைவியை அனுப்புவார்களாம்.

“ஒரு காலத்தில் திரௌபதிக்கு ஐந்து கணவர்கள் இருந்தார்கள். இதில் தவறு என்பது எங்கிருக்கிறது? இதை எல்லாம் நாம் எப்படி எடுத்துக் கொள்கிறோம் என்பதைப் பொறுத்துத்தான் இருக்கிறது நியாயம், அநியாயம் எல்லாம்” என்றார்.

“அந்த - அந்தக் காலத்துக்கு அந்த - அந்தச் சமுதாயத்தில் சில மரபுகள் கடைப்பிடிக்கப்பட்டிருக்கின்றன. அதை மீறும்போது அது தவறு. ஏனெனில் நாம் அப்போது பிறர் உரிமைகளில் தலையிடுகிறோம்” என்றேன்.

நாம் நன்றாகச் சிந்திக்க வேண்டும். இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள கோள்களும், நட்சத்திரங்களும் தனித்தும் இணைந்தும் இயங்குகின்றன. எல்லாவற்றிற்கும் ஒரு வரம்பு, எல்லை, ஒரு உரிமை இருக்கிறது. அந்த வரம்பு மீறப்படும்போது, பிரபஞ்ச லயம் தவறிவிடுகிறது. பிரபஞ்ச லயம் தவறும்போது அதன் விளைவுகளை அது அநுபவிக்கிறது. அதே நிலைதான் மனித வாழ்விலும்.

"எங்கே வரம்பை மீறினோம் — பிரபஞ்ச லயத்தைத் தவற விட்டோம் — என்று நமக்குப் புரிவதில்லை. காரணம், மனிதன் சுயநலம் காரணமாக நியாயம் - அநியாயம் எல்லாவற்றிற்கும் சமாதானம் செய்து கொள்கிறான். அப்படிப்பட்ட நிலையில் விளைவுகளின் கொடுமையிலிருந்து, தான் 'எங்கே தவறு செய்திருக்கிறோம்' என்று மனிதன் உணர முடியும். ஏனெனில் காரணம் இல்லாமல் காரியம் நிகழ்வதில்லை. இது காரண - காரிய உலகம் (Cause and effect). இப்படி விளைவுகள் எல்லாம் பரிசீலித்துத் தான் நம் முன்னோர்கள் 'பஞ்சமா பாதகங்கள்' என்று வைத்திருக்கிறார்கள். நாம் இதை மீண்டும் பரிசோதிக்க வேண்டியதில்லை" என்றேன்.

நாம் நன்றாக யோசித்துப் பார்க்க வேண்டிய விஷயம் இதுதான்.

"எது எனக்கு மனநிறைவு தருகிறது?" என்கிற கேள்வி தான். எது எனக்குப் பெருமை தருகிறது, நிம்மதி தருகிறது, மகிழ்வு தருகிறது, உறுதி தருகிறது?

எனது நாணயம், நேர்மை, உண்மை, ஒழுக்கம், 'நான் இப்படிப்பட்டவன்' என்ற பெருமை. 'இது எனது பாரம்பரியம்' என்ற பெருமை.

'என் பிறப்பு இப்படி. நான் இதைச் செய்யலாமா?' என்ற தன்மதிப்பு.

'நான் வளர்க்கப்பட்டது இப்படி. நான் இப்படிப் போவேனா? பேசுவேனா? நடப்பேனா? நடக்கலாமா?' என்ற தன்மானம்.

'எது சரி, எது நியாயம்?' என்ற விவேகம் நமக்கு வாழ்வில் வேண்டும். அந்த வித்தியாசத்தைப் புரிந்து கொள்ளும புத்திசாலித்தனமும், மனப்பக்குவமும்

வேண்டும். தவற்றைத் தர்க்கரீதியாக நியாயப்படுத்தலாம். தர்க்கவாதத்திற்கு மேல் உண்மை நிற்கிறது; நியாயம் நிற்கிறது. அது ஏமாறுவதில்லை.

நாம் செய்யும் காரியத்தை உரைத்துப் பார்க்கும் உண்மையான உரைகல் எது?

நாம் செய்யும் காரியத்தை, பெருமையுடன் நாம் சென்று நம் பெற்றோரிடம், மனைவியிடம், நம் குழந்தைகளிடம் கூற முடியுமோ அதுதான். ‘அப்பா அவனுக்கு ஒரவஞ்சனை செய்து விட்டேன்!’ என்று கூற முடியுமா?

‘அன்பே! அவருடைய மனைவி என்னைக் கெடுத்து விட்டாள்!’ என்று சொல்ல முடியுமா?

‘மகனே! இவர்களை நான் ஏமாற்றி விட்டேன்’ என்று விளக்க முடியுமா?

‘இப்படிப்பட்ட உன்னையா பெற்றெடுத்தேன்’ என்று தாய் வயிறெரிய மாட்டாரா? ‘இப்படிப்பட்ட உனக்குப் பெண்டாட்டி ஒரு கேடா’ என்று மனைவி வெளியே நடக்க மாட்டாரா? ‘இப்படியா நடந்து கொள்வது’ என்று உங்கள் மகன் கேட்கும்போது எங்கே வைத்துக் கொள்வது முகத்தை?

எதை இழக்கிறோம்?

தன்மானத்தை, தன் மதிப்பை, நம்மைப் பற்றிய பெருமையை, நம் மன உறுதியை, நம் பாரம்பரியத்தை. எதற்காகப் பொய் சொல்கிறோம்?

ஏமாற்ற, அபகரிக்க, குற்றத்தை மறைக்க, பெருமைக்காகச் சில சமயம், சிறிய பொய்களைப் பேசுகிறோம்.

'எதை எண்ணுகிறோமோ அதுவாக மாறு கிறோம்' என்பதுதான் உபநிடதம் கூறும் உண்மை; நிரந்தர உண்மை.

எனவே ஏமாற்றுபவன் ஏமாற்றப்படுவான். பிறர் பொருளை அபகரிப்பவன், அபகரிக்கப்படுவான். அபகரிக்கப்படுவது அவன் உடல் நலமாயிருக்கலாம், பொருளாயிருக்கலாம், நிம்மதியாயிருக்கலாம், தன் மானமாயிருக்கலாம், அவன் மனைவியாயிருக்கலாம்.

திருடுகிறார்கள், வயிற்றுக்காக, தேவைக்காக, ஆசைக்காக. இது சிறு திருட்டுத்தான் என்று ஒரு சமாதானம். 'வங்கியின் பணத்தைத் திருடுவதால் எந்தத் தனி மனிதனுக்கும் நஷ்டமில்லை' என்ற சமாதானம். 'அரசாங்க வரிப்பணத்தைத் திருடுவதால் யாருக்கும் கஷ்டமில்லை' என்ற சமாதானம். இது சிறு திருட்டு தான், அலுவலகத்திலிருந்து பேப்பரையும் பேனாவையும் வீட்டு உபயோகத்திற்குப் புழங்குவது - இப்படிப்பட்ட சமாதானங்கள்.

பிறர் மனைவியை நாடுகிறவர், விஷயம் தெரியாத பெண்ணைச் சாதகமாக்கிக் கொள்பவர், விலைமாதிடம் செல்பவர் எல்லாம் ஏன் செய்கிறார் கள்? ஆண்மையை நிரூபிக்க. 'உலகம் தன் கீழ்' என்பதை எண்ணி மகிழ. 'மேலானவன்' தான் என்ற மனப் போர்வையில். சுயநலத்தின் உந்துதலில்.

பொறாமைப்படுபவன் பிறரைச் சமமாக ஏற்றுக் கொள்ள மறுக்கிறான். பிறர் வாழச் சகிப்பதில்லை. ஆக 'பஞ்சமா பாதகங்கள்' என்று பெரியவர்கள் சும்மா சொல்லிவிடவில்லை. அதேபோல் பஞ்ச சீலங்கள் என்றும் சும்மா புகழ்ந்து விடவில்லை.

சொல்லுக்கும் செயலுக்கும் சம்பந்தமில்லாத நிலை, தர்க்கவாத அறிவின் நியாயங்களை உபயோ

க்கும் சாமர்த்தியம், பிறரது பலவீனத்தை வாய்ப்பாக கருதும் மனோபாவம் – மனிதன் இப்படி எத்தனையோ வழிகளில் தவறுகளுக்கு நியாயம் கற்பிக்கிறான்.

தவறுகளை மறுக்கவும், மறைக்கவும், குடியில் இறங்குகிறான். மன உளைச்சலினால் தூக்கமின்றிக் கஷ்டப்படுகிறான். மன நெருக்கடியினால், உள்ளே நடக்கும் நியாய – அநியாயப் போராட்டத்தினால், இதயம் படபடக்கிறது; இரத்த அழுத்தம் கூடுகிறது.

உலகிலே மிகச் சிறந்தது மன நிறைவு, நிம்மதி, ஆனந்தம். இந்தப் பிரபஞ்சத்தின் ஒவ்வொன்றுடனும் நாம் இணைக்கப்பட்டிருக்கும் உண்மையை அறிதல்.

நம்மை அந்த பிரபஞ்ச லயத்தில் நிலைநிறுத்துவது நம் உள்மனம் தான். நம்மைக் காப்பற்றுவது நம் மனச்சாட்சிதான். மனச்சாட்சி நமது கற்பனை அல்ல. உள்ளே இருக்கும் மனிதனின் நிதர்சனம். வாழ்விற்கு வழி காட்ட வந்த பேரொளியின் ஆற்றல்தான் அந்தக் குரல், அதை மதியுங்கள்!

# 4

# கற்பனை ஒரு மகத்தான சக்தி

கற்பனை மூலம் நாம் விரும்புவதை அடையலாம். மேற்கண்ட வாக்கியத்தை மீண்டும் ஒரு முறை படியுங்கள். கொஞ்சம் சிந்தியுங்கள்.

இது அதிசயமாகத் தோன்றலாம். கற்பனையைப் பற்றி நீங்கள் படிக்கப் போவது கற்பனையல்ல, உண்மை.

இமய மலைச்சாரலில் உள்ள குகைகளில் புத்த பிக்ஷுக்கள் அமர்ந்திருக்கிறார்கள். வெளியிலே குளிர் என்றால் குளிர், அவ்வளவு குளிர். இந்தப் புத்த பிக்ஷுக்களோ ஓர் அரை ஆடையை மட்டுமே அணிந் திருக்கிறார்கள். உடலைச் சுற்றிலும் வெப்பத்தை உண்டு பண்ணும் 'தும்மோ' எனப்படும் மந்திர சக்தியை அவர்கள் கற்று வைத்திருக்கிறார்கள்.

நமது இலக்கியத்திலே மணிமேகலையைச் சந்திக் கிறோம். அவர் கையிலே அமுதசுரபி. எடுக்க எடுக்கக் குறையாத அமுதசுரபியினால் அந்த அம்மையார் வாரி வாரி வழங்குகிறார். சமீபத்தில் வாழ்ந்த காரைக் காலம்மையார் சரித்திரத்தைப் படிக்கிறோம். வீட்டுக்கு வந்த கணவன் மாம்பழத்தைச் சுவைத்து ரசித்தபின், “இன்னொன்றிருக்குமே?” என்று கேட்

கிறார். அம்மையார் உள்ளே சென்று ஆண்டவனை வேண்டுகிறார். மற்றொரு மாம்பழம் கையிலே வருகிறது.

'போர்ட்வொர்த்' என்ற அமெரிக்க நாட்டின் ஒரு நகரில் புற்று நோயினால் வாடும் நோயாளி களுக்குச் சிகிச்சை அளிக்கப்படுகிறது. புற்றுநோய் செல்களை வி.சி.ஆரில் போட்டுக் காட்டுகிறார்கள். டாக்டர்கள் நோயாளிகளை 'வீரர்களாகவும் தேவதை களாகவும் தங்களை கற்பனை செய்து கொள்ள'ச் சொல்கிறார்கள். வீரர்களாக அந்தப் புற்றுநோயுடன் போராடி வெற்றி காணுமாறு கூறுகிறார்கள். தேவதை களாக எண்ணிப் புற்று நோய் செல்களை அழிக்கு மாறு கூறுகிறார்கள். இந்தச் சிகிச்சையில் கிட்டத் தட்ட ஒரு 60-70 சதம் பேர் குணமடைகின்றனர்.

'மந்திரமாவது மாங்காயாவது' என்று சிலர் சொல்லக்கூடும். "காரைக்கால் அம்மையார் எல்லாம் கட்டுக்கதை, எங்கே நீங்கள் வரவழைத்துக் காட்டுங்கள் பார்க்கலாம்!" என்று சிலர் பேசக்கூடும். "போர்ட் வொர்த்"தில் நடந்த புற்றுநோய் குணமான சம்பவம் பல்வேறு புறக் காரணங்களால் குணமாகி இருக்கலாம்" என்று மருத்துவர்கள் வினா எழுப்பக் கூடும்.

நம்ப முடியாததெல்லாம் நம்பக் கூடியவையாக மாறி வருகின்ற விஞ்ஞான யுகமிது. எல்லாவற்றிற்கும் அடிப்படை மனித நம்பிக்கைதான். இந்த நம்பிக்கை யில் எவ்வளவு தூரம் நம்பிக்கை வைக்கிறீர்கள்? எவ்வளவு சக்தி மனிதக் கற்பனைக்கு இருப்பதாக எண்ணுகிறீர்கள்?

விஷயமே இங்குதான் இருக்கிறது.

## உணர்வுகளைத் தரும் கற்பனைகள்

நம் மனத்தில் எழும் கற்பனைகள் நம் உடலில் எத்தகைய உணர்வுகளை உண்டு பண்ணுகிறது என்பது நமக்குத் தெரியும். நமது சினேகிதருக்கு அல்லது சினேகிதிக்குக் கடிதம் எழுதுகிறோம். நம்மை யறியாமலே நம் கண்ணீர், எழுதும் தாளை நனைக்கிறது. நாம் உணர்ச்சிவசப்படுகிறோம்: செறுமுகிறோம். எழுதுவது கடிதம் தான். நினைத்துப் பார்ப்பது கற்பனைதான்: நிஜமில்லை. எனினும் சம்பவம் மீண்டும் நம் மனத்திரையிலே ஓடுகிறது. அதை அப்படியே அனுபவிக்கிறோம். உணர்ச்சிக்கு ஆளாகிறோம்!

நடிகர் நடிகைகள் அப்படியே நடக்கும் கதா பாத்திரமாக மாறும்போது அவர்கள் மனத்திலே இதற்குத் தூண்டுகோலாய் இருப்பது என்ன என்று கேட்டுப் பாருங்கள். புரியும்.

பிடித்த விஷயங்களை மீண்டும் எண்ணி மகிழ்வது போல் பிடிக்காத விஷயங்களின் துயரங்களை நிறுத்த வேண்டுமா? அதுவும் முடியும் கற்பனையினால். "சிகரெட் பிடிப்பதை நிறுத்த வேண்டுமா? அதிகம் சாப்பிடுவதைக் குறைக்க வேண்டுமா?" இதன் எதிர் விளைவுகளைக் கற்பனை செய்தால் போதும். சிகரெட்டின் அருகில் போக மாட்டீர்கள். அப்படித்தான் மன சிகிச்சை நிபுணர்கள் மருத்துவம் செய்கிறார்கள்.

ஒரு சமயம் ஓர் இளைஞர் எழுதி இருந்தார் — தாம் ஒரு தகாத உறவில் ஈடுபட்டு வருவதாயும் இதிலிருந்து விடுபட விரும்புவதாகவும். நான் பதில் எழுதினேன் — அப்படிப்பட்ட உறவு ஏதோ இருளில்,

யாருக்கும் தெரியாமல் நடக்கிறது என்கிற உண்மைக்கு நேர் எதிராக "நீங்கள் இருவரும் சுய உணர்வுக்கு வந்ததும் உங்களைப் பார்த்துக் கொண்டு ஊரே அங்கு பட்டப் பகலில் கூடி இருக்கிறது என்கிற நினைவைக் கொண்டு வாருங்கள். என்ன ஆகும் என்று கற்பனை செய்து பாருங்கள்," என்று எழுதி இருந்தேன்.

### உடலளவில் கற்பனைகள்

திருநெல்வேலி அல்வாவோ, ஐஸ் கிரீமோ நினைவுக்கு வந்ததும் நம் நாக்கில் எச்சில் ஊறுகிறது. உண்மையான ஐஸ்கிரீம் என்ன மன உந்துதல்களை ஏற்படுத்துமோ அதே உந்துதல்களுக்கு நாம் ஆளாகி றோம்! ஓர் அழகான பெண்ணையோ, ஆணையோ கற்பனை செய்து நம் உடலில் காம உணர்வுகளை எழுப்ப முடியும். அதாவது எல்லா விஷயமும் நம் மனத்தில்தான் துவங்குகிறது; எல்லாம் நம் மனக் கட்டுப்பாட்டில்தான் இருக்கிறது என்பதைத்தான் நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

ராம யோகி என்பவர் தமது சுண்டு விரலில் அதிக வெப்பத்தை ஏற்றி அங்கே கொப்பளம் வரச் செய்தார் மருத்துவர்கள் முன்னிலையில். இதய ஓட்டத்தை நிறுத்திக் காட்டுகிற யோகிகள் இருக் கிறார்கள். அதேபோல் நம் ரத்த ஓட்டத்தையும் நிறுத்த லாம். ரத்த ஓட்டத்தை நிறுத்த முடியுமெனில் இது அறுவை சிகிச்சையில் எத்தகைய புரட்சிகரமான மாறுதல்களைக் கொண்டு வரும் என்பதை எண்ணிப் பாருங்கள். இப்படிப்பட்ட சிகிச்சை பிலிப்பைன் நாட்டிலே இருப்பதாகச் சில ஆங்கிலக் கட்டுரைகள் எழுதப்பட்டிருக்கின்றன.

அமெரிக்க நாட்டின் பிரபல சினிமா நடிகை ஷர்லி மக்லேன் பூதான் நாட்டிற்குச் சென்றார். அங்கே போனபோது, போதுமான போர்வைகளை அவர் எடுத்துச் செல்லவில்லை. சாதாரண உடைகளுடன் உறங்கிய அவர், அமெரிக்க இந்தியர்கள் அவருக்குச் சொல்லிக் கொடுத்த ஒரு 'மந்திர'த்தைப் பிரயோகித்து நல்ல கதகதப்புடன் பனியிலே தூங்கியதாகக் குறிப் பிடுகிறார்.

அதேபோல் பயம், தவிப்பு, வெறுப்பு, ஒன்றும் செய்ய முடியாத ஒரு நிலை என்ற மனநிலையில் நாம் இருப்போமானால் அது வயிற்றில் புண்ணை (ulcer) ஏற்படுத்துகிறது. வயிற்றில் ஓட்டை போட்டு விடுகிறது. நாட்பட நிகழும் நிகழ்ச்சி இது.

இதற்கு நேர்மாறாக நம்மை உற்சாகப்படுத்தி நம்மைத் தூண்டிவிடும் உயர் உணர்வைக் கூட நம்முள் நாம் ஏற்படுத்த முடியும். அப்படித் தங்களிடையேயும், மக்களிடையேயும் ஏற்படுத்தியவர்கள் தாம் புத்தர், ஏசு, முகமது நபி, காந்தி, விவேகானந்தர் போன்றோர்.

## கற்பனையும் பொது வாழ்வும்

**கா**தலின் நினைவுகள் உடலில் மாறுதலை உண்டுபண்ணுவது போல லட்சிய தரிசனம் - ஒரு காரியத்தைச் செய்து முடிக்க வேண்டுமென்ற ஆர்வம் – நம்மைத்தூக்கி நிறுத்தும் வல்லமை படைத்தது.

கிராமங்கள் வளமாக - எடுத்துக் காட்டாக - விளங்க வேண்டும் என்று கனவு காணும் தொண்டன், பாடுபட்டு அதை அடைந்தே தீருவான். அவன் காணும் லட்சிய தரிசனத்திற்கு அத்தனை வலிமை இருக்கிறது. எப்போதோ காலமான ஒரு விவேகானந்தருக்கும் நமக்கும் இடையில் என்ன

இருக்கிறது என்பதை எண்ணிப் பாருங்கள்; சில வார்த்தைகள், சில சொற்கள், சில உணர்வுகள், அவ்வுணர்வுகளை எழுப்பி விடும் கற்பனைகள். அவ்வாசகங்கள் நம்மைச் சுண்டி இழுத்து எழுந்து நிற்கச் செய்து உழைக்கச் செய்கின்றன. தன்னலமில்லாப் பொது நலத்தின் நிறைவு இருக்கிறதே அது ஓர் அசாதாரண மனநிலை. உலகைப் பற்றிய மனக் கற்பனை — காந்திக்கு வலிமை தந்தது அதுதான்.

"மண்ணிலே பிறந்ததற்கு நாம் இந்த மண்ணுக்கு ஏதாவது செய்துவிட்டுப் போக வேண்டும்" என்று சொல்லும் சமையற்காரரைச் சமையற்காரராகப் பார்க்கவில்லை: தினம் இரண்டு மரம் நடும் சமுதாயத் தெய்வமாகப் பார்க்கிறோம் பாலசந்தரின் 'உன்னால் முடியும் தம்பி' படத்தில்.

மனக் கற்பனை எப்படிப் பொது வாழ்வில் நேர் எதிராகச் செயல்படுகிறது என்று பாருங்கள். அமெரிக்க ஜனாதிபதி நிக்சன் தேர்தலுக்கு நிற்கிறார். பொதுவாக அவர் நம்பக்கூடிய மனிதரில்லை. அதை நிரூபிக்க எதிர்க்கட்சிக்காரர்கள் ஒரே ஒரு வாசகத்தை உபயோகித்தார்கள், "ஒரு பழைய காரை இந்த மனிதரிடமிருந்து நம்பி நீங்கள் வாங்குவீர்களா?" என்ற ஒரே ஒரு வாக்கியம். மக்கள் தங்களுக்குத் தாங்களே கேள்வியைக் கேட்டுக் கொண்டு "ஐயோ! வாங்க மாட்டோம் ஒரு நாளும்!" என்று தங்களுக்குத் தாங்களே சொல்லிக் கொண்டார்கள்.

எப்படி மனக்கற்பனையை ஏற்படுத்தும் வாசகத்தை உபயோகிக்கிறார்கள், கவனியுங்கள்.

மனிதர் தோற்றுப் போனார்!

"இன்றைய அரசியல் தலைவர்கள் கோயில் பூசாரிகளாக இருந்தால் இவர்களை நம்பி உங்கள்

மனைவி மக்களைக் கோயிலுக்கு அனுப்புவீர்களா?" என்ற கேள்வியை நீங்களே கேட்டுக் கொள்ளுங்கள். மறந்தும் ஓட்டுப் போடுவீர்களா?

மனக்கற்பனை செய்யும் விந்தையைக் கவனியுங்கள்.

## விஞ்ஞான ஆதாரங்கள்

புற்று நோயை மனக்கற்பனை மூலம் வெற்றி காணச் செய்தபோது நோயாளிகளின் உடல் நிலையைப் பரிசோதித்தார்கள். பயிற்சிக்குப் பிறகு 'லிம்போசைட்ஸ்' (Lymphocytes) எனப்படும் நோய்க் கிருமிகளைக் கொல்லும் பொருள் ரத்தத்தில் அதிகமிருப்பதாகக் கண்டார்கள். மனக்கற்பனை மூலம் உடல் வலியைக் குறைக்கும் பயிற்சிகளில் ஈடுபடும் போது வலியைக் குறைக்கும் 'எண்டார்பின்' (Endorphin) என்ற ஒருவகைப் பொருள் ரத்தத்தில் அதிகம் உண்டு பண்ணப்படுவதைக் கண்டார்கள்.

மனக்கற்பனை உணர்வாக மாறி, உடலில் பாதிப்பை ஏற்படுத்துகிறது; உடலுக்கு அப்பால் வெளி உலகில் நம் மனக்கற்பனை பிறரைப் பாதிக்கிறதா? பாதிக்குமா? அதாவது வானொலி, தொலைக்காட்சி போல வேறு இடத்திற்கு நம் மனத்திலிருந்து செய்தி அனுப்ப முடியுமா? ஒரு மனத்திற்கும் மற்றொரு மனத்திற்கும் தொடர்பேற்படுத்த முடியுமா? நிச்சயமாக முடியும்! இன்றைய ஆராய்ச்சிகளைப் பார்க்குமுன், பழங்கால மக்களை இது விஷயமாகப் பார்ப்போம்.

## உடலுக்கப்பால்

ஷர்லி மக்லேன் ஆப்பிரிக்க நாட்டுக்குப் பயணம் சென்றதைப் பற்றி எழுதுகிறார். ஓரிடத்தில்

ஆப்பிரிக்கப் பழங்குடி மக்களையும் அவர்களது தலைவரையும் பார்த்தபின், அந்தத் தலைவர் கூறினார்: "நீ இன்னொரு வகை பழங்குடி மக்களைப் பார்க்க வேண்டும். அவர்கள் 500 மைலுக்கப்பால் இருக்கிறார்கள்."

உடனடியாக விமானம் மூலம் அங்கே சென்றார் ஷர்லி மக்லேன். மகத்தான வரவேற்புத் தந்தார்கள் அந்தப் பிரதேசத்துப் பழங்குடி மக்கள். காட்டில் வாழும் அவர்கள் எப்படி இவரை வரவேற்கத் தயார் நிலையில் இருந்தார்கள்? அந்தத் தலைவர் கூறினார்: "நீங்கள் வருவது தெரியும். செய்தி விவரமாகச் சொல்லி அனுப்பப்பட்டது." எப்படிச் செய்தி அனுப்பினார்கள்? மனத்தின் மூலம், மற்றொரு மனத்திற்குத் தெரிவித்திருக்கிறார்கள். மக்களில் எழுபது சதம் பேர் "இத்தகைய அனுபவங்களுக்குத் தங்கள் சொந்த வாழ்வில் ஏதேனும் ஓர் ஆதாரமாவது நிச்சயம் இருக்கிறது" என்று ஒரு சர்வேயில் கூறி இருக்கிறார்கள். இது இன்று 'மனவியலுக்கப்பால்' (para psychology) என்ற அறிவியல் பிரிவில் சோதனைகள் மூலம் செய்து காட்டப்படுகிறது.

அடிக்கடி ஒருவரை நினைத்துப் பாருங்கள். விரைவிலே உங்களுக்கு அவரிடமிருந்து கடிதம் வரும். அல்லது போனில் கூப்பிடுவார். இது ஒரு சகஜமான நிகழ்ச்சி என்று சொல்லுமளவுக்கு எனது வாழ்வில் சொந்த அனுபவங்கள் நேர்ந்திருக்கின்றன.

ஒருவர் மனத்திலிருந்து இன்னொரு மனத்திற்குச் செய்தி அனுப்பிய போது சோதனையில் ஒன்றைக் கண்டார்கள். மூளையின் எண்ண அலைநீளம் இரண்டு பேருக்கும் ஒரே அளவில் இருந்ததைக் கண்டார்கள். ஒத்த உள்ளம் உடையவர்கள் ஒன்று

சேர்வதையும் பரஸ்பரம் உதவிக் கொள்வதையும் இத்துடன் இணைத்துச் சிந்தித்துப் பாருங்கள்.

**உயிரற்ற பொருட்கள் மீது**

**ம**னக்கற்பனை உயிருள்ள ஜீவன்களில் பரவு கிறது. உண்மை. ஆனால் உயிரற்ற பொருட்களில் அதன் பாதிப்பு எப்படி?

யூரிகெல்லர் என்ற இஸ்ரேல் நாட்டு மனிதர் ஒருவர் செய்து காட்டிய நிகழ்ச்சி இது. தங்கள் வீட்டில் ரிப்பேராகிக் கிடந்த கடிகாரங்களையெல்லாம் ஒரு குறிப்பிட்ட தொலைவில் குவிக்கச் செய்தார். (கடிகாரத்தில் எல்லாப் பாகங்களும் இருந்தன. ஏனோ ஓடவில்லை.)

மனத்திலே அவை ஓடுகின்ற நிலையில் கற்பனையைப் படர விட்டார். அதைச் சொல்லில் காட்டினார். "ஓடு!" என்று உரக்கச் சப்தமிட்டார். பெரும்பாலான கடிகாரங்கள் ஓட ஆரம்பித்தன! இதனைக் கலிபோர்னியாவில் பிரபல மனச்சிகிச்சை நிபுணர் டாக்டர் வில்லியம் பெஸ்லர் எழுதுகிறார்.

யூரிகெல்லரின் வீடியோ படத்தைப் போட்டுக் காட்டியபோது கூட "அந்தக் குரலின் ஒலியில் வீட்டில் இருந்த பல கடிகாரங்கள் ஓடத்துவங்கின" என்று எழுதுகிறார்!

கராத்தே பயிற்சியிலும், மற்போர் சண்டை களிலும் போட்டியாளர்கள் எப்படி உரக்கச் சத்தமிடு கிறார்கள் என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

## ஞானியும் விஞ்ஞானியும்

நம்பிக்கை, மலையைக் கூட அசைக்கும் என்கிறது பைபிள். "கனல் மேல் நடக்கலாம். கரடி வெம்புலி வாயையும் கட்டலாம்" என்று பாடுகிறது தேவாரம். "புயல், மழை, வெள்ளம்" இதையெல்லாம் ஏற்படுத்தக் கடும் பயிற்சி மேற்கொண்டு, தன் இளம் வயதில் தன் குடும்ப எதிரிகளை அழித்ததைப் பற்றி எழுதுகிறார் திபேத்திய ஞானி மிலாரெப்பா.

நமது நம்பிக்கையின் வலிமையையும் மனக் கற்பனையின் சாதனைகளையும் பற்றிய இன்றைய ஆராய்ச்சி நம்மை வியக்க வைக்கிறது.

மனக்கற்பனை என்பது ஒரு மகத்தான சக்தி. இப்படி ஒரு சக்தி இருக்கிறதென்பதே பலருக்குத் தெரியாமல் போய்விட்டது.

இப்போது எண்ணிப் பாருங்கள். மணிமேகலையின் கையிலே அமுதசுரபி இருந்திருக்குமா? கண்ணகி, "தீ மூள்க!" என்றதும் அப்படி நிகழ்ந்திருக்குமா?

கற்பனையின் தொடர்பான நம்பிக்கையின் அதி அற்புதச் சாதனைகளைத்தான் அவை குறிக்கின்றன. "நாம் காணும் கற்பனைதான் - நமது எண்ணம்தான் - நமது சூழ்நிலையாக மாறுகிறது" என்கிறார் 'லட்சிய தரிசனம்' என்கிற தலைப்பில் ஞானாசிரியர் ஜேம்ஸ் ஆலன்.

கற்பனையை - நம்பிக்கையை - வாழ்வுக்குப் பயன்படுத்துவோம்.

# 5

# மாறுபட்ட சிந்தனைகளே மகத்தான கண்டுபிடிப்புகள்!

அமெரிக்க நாட்டில் மினியாபோலிஸ் நகரம். "உங்களுக்கு ஓர் ஆச்சரியம்!" என்றார் நண்பர் சோமு.

ஐஸ்கிரீம் 'பார்ல'ரில் கார் நின்றது. என்ன செய்யப் போகிறார் இவர்?

"இரண்டு பச்சை மிளகாய் ஐஸ்கிரீம்!" என்று குரல் கொடுத்தார்.

"என்ன! பச்சை மிளகாய் போட்டு ஐஸ்கிரீமா? உறைப்பு ஐஸ்கிரீமா! ... அட கடவுளே!" என் மனத்தில் பல யோசனைகள், கலக்கம், நெளிந்தது உடம்பு.

கார சோமாசியை ரசிப்பது போல நண்பர் சுவைத்துக் கொண்டிருந்தார். "ஆ! ... ஊ! உறைப்பு! பிரமாதம்! ... தித்திப்பு! பலே ஜோர்!".

கார ஐஸ்கிரீம்! கற்பனையின் எல்லை ...! மாறாட்டத்தின் விநோதம்!

"புதிய சிந்தனையும், மாறுபட்ட எண்ணமும் தோன்றும் போது, அதன் பலா பலன்களை விமர்சிக் காதே! அதை அனுபவி; அதை அதற்காகவே பார்!"

என்பன போன்ற மனவியல் விளக்கங்கள் என் மனத்தில் ஓடின.

பல ஆண்டுகளுக்கு முன் குடந்தை கணபதி விலாஸ் ஹோட்டலில், "பாதாம் பூரியில், சாம்பாரை ஊற்று!" என்று சொல்லிச் சாப்பிட்ட மனிதரின் நினைவு வந்தது. அவருக்குப் பாதாம் பூரியும் சாம்பாரும் பிடிக்குமென்றால் எனக்கென்ன நஷ்டம்? சர்வருக்கென்ன சங்கடம்?

புதிய விஷயங்கள் வித்தியாசமானவை; மாறு பட்டவை; வழக்கத்திலேயே ஊறியிருக்கிற நாம் புதியனவற்றை ஏற்றுக்கொள்ள முதலில் தயங்கு கிறோம்!

மாறுபட்ட மனோபாவத்தினால்தான் - புதியன காணும் எண்ணத்தினால்தான் - பரிணாம வளர்ச்சி ஏற்படுகிறது. காரும், டெலிபோனும் விமானமும் கலர் டெலிவிஷனும் மனிதன் கண்டு பிடித்தவை; புதிதாக உருவாக்கியவை. இதற்கு முன் இல்லாதவை.

**எ**ட்வின் லாண்ட் என்ற அமெரிக்கர் தம் மகளைப் படமெடுக்கிறார். குழந்தையோ எடுத்த படத்தை உடனடியாகப் பார்க்க விரும்புகிறாள். "அம்மா! இதைக்கழுவி, 'பிரிண்ட்' போட்டு, காய வைத்துக் கொடுக்க ஒரு நாளாவது ஆகும்" என்கிறார்.

குழந்தையின் முகத்திலே ஏக்கம்; ஏமாற்றம். "அப்பா! உடனடியாகப் படம் வெளிவரக்கூடிய காமிராவை ஏன் நீங்கள் செய்யக் கூடாது?" என்கிறாள். குழந்தை உள்ளம்! அங்கே எது முடியும், எது முடியாது என்ற வரையறை ஏதும் கிடையாது! எல்லை கிடையாது!

எட்வின் லாண்ட் யோசிக்கிறார்; பல ஆண்டுகள் உழைக்கிறார், உடனடியாகக் கிடைக்கும் போட்டோ பட காமிரா பிறக்கிறது! இதுவரை இருந்த 'கொடாக்' கேமிராவுக்கெல்லாம் சவாலாக; அவற்றை எல்லாம் பின்னுக்குத் தள்ளிவிட்டு!

புதியன காணும் மனோபாவத்திற்கு எது குறுக்கே நிற்கிறது?

சம்பிரதாய மனோபாவம்! "இருப்பதே நல்லது; இதில் ஒன்றும் மாற்றம் தேவை இல்லை மேலும் இதில் எதுவும் மாற்றம் கொண்டு வர முடியாது!" என்ற எண்ணம்.

அடுத்து, "நீங்கள் சொல்வதா? எங்களிடம் யோசனைக்குப் புத்திசாலிகள் இல்லையா?" என்று எண்ணுகிற – சொல்கிற – மனோபாவம்.

'சிங்கர்' தையல் யந்திரம் மிகப் பிரபலமானது. ஆனாலும் அந்தத் தொழிலில் ஒரு தேக்கம். நிறைய தையல் யந்திரங்கள் விற்கப்பட்டு, தேவை குறைந்த நிலை.

இந்தச் சமயத்தில் ஒரு 'டிபார்ட்மெண்டல் ஸ்டோர்' சொந்தக்காரர் வந்து கேட்டார்.

"எங்கள் காசுப்பெட்டி பழங்காலத்தது. சாமான் வாங்க வருபவர்கள் 'பில்' போடுவதற்காக நீண்ட நேரம் 'கியூ'வில் நிற்க வேண்டி இருக்கிறது. 'பில்' போடும் யந்திரத்தை நவீனப்படுத்தி நேரத்தைச் சுருக்க முடியுமா?"

சிங்கர் நிறுவனத்தார், "இது நாங்கள் செய்யும் தொழில் அல்ல" என்று சொல்லி விடவில்லை.

யோசித்தார்கள். "அவகாசம் கொடுங்கள்" என்றார்கள். சில எலக்ட்ரானிக்ஸ் நிபுணர்களைக்

கம்பெனியில் வேலைக்குச் சேர்த்துக் கொண்டார்கள். ஒன்றரை ஆண்டுகளில் புதிய பில்போடும் எலக்ட்ரானிக் யந்திரம் பிறந்தது.

எலக்ட்ரானிக்ஸ் துறையில், இதுவரை தொழில் செய்யாத சிங்கர் நிறுவனம், அதில் நுழைந்து சக்கைப் போடு போட ஆரம்பித்தது.

மாறாக, மற்றோர் நிறுவனத்தைக் கவனியுங்கள். அமெரிக்காவில் புல்மன் என்பது ஒரு பெரிய ரயில் கம்பெனி. அப்போது எங்கு பார்த்தாலும் ரயில்தான். நல்ல வருமானம்.

கொஞ்ச நாளில் விமானம் வந்தது. 'புல்மன்' அதைக் கண்டு கொள்ளவே இல்லை. "வரட்டுமே" என்றார்கள் முதலில். சில ஆண்டுகளில் மனிதர்கள், பொருட்கள் எல்லாம் விமானம் மூலம் போக ஆரம் பித்தன. புல்மனுக்கு வருமானம் குறைந்தது. தொழில் நசிந்து விட்டது.

புல்மன் தோற்றதன் காரணத்தைத் தொழிலறி ஞர்கள் எழுதுகிறார்கள். "தாங்கள் இருப்பது ரயில் தொழிலில் என்று புல்மன் எண்ணியது; தாங்கள் இருப்பது போக்குவரத்துத் தொழிலில் என்பதை உணராமல் போய்விட்டது!"

காப்பிக்கடை நடத்தும் ஓட்டல்காரர் தான் ஓட்டல் தொழிலில் இருக்கிறோம் என்றும் எண்ண லாம்; அல்லது உணவுத் தொழிலில் இருக்கிறோம் என்றும் எண்ணலாம்.

அதேபோல ஓர் ஓட்டல் தொழிலில் இருப்பவர் நாம் மக்கள் தேவைகளைப் பூர்த்தி செய்கிறோம் என்று எண்ணி பல ரூம்களைக் கொண்ட தங்கு மிடத்தையும் சேர்த்துத் தொழில் செய்யலாம். வருமானத்தை விரிவுபடுத்தலாம்.

உலகம் மாறிக்கொண்டு வருகிறது. மாற்றங்கள் எங்கே செல்கின்றன என்கிற தொலைநோக்கு நிர்வாகத் தலைவர்களுக்குத் தேவை. இப்படி மக்களின் மனப் போக்கைக் கணித்து, நிர்வாகத்திற்கு ஆலோசனை கூறும் நிறுவனங்கள் மேல் நாடுகளில் நிறைய இருக்கின்றன.

இன்றில்லாதவற்றை, இன்றே பார்ப்பதுதான் தீர்க்க தரிசனம். அது தொழிலதிபர்களுக்கும் வேண்டும்; நாட்டுத் தலைவர்களுக்கும் வேண்டும். ஒரு நாடோ அல்லது நிறுவனமோ ஒரு பொற் காலத்தைக் காண்கிறது என்றால், அது அதிலுள்ள தீர்க்கதரிசி களைப் பொறுத்தது.

பத்தாண்டுகளுக்கு ஒருமுறை எடுக்கும் மக்கள் தொகைக் கணிப்பில் கூட நாடு எங்கே போகிறது என்பதை உணர்ந்து, அதை வைத்துத் தொழில் துவங்கு வார்கள் அல்லது தொழிலை விரிவுபடுத்துவார்கள் தொழிலதிபர்கள்.

நமது நாட்டு அரசியல் தலைவர்களைப் பார்க்கும்போது, இவர்களிடம் தீர்க்கதரிசனம் இருப்ப தாய்த் தெரியவில்லை.

சமீபத்தில் கட்டப்பட்ட திரிசூலத்தில் உள்ள புதிய விமான நிலையம் போக்குவரத்தைச் சமாளிக்க முடியாத அளவுக்குச் சிறிதாய்ப் போய் விட்டது. நாட்டுக்குத் தண்ணீர் தேவை; குடிநீர், விவசாயத்திற்கு நீர் தேவை என்பதை உணராது அதற்கான நடவடிக் கைகள் எடுக்காது இருக்கிறார்கள்; இவர்களுடைய அவசர பிரச்சனை அயோத்தியில் எங்கு கோயில் கட்டுவது என்பது போன்ற பிரச்சனைகள்!

நம் நாட்டில் தொழிலில் தீர்க்கதரிசிகள் - புதிய உலகைக் காண்பவர்கள் - இருக்கிற அளவுக்கு அரசியல் உலகில் இல்லை; அரசியலில் அன்றாடங் காய்ச்சிகள்தான் இருக்கிறார்கள்!

புதியன காணும் திறனில் ஒரு தனித்தன்மை மின்னுகிறது. அவர்கள் பிறர் போலச் சிந்திப்பதில்லை.

விஞ்ஞான மாணவர்களுக்கு என்ன அறிவுரை கூற விரும்புகிறீர்கள் என்று ஆல்பர்ட் ஐன்ஸ்டைனை ஒரு நிருபர் கேட்டார்.

“பழைய கருத்துக்களை — பிறர் சொல்லிவிட்டுப் போவதை — ஏற்றுக் கொள்ளாதீர்கள். மறுத்துச் சிந்தியுங்கள்!” என்றார்.

புதியன கண்டுபிடிப்பதற்குப் பெரிய படிப்பும் பட்டமும் வேண்டும்; பெரிய ஆராய்ச்சிக் கூடம் வேண்டும் என்று பலர் எண்ணுகிறார்கள். அமெரிக்க ஜனாதிபதி டெடி ரூஸ்வெல்ட் முன்னுக்கு வருவதைப் பற்றி ஒருமுறை கூறினார்.

“எங்கிருக்கிறீர்களோ அங்கே;

எது முடியுமோ அதை;

எது இருக்கிறதோ அதை வைத்துக்கொண்டு” என்றார். அந்த வாசகத்தை மீண்டும் படித்துப் பாருங்கள்.

முதலில் ஆசை,

பிறகு செய்ய வேண்டும் என்ற ஆர்வம்,

பின் ‘முடியும்’ என்ற நம்பிக்கை,

அடுத்து, புதுமை காணும் மனோபாவம் - எதிர்பார்ப்பு -

இதுதான் பாதை!

புதியன காண்பதற்கு ஒரு பரந்த அறிவு தேவை. பல தகவல்களைக் கலக்கிக் குலுக்கும்போது, புதிய இணைப்புக்கள் ஏற்படுகின்றன. இவற்றைத்தான் புதிய 'ஐடியா' என்றும் புதிய பொருள் என்றும் கூறுகிறோம். முப்பட்டைக் கண்ணாடிக் குழாயைக் குலுக்கும் போது ஒவ்வொரு முறையும் புதிய அமைப்பு தோன்றுவது போல.

அப்படிப்பட்ட புதிய இணைப்புக்கு உதாரணம்: மெக்கார் மிக் என்ற இளைஞன் கோதுமை வயல் வழியாக நடக்கிறான். அங்கே அறுவடை நடைபெறு கிறது; அரிவாளைக் கொண்டு நிறைய மனிதர்கள் அறுவடை செய்கிறார்கள். "இதை மாற்றி யந்திரம் மூலம் செய்ய முடியாதா? செய்தால் எவ்வளவு மனித உழைப்பு மிச்சமாகும்?" என்று எண்ணுகிறான்.

அதே சிந்தனை! அதே சிந்தனை!

ஒருநாள் சலூனுக்குச் செல்கிறான், 'கிராப்' வெட்டிக் கொள்ள. அந்தத் தொழிலாளி முடி வெட்டும் 'கிளிப்பரை' தலையில் ஓட்டுகிறார். கிளிப்பரில் பற்கள் கொண்ட இரண்டு தகடுகள் எதிரும் புதிருமாக இயங்குவதன் மூலம் முடி வெட்டப் படுகிறது.

மெக்கார்மிக்கிற்குச் சிந்தனை விரிகிறது. "இந்த முடி வெட்டும் கருவியையே பெரிதாக - ஒரு கோதுமை வயலில் கோதுமைத் தாளை அறுவடை செய்யப் புகுத்தினால் எப்படி?" அறுவடை செய்யும் "மெக்கார்மிக் ஹார்வெஸ்டர்" யந்திரம் பிறக்கிறது!

சாதாரண சலூன் விஷயம், இங்கு விவசாயத் திற்குப் பயன்படுகிறது இப்போது. ஓர் இடத்தில் உபயோகிக்கும் ஒரு பொருளை வேறு இடத்தில் வேறு

தேவைக்குப் பயன்படுத்தும்போது - புதிய இணைப்பு - புதிய பொருள்!

ஆக்க சிந்தனையில் மற்றோர் முறை இருக்கிறது.

**ந**மது வீடுகளில் தோசை மாவு அரைக்க ஆட்டுக் கல்லை உபயோகிக்கிறார்கள். அடியிலே கல், நடுவிலே பள்ளம், அதில் ஒரு குழவி. இந்தக் குழவியை ஆட்டு வதன் மூலம் மாவரைப்பதுதான் பரம்பரை பரம்பரை யாக வந்த சாதனம்.

மாயவரம் ஜங்ஷனில் இருந்த அய்யங்கார் காப்பி கடையில் சரியாக மாவு அரைக்க ஆட்கள் கிடைக்கவில்லை; ஆட்கள் கிடைத்தாலும் மாவு சரியாக அரைக்கப்படுவதுமில்லை. பார்த்தார் அய்யங்கார். "அரைப்பதை யந்திரமாக்கினால் என்ன?" என்று சிந்தித்தார்.

வழக்கம் போலக் குழவி ஆட்டுக் கல்லைச் சுற்றி வரச் செய்வதற்குப் பதிலாக, அவர் குழவியை நிலையாக வைத்து ஆட்டுக்கல்லைச் சுற்றச் செய்தார். இன்று நாம் உபயோகிக்கும் 'வெட் கிரைண்டர்' பிறந்தது.

கவனியுங்கள்! இங்கே குழவி சுற்றவில்லை; அடிக்கல் சுற்றுகிறது. தலை கீழ் சிந்தனை.

புவிஈர்ப்பைக் கண்டு பிடித்த நியூட்டனின் தலைகீழ்ச் சிந்தனை முறைதான் இங்கும். "ஆப்பிள் மரத்திலிருந்து விழுகிறது என்பதற்கு பதில் ஆப்பிளை பூமி இழுக்கிறது" என்று கண்டுபிடித்தார் நியூட்டன்.

"நாய் மனிதனைக் கடித்தால் செய்தியில்லை; மனிதன் நாயைக் கடித்தால்தான் செய்தி" என்கிறார் களே அதுவும் இந்த தலைகீழ்ச் சிந்தனை முறைதான்!

**கோ**வையில் ஒரு மனிதர்.

"இந்தப் பாக்குத்தூளை சிறிய பொட்டலமாகக் கட்டி விற்கலாம்: கொஞ்சம் வாசனைப் பொருட்களையும் தேங்காய்ப் பூவையும் சேர்த்து" என்கிறார்.

"என்ன இது! வீட்டுக்கு வீடு பாக்கு இடிக்கும் உரல் இருக்கிறது. எவன் உங்கள் பொட்டலப் பாக்கைப் போய் வாங்கப் போகிறான்?" என்கிறார்கள்.

நடந்தது என்னவென்றால் கிருஷ்ண செட்டி அவர்கள் அசோகா சுகந்த பாக்குத்தூள் என்ற பெயரில் சிறுபாக்குப் பொட்டலத்தை வைத்துப் பெரும் தொழிலையே ஆரம்பித்து நடத்திக் காட்டி விட்டார்!

அது அத்துடன் நிற்கவில்லை. பார்த்தார் ஒரு மனிதர் குடந்தையில். "பாக்கைப் பொட்டலமாக விற்கலாம் என்றால் ஏன் புகையிலையை விற்கக் கூடாது?" என்றெண்ணினார். மைதீன் புகையிலை பிறந்தது.

அடுத்த தெருவில் உள்ளவர் ஏன் சீவலை விற்கக் கூடாது என்று எண்ணினார். ஏ.ஆர்.ஆர். சீவல் பெருந் தொழிலாகப் பிறந்தது.

இங்கே எதுவும் புதிய பொருட்கள் இல்லை. பாக்கு, புகையிலை, சீவல் எல்லாமே தெரிந்த பழைய பொருட்கள்தான். ஆனால் அதை அவர்கள் பாக்கெட் செய்து எல்லோருக்கும் கிடைக்கும்படி எளிய விலையில் விற்ற முறை இருக்கிறதே அங்கே தான் புதுமை ஒளிந்து கொண்டிருக்கிறது.

அதே போலத்தான் ஷாம்பூவிலும். ஷாம்பூவை பெரிய பாட்டிலில் போட்டு அதிக விலையில் விற்றுக் கொண்டிருந்தார்கள். "இது ஏதோ பணக்காரர்களே உபயோகிக்கக்கூடிய பொருள்" என்பதை மாற்றிச்

சிறிய பிளாஸ்டிக் பாக்கெட்டுகளில் விற்பனை செய்யத் துவங்கினார் டாக்டர் ராஜ்குமார் பாக்கெட் ஒரு ரூபாய் என்று, ஏழைகளும் வாங்கும் விலையில்.

ஷாம்பூ புதிய பொருளல்ல; அதை சிறிய பாக்கெட்டுகளில் யாரும் வாங்கும் குறைந்த விலையில் விற்க வந்த உத்திதான் புதுமை!

மாறுபட்ட சிந்தனை!

வாழ்வு நேற்றிருந்தது போல இல்லை. தொழிலும் நாடும் நேற்றிருந்தது போல ஓடிக் கொண்டிருக்க வில்லை. அங்கே புதிய புதிய பிரச்னைகள்.

புதிய பிரச்னைகளுக்கு வழிகாண, புதிய தேவை களுக்கு ஈடு கொடுக்க, மாறி வரும் உலகைச் சமாளிக்க புதிய – மாறுபட்ட – சிந்தனை தேவை.

அதைத்தான் ஆக்க பூர்வமான சிந்தனை என்கிறோம். கொஞ்சம் சிந்தியுங்கள்!

# 6

# முடிவெடுக்க உதவும் உள்ளுணர்வு

---

"எனக்கொரு எண்ணம். ஏதோ இந்த மாப்பிள்ளைதான் நம் வசந்திக்குச் சரியான பையன் என்று. இங்கேதான் கல்யாணம் நடக்கப் போகிறது என்று என்னவோ சொல்கிறது" என்ற வார்த்தை களைக் கேள்விப்பட்டிருப்பீர்கள்.

இதற்கு முன் ஒரு நபரைப் பார்த்தே இருக்க மாட்டோம். முதல் கணிப்பிலேயே ஆத்மாவுடன் ஆத்மா பேசியது போல ஒரு தொடர்பு ஏற்படுகிறது. இத்தனை நாள் தேடிக்கொண்டிருக்கிறோம், மனைவி யாகக் கூடிய தகுதி வாய்ந்த பெண்ணை; இத்தனை நாள் தேடிக்கொண்டிருக்கிறோம், நம்மை நம்பிக்கை கொள்ளச் செய்து நமக்கு வழி காட்டும் ஒரு யோகியை, ஞானியை, அதேபோல ஒரு சரியான வீட்டை, சரியான வேலையைத் தேடிக் கொண்டிருக் கிறோம்; அப்போது நம் உள்ளுணர்வு சொல்கிறது. "இதுதான்; இவர்தான்; இவள்தான்!" என்று.

"இது உண்மையாக இருக்குமா? இது சரியாக நடந்தேறுமா?" என்ற சந்தேகம் எழுகிறது. ஆனால்

நமது முதல் கணிப்பு, எங்கே எந்த ஆழத்திலிருந்து நம்மை உந்துகிறது.

எந்தவிதக் காரண காரியமும், விளக்கமும் தராது நம்மையறியாத ஓர் உணர்வு ஒரு செய்தியைத் தெரிவிக்கிறது. இந்த உள்ளுணர்வு எங்கிருந்தோ வருகிற செய்தி; அதை நம்மால் தொட முடிவதில்லை. எப்படி எங்கிருந்து வந்ததென்று தெரிவதில்லை. சில அறிகுறிகள் மூலம் ஒரு செய்தி தெரிவிக்கப்படுகிறது. உடலிலே ஊடுருவும் உணர்வாக நம்மில் பரவி நின்று செய்தி சொல்கிறது.

நம்மை வாழ்விக்கவும், வரப்போகிற அபாயங் களைத் தெரிவிக்கவும், வரப்போகிற நன்மைகளைப் புலப்படுத்தும் வழியிலும், இந்த ஜீவன் எங்கிருந்தோ செயல்படுகிறது.

டாக்டர் குருசாமி முதலியாரைப் பற்றிக் கூறுவார்கள். ஒரு நோயாளி உள்ளே நடந்து வரும் போதே, "உனக்கு இன்ன நோய்தானே ?" என்று கேட்டு விட்டு உடனே மருந்தெழுதிக் கொடுப்பார் என்று. டாக்டர் குருசாமி முதலியார் நோயாளியைப் பல கேள்விகள் கேட்பதில்லை; பரிசோதனைகள் செய்வ தில்லை. ஆனாலும் இதுதான் பிரச்னை என்று உணர் கிறார்.

இது எப்படி முடிகிறது ?

உள்ளுணர்வு இரண்டு விதங்களில் செயல் படுகிறது.

முதலாவதாக டாக்டர் குருசாமி முதலியார் எத்தனையோ நோயாளிகளைப் பார்த்திருக்கிறார். மனித முகம், கை கால், நடந்து வரும் விதம், தோற்றம் இவற்றையெல்லாம் பார்த்துப் பார்த்து இப்படி இருந்தால் இதுதான் நோய் என்று நூற்றுக்கணக்கான

அநுபவங்கள் ஆழ் மனத்திலே பதிந்து போயிருக்கின்றன.

பழைய அநுபவங்களின் முடிவை வைத்து இப்படி இருந்தால் இதுதான் காரணம் என்று மனம் சட்டென்று ஒரு முடிவுக்கு வருகிறது; ரிப்பேர் செய்து பழகிய ஒரு மெக்கானிக் எங்கே பிரச்னை என்று உணர்ந்து அதைப் போய் உடனடியாகத் தொட்டுப் பழுது பார்ப்பது போல.

'டிப்டாப்'பாகக் கோட்டும் சூட்டும் அணிந்த ஒரு மனிதரைப் பார்க்கும் போது அதே போன்ற மனிதர்கள் எந்த வகையைச் சேர்ந்தவர்கள் என்கிற முன் அநுபவம் நம்மைத் தயார் செய்து விடுகிறது. "இவர்கள் அதிகாரிகள். எதிலும் 'கரெக்'டாக பேசுவார்கள். பணிவை எதிர்பார்ப்பார்கள். அதிகாரத்தை நேரடியாகவும் மறைமுகமாகவும் செலுத்துவார்கள். தாங்கள் உயர்ந்தவர்கள் - வேறுபட்டவர்கள் - என்கிற எண்ணத்தை நம் மனத்தில் ஏற்படுத்துவார்கள்" என்கிற அநுபவ உணர்வு நமக்கு ஏற்படுகிறது. அடுத்த முறை இப்படிப்பட்ட ஒரு கோட் சூட் போட்டவரைப் பார்க்கும் போது முன்பு அத்தகைய மனிதர்கள் எழுப்பிய அதே "அதிகாரிகள் என்கிற உணர்வு" நம்மையறியாமல் எழுகிறது.

'சல்வார் கமீஸ்' போட்டுத் தலையை ஒரு மாதிரியாக வாரி இருக்கும் ஒரு பெண்ணைப் பார்க்கிறோம்; ஒரு கூறைப் புடவையை கணுக்காலுக்கு மேல் கட்டி, ரவிக்கையைக் கூட அணியாத ஒரு கிராமப் பெண்ணைப் பார்க்கிறோம். இருவரையும் முதல் முறை தான் பார்த்தாலும் இருவரிடமும் நாம் வெவ்வேறு அணுகுமுறையை அனுசரிக்கிறோம். ஏன்?

அந்த நடை, உடை, பாவனை, தோற்றம், பாணி எல்லாம் நம்முன் சிற்சில விஷயங்களைத் தெரிவிக்கின்றன. அந்த விஷயங்களைப் புரிந்து கொள்ளு முன்னதாகச் சில உணர்வுகளை எடுத்த எடுப்பில் தோற்றுவிக்கின்றன.

நமது அநுபவங்களின் முடிவுகளைத்தான் ஆழ் மனம் தெரிவிக்கிறது. நமது அநுபவங்களிலிருந்து நாம் கற்றுக்கொள்ளும் பாடத்தின் தொகுப்பைச் சூசகமாக ஓர் உணர்வாக – ஜீவன் தெரிவிக்கிறது. அதைப் புரிந்து கொள்ள நாம் பழகிக் கொள்ள வேண்டும்.

இரண்டாவதாக, ஆழ்மனத்தில் நமது விருப்பு வெறுப்புகள், ஆசைகள், லட்சியங்கள், பொறாமை, வஞ்சினம், காமம் என்பன போன்ற பல விஷயங்கள் ஆழ்ந்து பதிந்து கிடக்கின்றன. அவை சதா நம்மைப் பற்றி வெளி உலகிற்கு நம்மையறியாமல் பிரகடனப் படுத்திக் கொண்டிருக்கின்றன. காமத்தின் வேகம் கண்களில் புலப்படுகிறது. துக்கத்தின் சோகம் முகக் கோடுகளில் தெரிகிறது. அலட்சியத்தின் முத்திரைகள் முக பாவத்திலும் பாவனைகளிலும் வெளிப்படு கின்றன. நாம் கொண்டிருக்கும் எண்ணங்கள் ஆழ்ந்து வலிமை பெற்றுப் பழக்கமாக ஆகிவிடும் போது அவை உணர்வுகளாக வெளிப்படுகின்றன. ஞானியைப் பார்க்கிறோம். அருளுணர்வு நம்மைத் தொடுகிறது. முன்னுக்கு வரும் இளைஞனைப் பார்க்கிறோம், ஒரு துடிப்பும் வேகமும் நம்மைத் தொடுகின்றன. ஒரு சிறுமியைப் பார்க்கிறோம். கள்ளங்கபடமில்லாத உள்ளம் நம் உணர்வைத் தொடுகிறது.

அதாவது, ஒவ்வொருவரும் "தாங்கள் யார்?" என்ற உணர்வைப் பறையடித்துக் கொண்டிருக் கின்றனர். இது சப்தமாக அல்லது வார்த்தையாக

வருவதில்லை. இது உணர்வாக ஜீவனிலிருந்து புறப்பட்ட வண்ணம் இருக்கிறது. புற நிகழ்ச்சிகளை எல்லாம் ஒதுக்கி விட்டு இந்த ஆழ்ந்த உணர்வு நிலையைப் புரிந்து கொள்ளக் கூடியவர்கள் 'இவர் இப்படிப்பட்டவர்' என்பதைப் புரிந்து கொள்கிறார்கள்.

வானொலி நிலையம் போலச் சதா சர்வ நேரமும் ஒரு மனிதனின் பழக்க வழக்கங்கள் - குணங்கள் - அவனைப் பற்றிப் புரிந்து கொள்ளக் கூடியவர்களுக்கு விஷயங்களைக் கூறிக் கொண்டிருக்கின்றன. ஒரு மனிதன் தான் பேசும் வார்த்தை ஜாலத்தால், தான் காட்டும் பணிவும் பண்பும் மிகுந்த நடிப்பால் வெளி உலகை ஏமாற்றக்கூடும். இதைத் தாண்டிச் சென்று அவன் உள்ளுணர்வை யாரும் முயற்சித்தால் புரிந்துகொள்ள முடியும்.

ஒரு தனி மனிதனின் உள்ளுணர்வு அன்பு என்ற ஈர்ப்புச் சக்தி கொண்டதாய் இருக்கும்போது, தூய்மை என்ற வலிமை கொண்டிருக்கும் போது அது பிறரைத் தாக்குகிறது; பாதிக்கிறது; கவர்கிறது. அப்படிப்பட்டவர்கள் தான் மகாத்மா காந்தி, அன்னை தெரசா, மார்ட்டின் லூதர் கிங், ஆதிசங்கரர், புத்தர், ஏசு போன்ற மகான்கள்.

அந்த உள்ளுணர்வின் எல்லைக்குள் வந்தாலும் சரி, அந்த உள்ளுணர்வில் நாம் ஈடுபாடு கொண்டுள்ளவர்களாய் இருந்தாலும் சரி அது நம்மை ஊடுருவுகிறது.

அதே போல ஒரு நிறுவனமும் ஒரு நாடும் செயல்படுகின்றன. ஒரு நிறுவனத்தின் உள்ளுணர்வு என்ன? அங்குள்ள தொழிலாளர்களும் நிர்வாகிகளும் தாங்கள் வாங்கும் சம்பளத்துக்குப் பெருமைப்பட்டு

நன்றி காட்டி, தொழிலில் பெருமையுடன் ஈடுபட்டு, கவனத்துடன் பொருள்களைத் தயாரிக்கிறார்கள்; தாங்கள் வேலை செய்யும் நிறுவனத்தின் பெயரைச் சொல்லிப் பெருமிதம் கொள்கிறார்கள். இத்தகைய மனோபாவம் அங்கே நிலவுகிறது என்றால் அதை அந்த நிறுவனத்தின் பெயரிலே, பொருளிலே, விற்பனையிலே உணரலாம். அந்த நிறுவனத்தின் பொருளில் ஈடுபடும் அத்தனை பேருடைய நல்லுணர் வும் பெருமித உணர்வும் அந்த நிறுவனத்தைப் பற்றிப் பிரகடனப்படுத்திக் கொண்டிருக்கின்றன. அந்த நல்லுணர்வு அந்தப் பொருளைத் தொடுபவர்களை எல்லாம் தொடுகிறது; அந்தப் பொருளின் பெயரில், அந்த நிறுவனத்தின் பெயரில் இருந்தும் பரவுகிறது. விற்பனையும் லாபமும் அமோகமாகப் பெருகு கின்றன.

மாறாக, அங்கே உட்பூசல், காழ்ப்பு, வெறுப்பு, சோம்பல், பழிவாங்கும் உணர்வு இருக்கிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். அந்த நிறுவனமும் அதன் தயாரிப்புப் பொருட்களும் காலப்போக்கில் அந்தக் குணத்தைத்தான் அந்த உணர்வைத்தான் பரப்பும். நிறுவனம் வீழ்ச்சி அடையும்.

ஒரு நாடும் அப்படித்தான். எப்படிப்பட்ட தூய்மையான, நல்லெண்ணம் கொண்ட தலைவனை யும், அமைச்சரவையையும் பெற்றிருக்கின்றதோ அதற் கேற்ப உணர்வுகள் கடைசி மட்டம் வரை பாயும். அதைத்தான் நாட்டில் நாம் உணர்கிறோம்.

மேலிடத்தில் சூதாட்ட உணர்வு, சுயநல உணர்வு ஆணவ உணர்வு, லஞ்சம் தவறில்லை என்ற உணர்வு, நாம் பதவியிலிருக்கிறோம், சட்டத்தை மீறி எதையும் நாம் செய்து கொள்ளலாம் என்ற உணர்வுகள் இருக்கு

மானால் நாடு முழுதும் அரசாங்க அதிகாரிகளிடமும் அரசின் எல்லா மட்டத்திலும், கட்சியின் எல்லா மட்டத்திலும் அதுதான் பரவும். இதை யாரும் தடுக்க முடியாது. ஜீவனில் சீழ்ப்பிடித்ததென்றால் சீழ் நாற்றம்தான் அடிக்கும். இதை யாரும் மறைக்க முடியாது. உள்ளுணர்வை வெளி வேஷத்தாலும், வாய் ஜாலத்தாலும் மறைக்க முடியாது. அது தன்னைப் பரப்பிக் கொண்டே இருக்கும். அது தானே பரவிக் கொண்டு இருக்கும்.

நல்லெண்ணம் நல்ல பலன்களையும் தீய எண்ணங்களான சுயநலம், ஆணவம், லஞ்சம், வஞ்சினம், அதற்கேற்ற தீய - கொடுமையான - பலன் களையும் அளிக்கும். அதிலிருந்து யாரும் தப்ப முடியாது.

உள்ளுணர்வு என்பது ஜீவாத்மாவின் குரல்; ஆத்ம அடிப்படை. இவ்வுலகம் தூய்மையினாலும் அன்பினாலும், உண்மையினாலும்தான் செயல்படு கிறது. அந்தத் தூய்மையை, அன்பினை நமது கண் களாகக் கொண்டு வாழத்துவங்கும்போது இந்தப் பிரபஞ்சலயத்துடன் இணைந்து செயல்படுகிறோம். அதற்கு மாறான குணங்களை நம்பி நாம் செயல்படும் போது பிரபஞ்ச லயத்திலிருந்து தவறி, தறி கெட்ட பாதையில் சென்று, அதன் பலனை அநுபவிக்கிறோம்.

கோயில்கள் ஏன் சக்தி பெற்ற தலங்களாக இருக் கின்றன என்பதை ஒரு கணம் சிந்தித்துப் பாருங்கள்.

கோயிலில் ஏற்படும் புனித உணர்வும் தூய்மை உணர்வும், கட்டுப்பாடும், பக்தியும், அங்கே அந்த அம்மனின் மீது - ஆண்டவன் மீது - ஆவாகன மாகின்றன. ஒரு வகைப்பட்ட 'சக்தி' கள் அங்கே குவிக்கப்படுகின்றன. "பகவானே! நீர் வலிமையின்

வடிவானீர், எனக்கு வலிமையை அருளும்.” நீர் சக்தியின் வடிவானீர், எனக்கு சக்தியை அருளும் என்று எண்ணும்போது நம் உள்ளுணர்வின் வலிமையும் சக்தியும் அங்கே உருவெடுக்கின்றன. நாம் அதைத் தொடும்போது அது நம்மைத் தொடுகிறது.

நம் உள்ளுணர்வின் மூலம் ஆண்டவனையும் இப்பிரபஞ்சத்தையும் தொட முடியும். அதற்கு முன்பாக நம் உள்ளுணர்வை நாம் தொட, உணரக் கற்றுக்கொள்ள வேண்டும்.

# 7

# 'கரிஸ்மா' – இனம் புரியாத கவர்ச்சி

**ஏ**ன் நான் கவரப்படுகிறேன் என்பது எனக்கே தெரியவில்லை. எனினும் என் கண்கள் அகல விரி கின்றன. கண்களில் கூட ஒரு துள்ளல்; ஒரு மின்னல். என்னிடமிருந்து ஏதோ ஒன்று ஓடுகிறது; அங்கே உள்ள ஏதோ ஒன்றைத் தொட விரும்புகிறது. அதில் மூழ்கித் திளைக்க, நான் என்னை மறந்து போகிறேன்.

"அவள் ஒரு பெண்; அதனால் தான்" என்று சொல்ல மாட்டேன். ஏனெனில் இது காமக் கவர்ச்சி யல்ல. அழகு என்றிட மாட்டேன் – ஏனெனில் இவரை விட அழகு பிம்பங்களை எல்லாம் பார்த் திருக்கிறேன். கண்கள், முகம், மூக்கு, உதடு, பேசும் மொழி, நடை, உடை, பாவனை, சிரிக்கும் கிளுகிளுப்பு என்றெல்லாம் என்னால் அடையாளம் காட்ட இயல வில்லை.

எனினும் ... எனினும் ... நான் ஈர்க்கப்படுகிறேன்.

இந்த ஈர்ப்பு சக்தி புவியீர்ப்பு சக்தியை விட பெரிதாக இருக்க வேண்டும். மின் காந்தத்தை விட வலு படைத்ததாய் இருக்க வேண்டும். கோடி சூரியப்

பிரகாசத்தைவிட என் அறிவைக் குருடாக்கி மயங்க வைக்கும் சக்தி கொண்டதாய் இருக்க வேண்டும்.

இவர்(ள்) மனிதனா அல்லது தேவதையா — எனக்குப் புரியவில்லை. கையில் மந்திரக் கோலை நான் பார்க்கவில்லை. கோல் ஆடாத போதும் என் மனம் ஆடுகிறது. தான் பாடாத போதும் என்னைப் பாட வைக்கிறாள்.

பார்த்த மாத்திரத்திலே என்னவோ நடக்கிறது. “பட்ட மரம் துளிர்க்கும் பார்வை உடையவளே” என்று பாடினார் கொத்தமங்கலம் சுப்பு. காதலையோ — கவர்ச்சியையோ — காணவில்லை கவிஞன் பாரதி; பாடினான்:

ஞான ஒளி வீசுதடி, நங்கை நின்றன் சோதிமுகம்

காமக்கவர்ச்சியல்ல அங்கே! ஞான ஒளி! அந்த ஞான ஒளியிலே தனனை மறந்தான்.

விக்கிரமாதித்தனது சிம்மாசனம் புதைக்கப் பட்ட மண் மீதிருந்து கூட புத்திசாலித்தனம் வெளிப் பட்டது போல இவர்கள் ஏதோ ஒன்றைப் பரப்பிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு காந்தி, ஒரு புத்தர், ஒரு ரமணர், ஞானிகள் யோகிகள் என்றில்லை. ஒரு டி.ஆர். ராஜகுமாரி, ஒரு எம்.கே. தியாகராஜ பாகவதர், ஒரு எம்.ஜி.ஆர், ஒரு ஜான் கென்னடி, ஒரு பாரதி என்று கவர்ச்சிப் பட்டியல் நீள்கிறது.

அழகைத் தாண்டி, அறிவைக் கடந்து, பெண் மைக்கும் நமக்கும் அப்பால், ஏதோ ஒரு கவர்ச்சி - இனம் புரியாத கவர்ச்சி — என்னை ஆட்கொள்கிறது. ஆட்டுவிக்கிறது. நான் என்னை மறக்கிறேன் - ஐக்கிய மாகிறேன்.

மூலாதாரத்தின் ஒரு முக்கிய பகுதியோ இது?

ஞானிகளும் — யோகிகளும் தரும் மன அமைதியையும் தியானமும் யோகமும் தரும் மன நிறைவையும் உலக இயற்கையின் அழகெல்லாம் கொடுக்காத ஒரு உணர்வை, தெய்வீக அனுபவத்தை நான் பெறுகிறேன்.

தெய்வம்தான் மனித ரூபத்தில் வந்திருக்கிறதோ?

அவர்கள் எங்கோ? நான் எங்கோ? காலத்தைக் கடந்து வந்து என்னைத் தொடுகிறார்கள்.

யோசித்துப் பார்க்கும் வேளையில் – என் மன எண்ணங்கள் தான் எல்லாவற்றிற்கும் காரணம். என் மனம் பாதிக்கப்பட்டு, ஊடுருவப்பட்டு, மாற்றங்கள் பெற்று ஒரு புதிய பரிமாணத்தில் நிற்கின்றது. இது எனக்குள் ஏற்பட்ட அனுபவம். நான் பார்த்த விதத்தில் ஏற்பட்ட இன்ப மயக்கம்.

ஒரு விஞ்ஞான அணுகுமுறையில் பொருள்களைப் பகுத்துப் பிரித்து அலசி எடுத்து வைப்பது போல இந்த இனம்புரியாத கவர்ச்சியின் அடிப்படை என்ன, மூலம் என்ன, எதனுடைய திரட்சி இது, இதன் பகுதிகள் யாவை என்று என்னால் தனியே எடுத்துப் பார்வைக்கு வைக்க முடியுமா?

முயன்றிருக்கிறார்கள். முயன்று பார்ப்போம்.

எனக்கு 28 வயது அப்போது. மதிப்புக்குரிய பதவி—உதவிப் பேராசிரியர். மனைவி - குழந்தை என்ற குடும்ப அந்தஸ்து, சமூக அந்தஸ்து.

போய்க் கேட்கிறேன்; காருகுறிச்சி அருணாசலம் ஊதுகிறார் நாதஸ்வரத்தை எடுத்து. புல்லாங்குழல் எப்படி கிருஷ்ணன் வாயிலிருந்து கோபியரை மயக்கியதோ நான் அறியேன்; கட்டுண்ட பாம்பை நான் பார்த்ததில்லை: அது மெரினா கடற்கரையாகப்

படவில்லை. தேவலோகமாக இருக்கிறது. எங்கோ சஞ்சாரம் செய்கிறார். நானும் அவருடன் செல்கிறேன்.

கச்சேரி முடிந்ததும் சிறுபிள்ளை போல என்னை மறந்து மேடைக்குங் கீழ் நின்று அவரை அண்ணாந்து பார்க்கிறேன். தரிசிக்கிறேன். 'இவர் சாதாரண மனிதரல்ல!" என்ற எண்ணம் — அசைக்க முடியாத நம்பிக்கை.

'கரிஸ்மா' எனப்படும் இனம் புரியாத கவர்ச்சி இதுதான்.

அவர்களுடைய தனித்தன்மை, புதுமை, நீங்களும் நானும் பார்க்காததைப் பார்க்கிறார்கள். நீங்களும் நானும் கேட்காததை எல்லாம் அவர்கள் காது கேட்கிறது. ஒரு தொலை நோக்கு. ஒரு கற்பனை உலகம்.

ஒரு ஊதுகுழலை வைத்துக்கொண்டு இப்படிப் பட்ட சித்து வேலையா? நாம் அதிசயிக்கிறோம்.

கதை எழுதும் நான்தான் கற்பனை உலகில் எல்லோரையும் அழைத்துச் செல்பவன் என்பதல்ல உண்மை; அவர் என்னை இதுவரை நான் காணாத புது உலகிற்கு அழைத்துச் செல்கிறார்.

இது ஓர் புது அச்சு.

இது ஓர் புது முத்திரை.

இவர் உண்டு பண்ணுவது தனி உலகம்.

இதற்குமுன் யாரும் இப்படிச் செய்ததில்லை.

இவர் ஒரு அசல்; போலியல்ல.

இவர் ஒரு மூலம்; பகுதியல்ல.

அவர் அவராக இருக்கிறார். அதுதான் ரகசியம்.

அவர் தன் திறமையை, வலிமையை உணர்ந்து கொண்டார்; அதுதான் ரகசியம். அதைத் தனக்கும் பிறருக்கும் இந்த உலகத்திற்குமாக வாரி வழங்குகிறார்; அதுதான் ரகசியம்.

உள்ளே செல்லுங்கள்! ஆத்மா என்ன தெரிவிக்கிறது, கேளுங்கள். எந்தச் சட்டையை போட்டுக் கொண்டால் உங்களுக்கு திருப்தி ஏற்படுகிறது, அணியுங்கள். எந்தப் பாட்டை விசில் அடித்தால் மனம் உல்லாசம் பெறுகிறது, செய்யுங்கள். அதுதான் நீங்கள்.

உங்களைப் போல் வேறு ஒருவரையும் ஆண்டவன் அதே அச்சில் படைக்கவில்லை. நீங்கள் பிறந்திருப்பதற்கு காரணம் இருக்கிறது. தெரிந்து கொள்ளுங்கள். புத்தகம் பிடிக்கிறதா? புத்தகங்களால் சூழ்ந்திருங்கள். மலர்களின் வாசமும் அழகும் உங்களைக் கவர்கிறதா? ஒரு கூடைப் பூவுக்கு 'ஆர்டர்' கொடுங்கள்.

அதுதான் உங்கள் தனித்துவம்.

தனித்துவம் 'கரிஸ்மா'வைத் தருகிறது.

கரிஸ்மா உள்ளவர்கள் துணிவு கொண்டவர்கள். அது ஜான் கென்னடியாக இருந்தாலும் சரி, ஜோன் ஆப் ஆர்க் ஆக இருந்தாலும் சரி. துணிவு அவர்கள் ரத்தத்தில் ஓடுகிறது.

நெப்போலியன் குள்ளம்தான். இரவு பகலாக அவன் திட்டம் தீட்டுவான். தன் துருப்புக்களை மனத் திட்டத்தில் இடம் மாற்றுவான்.. வெற்றி காண்பதைக் கற்பனை செய்வான். நெப்போலியன் வீரனாக வாழ்ந்தான்; சரித்திரத்தில் உலவுகிறான்.

துணிவு என்பது வெறும் வாள் வீசும் வீரமல்ல; மாறாக வெறும் தன்னம்பிக்கை மட்டுமல்ல. அவர்கள்

ஏதோ ஒன்றை நம்புகிறார்கள். ஏதோ ஒன்று அவர்களை உந்துகிறது. அவர்கள் செயல்படு கிறார்கள்.

சவால்கள்—அவர்களுக்கு அல்வாத் துண்டு. அதில்தான் வாழ்வின் அர்த்தத்தைப் பார்க்கிறார்கள்.

அவர்களுக்கும் நம்மைப் போல் அச்சம், சுய சந்தேகம், கவலை எல்லாம் இருக்கிறது. அவர் களுடைய வாழ்விலும் எத்தனையோ ஏற்றத் தாழ்வுகள். எனினும், அவர்கள் விமரிசனத்தைப் பற்றி கவலைப்படுவதில்லை.

கரிஸ்மா படைத்தவர்கள் துணிவு மிக்கவர்கள்; போராடுபவர்கள்; எதிர் நீச்சல் போடுபவர்கள்; ஊர் உலகம் ஏற்றுக் கொள்ளாத ஒரு நியாயத்தை அவர்கள் எடுத்துக் கொண்டு வாழ்வை அர்ப்பணிப்பவர்கள்.

காதலாகட்டும். கண்டனத்தை எதிர் கொள்வ தாகட்டும். அவர்கள் எல்லாவற்றிலும் ஒரு உணர் வுடன் — ஒரு முழுமையுடன் — தீவிரமாக ஈடுபடுவார் கள். அது சாதாரண உணர்வல்ல; மறுகோடிக்குப் போகும் வெறியும் அல்ல. அது தன்னை அர்ப் பணித்து, தானே அதுவாகிப் போகும் ஈடுபாடு.

அவர்களுக்கு தாங்கள் முத்துக் குளிக்கப் போவது தெரியும். அது அவர்களுக்கு இயல்பான ஒன்று. எனவே அலட்டிக் கொள்ள மாட்டார்கள். மூழ்கி முத்தெடுப்பதிலே ஒரு லாகவம், ஒரு கம்பீரம், ஒரு அழகு.

அண்ணாதுரை பேசுகிறார் என்றால் அங்கே ஆணவம் இருக்காது; அகங்காரம் இருக்காது; தன்னை முன்னிறுத்திக் கொள்ளமாட்டார்.

எளிமையாக, தெளிவாக சொல்வார். நாம் பார்க்காத கோணத்தை பார்த்துச் சொல்வார். கேட்டு கிறுகிறுத்துப் போவோம்.

“இவ்வளவு நேரம் விவாதம் நடத்தி இருக்கிறீர் களே, களைத்துப் போயிருப்பீர்களே?” என்று கேட்டேன். ஒருமுறை. “இல்லை. இப்போதுதான் இன்னும் அதிக உற்சாகமாக இருக்கிறது!” என்றார்.

காரணம் — எடுத்துக்கொண்ட காரியத்தில் உள்ள ஆழ்ந்த ஈடுபாடு தந்த மனநிறைவு தான் புத்துணர்ச்சிக்கு காரணம்.

காசினி என்றோர் உடை அமைப்பாளர் (Fashion Designer) இருந்தார். அழகானவர் அல்ல. ஆனாலும், அவர் இருக்கையிலிருந்து எழுந்தால்கூட அதில் கவர்ச்சி மின்னும்; நளினம் தெறிக்கும். மிகப்பெரிய புகழ் பெற்ற சினிமா நட்சத்திரங்களை எல்லாம் கவர்ந்தவர்; மணந்து கொண்டவர்.

“ஐயா! எப்படி உங்களால் இப்படிப் பலரையும் கவர முடிகிறது?” என்று கேட்டபோது சொன்னார்.

“எனக்குத் தெரியும். நான் அழகற்றவன் என்பது. எனவே நான் எனது மற்றைய திறமைகள் மூலம்தான் பிறரைக் கவர வேண்டும். பெண்களை நான் விரும்பி உபசரிப்பேன். மனமறிந்து நடந்து கொள்வேன். மிகுந்த மரியாதை காட்டுவேன். அவர்கள் சொல்வதை காது கொடுத்துக் கேட்பேன். அவர்களுக்கு அவகாசம் கொடுப்பேன், ஒரு முடிவுக்கு வர. நான் உண்மை யிலேயே அவர்களை நேசிக்கிறேன் என்பது அவர் களுக்குத் தெரியும்” என்றார்.

கரிஸ்மாவிலே உயிர்த் துடிப்பு இருக்கிறது. அவர் களது லட்சியம், அவர்களது உயிர்த்துடிப்பாக

உடம்பின் ஒவ்வொரு செல்லிலிருந்தும் வெளிப்படுகிறது. அதன் வலிமை எல்லோரையும் தொடுகிறது. ஈர்க்கிறது.

"ஆத்மா காணும் லட்சிய தரிசனத்தில் விழிப்புற்ற தேவதைகளின் சிலிர்ப்புக்கள் கேட்கின்றன" என்று எழுதுகிறார் தத்துவ ஞானி ஜேம்ஸ் ஆலன். தேவனாக உலவுங்கள்! தேவதைகளாகக் கவருங்கள்!

# 8

# தம்பீ, நில்! எங்கே ஓடுகிறாய்?

**தம்பீ, நில். எங்கே ஓடுகிறாய்? ஏன் இந்த ஓட்டம்? ஏன் இந்த அவசரம்?**

*"ஆங்! எல்லோரும் ஓடுகிறார்கள்; ஆகவே அதைப் பார்த்து நீயும் ஓடுகிறாயா?*

*"ஓடு, ஓடு!" என்று என்னைத் தூண்டி விட்டு விட்டார்கள் எனது அலுவலக பயிற்சி முகாம்களில் என்று சொல்கிறாயா?*

*"ஓடாவிட்டால், எல்லோரும் என்னை விட்டு விட்டு ஓடி விடுவார்கள். நான் பின்னுக்கு தள்ளப் படுவேன்!" என்ற பயமா?*

*எங்கே ஓடுகிறாய்?*

*லட்சியத்தை அடைய?*

*லட்சியம் என்கிற கடைசி நிலை முக்கியமானது தான்.*

*ஆனால் செய்யும் பயணம் சுகம் தர வேண்டும்.*

*வாழ்வின் முடிவை நோக்கி ஓடுகிறோம்.*

*ஆனால் வாழ்கின்ற நாம் அதை அனுபவிக்க வேண்டாமா?*

ஒரு கதை படித்தேன்.

என்னைச் சிந்திக்க வைத்த கதை.

அவள் ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி. அமெரிக்காவில் வழக்கறிஞராகப் பணி புரிகிறார். கம்பீரமான ஒரு நிர்வாகியின் உடை. கையிலே ஒரு தோல் பெட்டி. வேகமாக முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் எடுப்பான தோற்றம். அதிகாரமும் கட்டுப்பாடும் அவளைச் சுற்றிக் காற்றில் மிதப்பது போல் தெரிந்தது.

வீட்டுக்கு வந்தாள். அவளது மகன் வால்டர் ஓடி வந்தான். அவனைத் தடவிக் கொடுத்தாள். ஏதோ கேட்டாள். "சாப்பிட்டாயா? நல்ல பையனாக இன்று நடந்து கொண்டாயா?" என்று.

தன் பெட்டியைத் திறந்தாள். போன் விலாச புத்தகத்தை எடுத்தாள். டெலிபோனை சுழற்றினாள், தலை மயிரைத் தள்ளியவாறு.

"அம்மா!" என்றான் குழந்தை.

"அம்மா போன் செய்யப் போகிறேன்; நீ மாடிக்குப் போய் விளையாடு!" அம்மாவின் கட்டளை.

வால்டர் பதில் பேசவில்லை. மாடிக்குப் போக நடந்தான்.

ஒரு யோசனை. பாதிப்படியேறியவன் ஒரு கணம் திரும்பினான்.

"அம்மா அந்த புத்தகத்தில் என்ன இருக்கிறது?"

"இதில் முக்கியமானவர்களின் விலாசமெல்லாம் இருக்கிறது. நான் சிலருடன் இப்போது பேசவேண்டும்!"

வால்டர் தயங்கியவாறே கேட்டான்.

"அம்மா... அதில் என் பெயர் இருக்கிறதா?"

அதைப் படித்ததும் என் பொறியில் அடித்தாற் போலிருந்தது. லிண்டாவும் ரிச்சர்டு அயரும் எழுதிய "வாழ்வில் சமநிலை" என்றோர் புத்தகம். நான் அங்கேயே நின்று விட்டேன்!

எதற்காக வாழ்கிறோம்?

வேலைக்காக வாழ்கிறோமோ?

இல்லை. வாழ்வதற்காக வேலை பார்க்கிறோமா?

குடும்பத்திற்காக சம்பாதிக்கிறோமா? ... இல்லை சம்பாதிப்பதை செலவழிப்பதற்காக குடும்பம் நடத்துகிறோமா? யோசித்துப் பார்த்தேன்.

ஓட்டம்! நெருக்கடி! போட்டி! "நேரமில்லை,"! - இதற்கெல்லாம் எது மூலம்?

ஏன் ஓடுகிறேன்? பிறர் கண்களில் நான் வெற்றி பெற்றவனாக இருக்க வேண்டும்; எனது காரையும், வீட்டையும், எனது தோல் பெட்டியையும் நான் உபயோகிக்கும் பேனாவையும் கண்டு அவர்கள் பிரமிக்க வேண்டும்!

இதுதான் என் ஜீவதாகம்!

ஆசை!

தேவை!

நான் ஆசையின் பின்னால் ஓடுகிறேன்.

இந்த ஊர் உலகத்தால், ஆசைகளின் பின்னால் ஓட நான் முடுக்கி விடப்பட்டிருக்கிறேன். எழுத ஒரு சாதாரண பேனா போதாதா? 185 அமெரிக்க டாலரில் ஒரு "மாண்ட் பிளாங்க்"! தேவையா?

மகாத்மா காந்தியின் உடமைகள் என்று, அந்த அறையில், அருங்காட்சியகத்தில் வைத்திருந்தார்கள்.

ஒரு ஜோடி செருப்பு, ஒரு மூக்குக் கண்ணாடி, அவர் உபயோகித்த கடிகாரம்.

எனது தேவை அதைவிட அதிகம்தான். எவ்வளவு அதிகம்? எது எல்லை? எல்லையை நான் வகுத்துக் கொண்டேனா? இல்லை, வகுத்துக் கொள்ளாமலே ஓடிக் கொண்டிருக்கிறேனா?

எனது நண்பர் டேவிஸ் ஒருமுறை பிளாரிடா என்ற மாநிலத்திற்குப் போனார். நாங்கள் இருந்த இடத்திலிருந்து 1200 மைல். காரிலே போனார். வேகமாக ஓட்டியதற்காக பல இடங்களிலே அவரை போலீசார் நிறுத்தி அபராதம் விதித்தார்கள்.

நான் கேட்டேன் டேவிஸை.

"ஒரு முறை அபராதம் போட்ட உடனேயே, தெரியவில்லையா வேகமாகச் செல்கிறோம் என்று?"

"தெரியும். நீ வேகமாகச் செல்லாவிட்டால் அந்த ஊரை அடைய முடியாது!"

நான் விக்கித்து நின்றேன், கேட்டு! வேகமாய்ப் போகாவிட்டால் போய்ச் சேர முடியாதாம்!

வாழ்வில் எது முக்கியம்? பத்திரமாய் உயிருடன் போய்ச் சேர்வதா? செத்தபின் போய்ச் சேர்வதா?

வீடா, நிலமா, சொத்துக்களா, பதவியா, பணமா, புகழா, வெற்றியா?

என் மனமே, "எது நிரந்தரம்?" என்று கேட்டுக் கொண்டிருந்தது.

இந்தியாவுக்கு வந்த அமெரிக்கர்கள் ஒரு சர்வே எடுத்தார்கள், 15 ஆண்டுகளுக்கு முன், இந்திய கிராமத்தில் வசிக்கும் மக்களது வருமானத்தை பிறநாட்டு மக்களது வருமானத்துடன் ஒப்பிட்டார்கள். நாம் மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்தோம்.

வந்தான் ஒரு அறிஞன்; கேட்டான் ஒரு கேள்வி.

"வாழ்வின் லட்சியமென்ன? சந்தோஷமாயிருப்பதுதானே? அந்த மகிழ்ச்சியில், மன நிறைவில், மனித உறவில், சிறு சிறு சாதனைகளில், உலகைப் புரிந்து கொள்வதில், ஊருக்கு உதவுவதில், கனவு காண்பதில், வாழும் வாழ்க்கை நெறிகளில், பிரபஞ்ச லயத்துடன் ஒன்றி இருப்பதில் அல்லவா இருக்கிறது.

"வருமானம் என்பது வாழ்வின் முக்கிய தேவை. ஆனால் அதுவே எல்லாமல்ல. வருமானம் குறைவாயிருந்த போதும் அது போதுமானதாக இருக்கும் போது, நாம் மகிழ்வு தரும் மற்றவற்றையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். நமக்கு ஒரு புது அளவு கோல் தேவை - ஒப்பிட" என்றான்.

"ஈதல் இசைபட வாழ்தல் மற்று ஊதியமில்லை உயிர்க்கு" என்றார் வள்ளுவர்.

என்ன சொல்கிறார் வள்ளுவர்.

"பிறருக்கு கொடுப்பதில் வாழ்வின் பயனைப் பெறுகிறேன். உலகுடனும், இந்தப் பிரபஞ்சத்துடனும் இணைந்து வாழ்வதில் நிறைவு பெறுகிறேன். என் உயிர் தன் உழைப்புக்கு பெறுகின்ற வெகுமதி - வருமானம் - அதுதான்" என்கிறார்.

என்ன வாசகங்கள்!

கொஞ்சம் நின்று யோசியுங்கள்!

மீண்டும் படியுங்கள்.

வாழ்வின் அர்த்தம் என்ன என்கிற உரை கல்லில் நம் செயல்களை சதா உரைத்துப் பார்த்த வண்ணம் நாம் செயல்பட வேண்டும்.

அர்த்தமற்ற விஷயங்களில் வாழ்வை விணடிப்பவர்கள் பலரை நான் கண்டிருக்கிறேன். வாதப் பிரதி

வாதங்களில் தங்கள் புலமையை வெளிப்படுத்து வதற்காக வாழ்கிறார்கள் அவர்கள். பிறரால் மெச்சப் பட வேண்டும் என்று வாதப் பிரதிவாதம் செய்பவன் தன்னைப் பற்றி தாழ்ந்த அபிப்பிராயம் கொண்டிருக் கிறான். பிறரால் மெச்சப்பட வேண்டும் என்ற ஏக்கத் தில் பிறரை எதிர்பார்க்கிறார்கள்.

**ஒரு சென் புத்தக் கதையைக் கேளுங்கள்:**

திபெத்தின் வடக்குப் பகுதியிலும் தெற்குப் பகுதியிலும் இரண்டு சென் புத்த மடங்கள். ஒரு நாள் சாலையில் வடக்கு மடத்து மாணவன் தெற்கு மடத்து மாணவனைச் சந்தித்தான்.

எங்கே போகிறாய் என்று கேட்டான்.

"காற்றடிக்கிற வாக்கில் என்று வந்தது பதில். வடக்கு மடத்து மாணவனுக்கு சந்தேகம் - "என்ன சொல்கிறான் இவன்?" தன் குருவிடம் போய்ச் சொன்னான் நடந்ததை.

"காற்றில்லாவிட்டால் எங்கே போவாய், என்று நாளை கேள்" என்றார் அவர். நாளை வந்தது. சந்தித் தார்கள்.

"எங்கே போகிறாய்?" என்ற அதே கேள்வி.

"கால் போகிற போக்கில்!" என்றான் தெற்கு மடத்தவன். இவன் எதிர்பார்த்த பதிலில்லை. இன்னும் திகைப்பு.

குருவிடம் மீண்டும் போய்ச் சொன்னான். "காலில்லா விட்டால் எங்கே போவாய் என்று நாளை கேள்!" என்றார் குரு.

மறு நாளும் வந்தது. "எங்கே போகிறாய்?" என்று கேட்டான். "கறி காய் வாங்க" என்று வந்தது பதில்!

வாழ்வில் நாம் எங்கெங்கோ போய்க் கொண்டிருக்கிறோம். அர்த்தமில்லாமல். தம்பீ! காரியத்தைப் பார்!

மகனே! உருப்படியான விஷயத்திற்கு வா! என்று சொல்லாமல் சொல்கிறது சென் புத்தக் கதை.

கொஞ்சம் யோசித்துப் பார்த்தோமானால் வாழ்வில் அர்த்தம் அர்த்தம்; பலன் பலன்; என்று நாம் ஓடிக் கொண்டிருக்க முடியாது. அர்த்தம் அர்த்தம் என்று மூளையைக் கசக்கிக் கொள்ளாதே. இங்கே இருக்கிறாய் அனுபவி.

இந்த கணத்தை அனுபவி.

அதோ பாம்பு நெளிந்து செல்வதைப் பார்!

காற்றினில் இலைகள் சலசலப்பதைக் கேள்.

ஓடையில் தண்ணீர் கூழாங்கற்களைத் தடவிக் கொடுப்பதைக் கவனி.

உடலுக்கும் மனத்திற்கும் ஏற்றதல்ல இந்த அவசரம். கடவுளே நம் கடைசி நாளுக்காக காத்திருக்கும்போது நீ ஏன் அவசரப்படுகிறாய்?

உலகம் இரு வேறு இயற்கை கொண்டது.

எல்லாமே இரண்டாகத்தான் இருக்கிறது. இன்ப – துன்பம், நன்மை – தீமை, பிறப்பு – இறப்பு என்று செல்கிறது. வாழ்வில் இரண்டு கோடிகள் உள்ளன. நாம் எந்த கோடிக்கும் செல்லக்கூடாது. "ஒரு கோடிக்கு சென்று ஆராய்கிறேன்" என்று கிளையின் நுனிக்குப் போனால் என்ன ஆகும்?

வாழ்வில் சமநிலை இருக்கிறது. அந்த இரண்டுக்கும் இடைப்பட்ட சமநிலையில் வாழ வேண்டும்.

வாழ்வில் கற்பனை இருக்கிறது. கற்பனை ஒரு புதிய உலகிற்கு - புலனாகாத உலகிற்கு - நம்மை அழைத்துச் செல்கிறது. புத்துணர்வு தருகிறது. "எனவே நான் கற்பனையிலேயே வாழ்வேன்" என்று ஒரு கலைஞன் தீர்மானிப்பானானால் அவனால் இந்த உலகில் வாழ முடியாது. இந்த உலகின் நெளிவு சுளிவு களை அறியாதவனாக - இவ்வுலகிற்கு லாயக்கற்ற வனாக - அவன் ஆகிவிடுகிறான்.

கற்பனையை அன்றாட வாழ்வில் சரியானபடி கலக்கும்போதுதான் வாழ்க்கை இனிக்கிறது. வாழ்வில் ஓட்டமும் வேண்டும்; அமைதியும் வேண்டும். சரியான கலவையை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

அமெரிக்கர்கள் பலரும் ஒரு துறையிலே நிபுணத் துவம் பெறுமளவுக்கு வல்லுநர்களாக விளங்கு கிறார்கள். ஆங்கிலத்திலே ஸ்பெஷலிஸ்ட் (Specialist) என்போம். தனக்குத் தெரியாத விஷயத்தை "தெரியாது" என்று சொல்லி விடுவார்கள். மாறாக இந்தியர்களில் பெரும்பாலானவர்கள் எல்லாவற்றை யும் தெரிந்து வைத்தவர்களாக இருப்பார்கள். பொதுவாக பலதரப்பட்ட விஷயங்களையும் அறிந்த வர்களாக இருப்பார்கள்; பேசுவார்கள். இவர்களை ஜெனரலிஸ்ட் (Generalist) என்பார்கள்.

அமெரிக்கர்கள் தங்கள் துறையில் நிபுணத்துவம் உடையவர்களாக இருப்பதனால் அவர்கள் அதிலே மேலே மேலே சென்று புதிய பொருட்களைக் கண்டு பிடிக்கிறார்கள்.

வாழ்வில் ஒரு துறை நிபுணத்துவமும் வேண்டும். பொதுவான அறிவும் வேண்டும். இந்தச் சரியான கலவையில்தான் வாழ்க்கை சோபிக்கிறது.

அதேபோல மனிதன் பொருள் - பொருள் என்று பணம் - காசு சேர்ப்பதிலேயே கவனம் செலுத்த முடியாது. சேர்ப்பதிலே கவனம் செலுத்தினால் என்று அனுபவிப்பது? பொருளின் தேவையைத் தாண்டி, நம் வாயையும் வயிற்றையும் கடந்து நம் மனத்திற்கு உணவளிக்கும் கலைகள் இருக்கின்றன. இசை, நாட்டியம், சிற்பம், ஓவியம், கவிதை, இலக்கியம், விஞ்ஞான மனோபாவம் என்று. இவை நம்மை உயர்த்துகின்றன. வாழ்விற்கு மெருகூட்டுகின்றன. வாழ்வின் நான்காம் பரிமாணத்து நறுமணமாக நம்மை மகிழ்விக்கின்றன. ஆப்பிரிக்க பழங்குடி மக்கள் கூட இசையிலும் நாட்டியத்திலும் ஆனந்தம் காண் கிறார்கள். வேட்டையாடுவதும் உண்பதும் மட்டுமே தொழிலாக அவர்கள் வாழவில்லை.

அதையும் கடந்து போனால் “நான் யார்?” இந்த பிரபஞ்சம் ஏன்? எனக்கும் அதற்குமுள்ள தொடர்பு என்ன? என்ற ஆன்மீக உணர்வுகள் நம்மை ஆட்கொள்ளுகின்றன. அதுவும் பொருள் தேவையைத் தாண்டிய ஒன்றுதான். நம் வாழ்வை ஒரு கலவையாக - அழகிய வண்ணச் சேர்க்கையாக - வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். சரியான கலவை - அதில்தான் வாழ்வின் முழுமை கிடைக்கிறது. வாழ்வு பூரணத் துவம் பெறுகிறது.

இந்தப் பிரபஞ்சத்தைக் கொஞ்சம் தொலைவி லிருந்து பாருங்கள். அங்கே எத்தனையோ நட்சத்திரக் கூட்டங்கள். எத்தனையோ நட்சத்திரக் கூட்டம் நிறைந்த பால் வீதிகள். நட்சத்திரங்களிலே அவற்றைச்

சுற்றி கோள்கள் – நட்சத்திரக் குடும்பம். எல்லாமே ஒரு ஈர்ப்பில் இயங்குகின்றன. அவை ஒன்றிடமிருந்து ஒன்று வெகு தூரத்திற்கு அகன்று போய் விடுவது மில்லை – நெருங்கி அணுகி பஸ்பமாகி மோதிக் கொள்வதுமில்லை. அவை அகலாது, அணுகாது இயங்குகின்றன.

ஒரு நிதானம், ஒரு சமநிலை!

அந்த நிதானத்தை, அந்த ஒழுங்கான இயக்கத் தைத்தான் பிரபஞ்ச லயம் என்று சொல்கிறோம். அந்த பிரபஞ்ச லயத்தில் நாமும் – நம் வாழ்வை ஒழுங்கு படுத்திக் கொள்வதன் மூலம் – ஒன்றி விடலாம், அப்போது நாம் இயற்கையோடிணைந்த வாழ்வை வாழ முடியும். ஒரு பூரணமான அனுபவத்தைப் பெற முடியும்.

ஸ்ரீலங்காவில், ஒரு காலத்தில் மூன்று இளவரசர்கள் பயணம் புறப்பட்டார்கள். செல்வந்தர் களாகத் திரும்பி வருவதுதான் அவர்கள் இலட்சியம். ஆனால் அவர்களோ எதிர்பாராத சொத்துக்களுடன் திரும்பினார்கள்.

**அவர்கள் கொண்டு வந்த சொத்து:**
**அன்பு, அழகு, அமைதி.**

# 9

# ஆன்மிக அடிப்படையிலிருந்து அன்றாட வாழ்வுக்கு...

## இதை உங்களிடம்தான் சொல்ல வேண்டும்

ஆன்மிக அடிப்படை உள்ள மனங்களில்தான் இது இடம் பெற வேண்டும். அப்போதுதான் இந்த விஷயம் உங்களுக்கும் பிறருக்கும் இந்த சமுதாயத் திற்குமாகப் பயன்படும். அப்போதுதான் உங்களைப் போல் நேர்மையுடன் வாழ்வை நடத்தும் மக்கள் அதிகமாவார்கள்.

## ஆன்மிக அடிப்படை

நேர்மை, உண்மை, சுதந்திரம், சமத்துவம், உதவும் உள்ளம், அழகையும் உலகையும் ரசிக்கும் ஆனந்த அனுபவம் – இவை இருப்பவர்கள்தான் ஆன்மிக அடிப்படை கொண்டவர்கள்.

இந்தப் பிரபஞ்சம் ஒரு லயத்திலே ஒன்றை ஒன்று ஈர்த்து ஒரு நெறியிலே இயங்குகிறது; அதேபோல் இந்த உலகம் ஒன்றை ஒன்று நம்பி, ஒன்றுக்கு ஒன்று உதவி யாக வாழ்கிறது என்பதைப் புரிந்து கொண்டவர்கள் அவர்கள்.

புல், பூண்டு, செடி, கொடி, தாவரம், விலங்கினம், கடல், காற்று, ஒளி, நதி, மலை என்று எல்லாமே ஒன்றுக்கொன்று உதவியாக வாழத்தான் படைக்கப் பட்டிருக்கிறது. இதுதான் பிரபஞ்ச உண்மை.

பகை, வெறுப்பு, ஏமாற்று, வஞ்சகம், பொறாமை, பேராசை, கஞ்சத்தனம், ஆணவம் போன்ற தீய குணங் களை அகற்றி — அகற்ற முடியா விட்டால் அவை களைக் கட்டுப்படுத்தி — ஒரு சமநிலையுடன் வாழ் கிறார்களே — எதையும் சிரிப்புடனும் மகிழ்வுடனும் எடுத்துக்கொள்ளும் பக்குவம் பெற்றிருக்கிறார்களே — அவர்களைத்தான் ஆன்மிக அடிப்படை கொண்ட வர்கள் என்று சொல்கிறோம்.

பகை, வெறுப்பு முதலிய கெட்ட குணங்க ளெல்லாம் இயற்கை லயத்தின் விரோதிகள். இதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

நல்லெண்ணம், நன்மை, அன்பு, பொருட் செல்வம், அமைதி, ஆனந்தம் ஆகியவையெல்லாம் நம்மை வந்தடைவதைத் தடுக்கும் சுவர்கள் இந்தக் கெட்ட எண்ணங்கள் என்பதை உணர்ந்திருக்கிறார் களே — அவர்களைத்தான் ஆன்மிக அடிப்படை உடையவர்கள் என்று நாம் சொல்கிறோம்.

ஒரு ரகசியத்தை, ஒரு மந்திரத்தை, யாரிடம் சொல்ல வேண்டும்? யார் அதை வைத்துக் காப்பாற்று கிறார்களோ, பயன்பெறுவார்களோ, பயன்பெற்று பிறருக்கும் உதவுவார்களோ அவர்களுக்குச் சொல்ல வேண்டும்.

அதனால்தான்—

இதை உங்களுக்குச் சொல்ல வேண்டும்.

## காரண காரிய உலகம் (Cause and Effect)

இந்த உலகில் எதுவுமே காரண காரியத் தொடர்புடன்தான் நிகழ்கிறது.

ஒவ்வொரு காரியத்திற்கும் ஒரு காரணம் இருக்கிறது.

ஒவ்வொரு காரணமும் ஒரு காரியத்தை நிகழ்த்துகிறது.

செடி முளைக்கிறதென்றால் அதற்கு விதை தான் காரணம். இரவு பகல் வருகிறதென்றால் சூரியன் தான் காரணம். இன்று ஒரு வேலையில் — பதவியில் — நீங்கள் இருக்கிறீர்கள் என்றால் நீங்கள் எடுத்த முடிவுதான் அதற்குக் காரணம்.

நீங்களும் நானும் இந்த உலகில் வந்து பிறந்திருக்கிறோம் என்றால், இதற்கும் ஒரு காரணம் இருக்க வேண்டும்.

அதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். அதை நாம் கண்டுபிடிக்க வேண்டும். 13.ஆவது வயதிலேயே இதை — தானே — சுயமாகக் கண்டு பிடிக்கத் துவங்கினர் ரமணர். இதைக் கண்டு பிடித்து அதைத் தன் வாழ்க்கையாக்கியவர் மகாத்மா காந்தி.

"அப்படி எல்லாம் பெரிய பெரிய மனிதர்களைப் போல் என்னால் ஆக முடியுமா?" என்று நீங்கள் கேட்கலாம்; அந்த சந்தேகம் உங்கள் மனதில் எழலாம்.

## உள் வளர்ச்சியும் உடல் வளர்ச்சியும்

மனிதத் தன்மையும் வளர்ச்சியும் பதவியிலிருந்தோ, புகழிலிருந்தோ எடை போடப்படுவதல்ல.

ஒருவன் படகோட்டியா, பணக்காரனா என்பதல்ல முக்கியம்; ஒரு சாதாரண குடும்பத் தலைவியா அல்லது பெரிய ஞானியா என்பதல்ல முக்கியம்.

நாம் உயர்ந்துகொண்டே போவதற்குரிய ஒரே வழி நமது கடமைகளை நாம் செய்வதுதான். அப்படிச் செய்வதன் மூலம் வலிமையைப் பெருக்கிக் கொள்ளலாம்; உயர்ந்த நிலையை அடையலாம்.

முனிவர் கொங்கணவர் உச்சி வெயிலில் நடந்து போகிறார். மேலே பறக்கும் கொக்கு அவர் மீது எச்சமிடுகிறது. கோபம் வருகிறது கொங்கணவருக்கு. அண்ணாந்து கோபத்துடன் பார்க்கிறார். கொக்கு எரிந்து சாம்பலாகிறது.

பிறகு அவர் பிக்ஷைக்குப் புறப்படுகிறார். ஒரு வீட்டின் முன் நின்று உணவுப் பிக்ஷை கேட்கிறார். ஒரு முறை குரல் கொடுக்கிறார், இரண்டு முறை குரல் கொடுக்கிறார், மூன்று முறை குரல் கொடுக்கிறார்.

வீட்டுப் பெண்மணி வெளியே வரக்காணோம்.

அந்த வீட்டின் தலைவி தனது அருமந்த கணவனுக்கு அன்புடன் தொண்டு புரிந்து கொண்டிருக்கிறார். அது அவர் பணி. அந்தக் கடமையிலிருந்து மீள விரும்பவில்லை அவர். அது முடிந்த பின் பிக்ஷையுடன் வெளியே வருகிறார் அம்மணி. கோபத்துடன் நிற்கும் முனிவரைப் பார்க்கிறார்.

முனிவர் எதுவும் சொல்லுவதற்கு முன்பாக, அம்மணி கேட்கிறார்: "கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா?"

முனிவருக்குத் திகைப்பு.

“கொக்குக்கு நேர்ந்த கதி இவருக்கெப்படி தெரியும்?” என்று நினைக்கிறார். அந்தப் பெண்மணி யின் பாதங்களில் விழுகிறார்.

அதனால்தான் சொல்கிறார்கள், “ஓர் ஆத்மா வின் வளர்ச்சியையும் பக்குவத்தையும் அதன் உருவத் திலிருந்து, வயதிலிருந்து, பதவியிலிருந்து எடை போடாதீர்கள்!”

முனிசிரேஷ்டரை விட தவவலிமை பெற்றவர் அந்தக் குடும்பத் தலைவி. ஆனால் அவர் முனி புங்கவருக்குரிய புறவாழ்க்கையை மேற்கொள்ளாத வராக இருக்கலாம். பிறர் அறிய தன்னை அவர் காட்டிக் கொள்ளாமலிருக்கலாம்.

ஆக, நம்முடைய வளர்ச்சியும் மனப்பக்குவமும், நல்லெண்ணமும், உள்ளார்வமும்தான் மிகவும் முக்கியம்.

ஆதலால்தான் சுவாமி விவேகானந்தர், “எந்தக் கடமையையும் அலட்சியப்படுத்தாதீர்கள். தாழ்ந்த வேலையைச் செய்வதால், ஒருவன் தாழ்ந்தவன் ஆகி விட மாட்டான். எந்த வேலையைச் செய்கிறான் என்பதைக் காட்டிலும் எப்படிச் செய்கிறான் — என்ன மனோபாவத்துடன் செய்கிறான் — என்பதைப் பொறுத்தே மதிப்பிட வேண்டும்” என்று சொல்கிறார்.

நாம் மகாத்மா காந்தியாக இருக்க வேண்டிய தில்லை. அதேபோல் புகழ் பெற்றால்தான் நம் ஜன்மம் சாபல்யமடையும் என்பதில்லை.

இப்பூவுலகில் சிறு புல்லுக்கும் வேலை இருக் கிறது. உபயோகமிருக்கிறது; தேக்கு அல்லது தேவதாரு மரத்திற்கும் உபயோகமிருக்கிறது. இவ்வுலகில் வீட்டு

வேலை செய்யும் வேலைக்காரப் பெண்மணிக்கும் ஒரு தேவை - ஒரு உபயோகம் - ஒரு பணி இருக்கிறது; இந்த நாட்டின் தலைவன் அல்லது தலைவிக்கும் ஒரு உபயோகம், ஒரு பணி இருக்கிறது.

வேலையின் தன்மை முக்கியமல்ல.

வேலை செய்யப்படும் விதம் - மனோபாவம் - ஈடுபாடு அதுதான் முக்கியம்.

'செய்யும் தொழிலே தெய்வம்' என்று அதைத் தான் அற்புதமாகப் பாடுகிறார் கவிஞர் பட்டுக் கோட்டை கல்யாணசுந்தரம்.

இப்படி அற்புதமான உயர் மனிதர்களாகவோ அல்லது அற்புதமான மனோபாவத்துடன் சாதாரண பணிகளைச் செய்பவர்களாகவோ நாம் இருக்கலாம். இவை எல்லாம் - இந்த மனோபாவங்கள் எல்லாம் - மனிதனது உயர்நிலைத் தேவைகள்; அனுபவங்கள்.

### இது உலக வாழ்க்கை; பொருள் வாழ்க்கை

இந்த உயர்நிலைத் தேவைகள் — ஆன்மிக உணர்வுகள் — பிரபஞ்சம் — பிரபஞ்சலயம் — நமது பிறப்பின் லட்சியம் — நமது பணியின் தெய்விகம் என்றெல்லாம் சிந்தித்து மேகக் கூட்டங்களிலிருந்து கீழே இறங்கி வருவோமானால், இங்கே நாம் வாழும் உலகம் நம் கண் முன்னால் தென்படுகிறது. காய்கறிக் கடைகளைப் பார்க்கிறோம்; உப்பு மிளகாய் புளி வாங்க வேண்டியதை உணர்கிறோம்; நமக்கு வயிறு என்ற ஒன்று இருப்பதையும் நாம் நடைமுறை உலகில் அன்றாட வாழ்வு வாழும் நிலையில் இருப்பதையும் உணர்கிறோம்.

இதுதான் யதார்த்தம்; இதுதான் உண்மை நிலை. (Reality). நமக்குப் பசிக்கிறது; உடல் சம்பந்தமான உணர்வுகள் எழுகின்றன; உற்றார், உறவினர், அலுவலகம் என்ற ஓர் உலகம் நம்மைச் சுற்றி உலவுகிறது; அதற்கு ஈடுகொடுக்க வேண்டியிருக்கிறது. அதை எப்படி சமாளிக்கிறோம் என்பது முக்கியமான விஷயமாக இருக்கிறது.

"இருவேறு உலகத்து இயற்கை" என்றார் திருவள்ளுவர். இந்த உலகின் இயல்பு இரண்டு வகையாக நிற்கிறது. "திரு வேறு தெள்ளியராதல் வேறு" என்று முடிக்கிறார் வள்ளுவர்.

செல்வம் பெற்று இவ்வுலகில் நல்வாழ்வு வாழ்வது ஒரு விஷயம்; தெளிந்த ஞானம் பெற்றிருப்பது வேறு விஷயம். அது வேறு; இது வேறு.

"தெளிந்த ஞானம் பெற்றுவிட்டோம். அது போதும்; என்று இருக்க முடியாது தம்பி. தெளிந்த ஞானம் பெற்றால் போதுமா? வயிறு இருக்கிறதே, வாய் இருக்கிறதே, உடல் இருக்கிறதே!" ஆகவேதான் "செய்க பொருளை" என்று மற்றோரிடத்திலும் வள்ளுவர் கூறுகிறார்.

செல்வம் சேர்ப்பதும் — வாழ்வை வாழ வேண்டிய அறவழியிலே வாழ்வதும் அவசியம்.

இது பொருளினாலான உலகம். எனவே இங்கு பொருள் தேவை; செல்வம் வேண்டும்.

அதனால்தான் மீண்டும் "பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை" என்று கூறுகிறார் வள்ளுவப் பெருந்தகை.

"நீ பொருள் செய்யாவிட்டால் — செல்வம் சேர்க்காவிட்டால் இவ்வுலகம் உனக்கு இல்லை!" என்று தெள்ளத் தெளிவாகக் கூறுகிறார் அவர்.

பொருள் இல்லாவிட்டால் ஆன்மிக நெறி களைப் பரப்ப மடங்களால் இயலுமா?

சிந்தித்துப் பாருங்கள்.

எனவே இனி வருகின்ற அடுத்த கேள்வி அந்தப் பொருளைப் பெற நாம் என்ன செய்யலாம்; **நேர்மை யான வழியில்** பொருளைப் பெற என்ன செய்ய வேண்டும்?

பார்க்கப்போனால் — இந்தப் பொருள் என்ற விஷயம் — பணம், காசு, உணவு, காய்கறி, பழம், துணி மணி, வீடு, தண்ணீர் என்ற எல்லாமே ஜடப் பொருள் கள்தான்; நாம் பார்க்கக் கூடிய திடப் பொருள்கள் தான். புலனுக்குட்பட்ட விஷயங்கள்தான்.

## பொருள் தேவையிலிருந்து மீண்டும் புலனாகாத சக்திக்கு

ஆனால் இந்தப் புலனுக்குட்பட்ட விஷயம் — பொருள் விஷயம் — புலனுக்கு அப்பாற்பட்ட புலனா காத சக்தியிலிருந்து — மனோசக்தியிலிருந்து உருவாக்கப்படுகிறது என்பதுதான் உலக அதிசயம்.

பொருளை விரும்பும் நம் ஆசை — செல்வத்தைச் சேர்க்கும் நம் விருப்பம் — ஓர் எண்ணமாக நம் மனத்தில் விழுகிறது. அந்த எண்ணம் பார்க்க முடியாதது, கேட்க முடியாதது. அது ஒரு பொருள் அல்ல. சக்தி நிலையில் — ஒரு கணம் நிற்கும் ஒரு விஷயமாக மனதில் அது தோன்றுகிறது. அந்த ஆசை என்கிற எண்ணத்தைப் பிடித்து நிறுத்தி தேக்கி அதற்கு

வலுவூட்டினோமேயானால் (concentration) அந்தப் புலனாகா சக்தி வலிமை பெறுகிறது.

## நினைவு மனம்

ஆசை எழும்போது அது எங்கே தோன்றுகிறது? நம்முடைய நினைவு மனத்தில்.

எல்லா விஷயங்களும் எங்கே சிந்திக்கப்படுகின்றனவோ, தோன்றுகின்றனவோ, பரிசீலிக்கப்படுகின்றனவோ அந்த இடத்தை நினைவு மனம் என்கிறோம்.

நம் ஆசை — நம் எண்ணம் — எல்லாம் நம் நினைவுகள் தான்.

ஒரு மனிதன் தன் ஆசையைச் சொல்கிறான்.

"அப்படி ஓர் நினைப்பா உனக்கு?" என்று அடுத்தவன் கேட்கிறான். எண்ணம் அங்கே நினைவாக நிற்கிறது. அதாவது எண்ணம் தோன்றிய மாத்திரத்தில் மறைந்துவிடவில்லை; மறக்கப்படவில்லை. அங்கே நினைவாக — மீண்டும் ஞாபகத்திற்கு வரக்கூடிய நிலையில் — மீண்டும் நாம் எடுத்துப் பயன்படுத்தக்கூடிய நிலையில் — இருக்கிறது.

நம்மிடம் இல்லாத ஒன்றை நாம் ஆசைப்படுகிறோம். மனம் அதைப் படமாக கற்பனை செய்கிறது. கற்பனையை நாம் ரசிக்கிறோம். அந்தக் கற்பனை நம் மனதில் திரும்ப எழுகிறது. இந்த நினைவு, ஆசை என்ற உணர்வுடன் சேர்ந்து அதிக வலுப்பெற்ற நிலையில் நிற்கிறது. அதை 'உள்ளார்வம்' என்று கூறுகிறோம். இது எண்ணமும் ஆர்வமும் உணர்வும் சேர்ந்த ஒன்று. அடுத்து இது உள்ளே இருப்பது. எங்கே? நினைவு மனதிற்குப் பின்னால் — ஆழ்மனதில்.

### பகல் கனவுகள்; கற்பனைகள்

ஆழ்மனத்தில்தான் நமது கனவுகள் உருவாகின்றன.

மதிய நேரம். உண்ட மயக்கம். ஒரு சாய்வு நாற்காலியில் ஒரு புத்தகத்தையோ, செய்தித் தாளையோ வைத்துக்கொண்டு உட்காருகிறோம். திடீரென்று தூக்கம் கண்ணைச் சுழற்றுகிறது. எனினும் மீண்டும் படிக்க முயல்கிறோம். இடையிடையே மனதில் அரைத்தூக்க நினைவுகள்! — அவற்றைப் பகல் கனவுகள் என்கிறோம். நினைவு மனதிற்கு அடுத்த நிலையில் உள்ள இந்த இடத்தில்தான் நமது பகல்கனவுகள் உருவாகின்றன. உள்ளார்வம் என்பது ஆழ்மனதிலிருந்து நம்மை விரட்டுகிறது; தூண்டுகிறது; செயல்பட வைக்கிறது. அது சதா நமது ஆர்வத்தை உள்ளிருந்து நினைவூட்டிக்கொண்டே இருக்கிறது.

### உள்ளார்வமும் மெக்கிளல்லண்டும்

இந்த உள்ளார்வத்தைக் கற்பனைகள் மூலம் நாம் தூண்டிவிடலாம் என்பதும், அப்படித் தூண்டப்படும் போது நமது உள்ளார்வம் மேலும் வலுப்பெற்று சாதனை ஆகிறது என்பதும் மனவியல் உண்மைகள்.

இந்த உண்மைகளை ஆதாரத்துடன் கண்டு பிடித்து வெளியிட்டவர் ஹார்வர்டு பல்கலைக்கழகப் பேராசிரியர் டேவிட் மெக்கிளல்லண்ட் என்பவர்.

மனவியல் பேராசிரியராகிய அவர் 25 ஆண்டுகள் ஆராய்ச்சி செய்தார். பல நாடுகளில் பல வயதினராகிய குழந்தைகளை அவர் சோதித்தார்; வயது வந்தவர்களிடம் சோதித்தார். பல தொழில் செய்பவர்களிடம் இந்தப் பயிற்சியைக் கொடுத்துப் பார்த்தார்.

மனிதன், தான் எதை விரும்புகிறானோ அதை அடைய முடியும் என்பதையும், அடைவதற்கான வழி முறைகளை வலுப்படுத்தும் மார்க்கங்களையும் அவர் கண்டுபிடித்தார்.

"அது என்ன? ஐயா, உடனே சொல்லுங்கள்!" என்றுதானே நீங்கள் கேட்கிறீர்கள்.

புலனுக்குத் தெரியாத மனோசக்தி எப்படிப் புலனுக்குட்பட்ட பொருளாக மாறுகிறது (Energy to matter) என்ற அதிசயத்தை அடுத்துப் பார்ப்போம்.

# 10

# விஞ்ஞானிகள் பெற்ற ஞானம்

ஒரு சமயம் வடலூர் ராமலிங்க சுவாமிகளைப் பார்த்தேன்.

கற்பனையில்தான்!

அவர் பாடிக் கொண்டிருந்தார்.

தன்னை அறிந்து இன்பம் உற, வெண்ணிலாவே!
ஒரு தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே!

என்று.

"ஒரு தந்திரம் சொல்லிக் கொடு" என்று கேட்கிறார்.

"உன்னை நீ அறிந்துகொள்" என்று சாக்ரடீஸ் சொன்னார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்.

"நான் யார்? இது உடம்பா, ஜீவனா? இதில் ஓடிக் கொண்டிருக்கும் உயிர் ஏன் மூச்சு என்ற காற்றில் அடங்கி இருக்கிறது? இந்தக் காற்று நம்மை வெளி உலகுடன் இப்பிரபஞ்சத்துடன் இணைக்கிறதா?"

இப்படிப்பட்ட எண்ணங்கள்.

இதெல்லாம் என்ன விசாரணை? தேவை தானா? என்று சிலர் கேட்டார்கள்; கேட்கிறார்கள்.

வாழ்வைச் சரியாக வாழ நாம் யார், எங்கிருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டாமா?

**நாம் யார்? தெரிந்து கொள்ளுங்கள் முதலில்**

"நாம் யார்? நம்மிடமுள்ள கையிருப்பு என்ன? "இந்த மனத்தின் சக்திகள் என்ன? எதை நம் சொத்தாக நமக்குள் இயற்கை வைத்திருக்கிறது" என்பதைப் பற்றி எல்லாம் தெரிந்து கொள்ளாமல் நம் வாழ்க்கைப் பயணத்தை நடத்துகிறோம்.

ஒருநாள், வெள்ளிக்கிழமை. அமெரிக்காவில் பல்கலைக்கழகப் பகுதி. இரவு 10 மணி. நான் என் ரசாயன ஆராய்ச்சிகளை முடித்துவிட்டு "ஸ்டேட் தெரு" என்று சொல்லப்படும் முக்கிய வீதி வழியாக வந்து கொண்டிருந்தேன். மாணவர்கள் ஆணும், பெண்ணும் பேசிக்கொண்டும், சிரித்துக் கொண்டும், சாப்பிட்டுக் கொண்டும் கும்மாளமாக இருந்தார்கள். ஒரு மாணவன் ஒரு மாணவியின் கையைப் பிடித்துத் தெருவில் பரபரவென்று இழுத்துக்கொண்டு ஓடிக் கொண்டிருந்தான். ஒரு கணம் அவள் அவனை நிறுத்தினாள். சொன்னாள்.

"உன்னுடைய அறைக்குப் போகுமுன் உன் பெயரைச் சொல். தெரிந்துகொள்ள விருமபுகிறேன்!" என்றாள்.

அதாவது பெயரைக் கூடத் தெரிந்துகொள்ளு முன் அவ்வளவு அவசரம்!

நாமும் அப்படித்தான் ஓடிக் கொண்டிருக்கிறோம். நமது பெயர், விலாசம், வாழ்வின் அர்த்தம், வாழ்வின் காரணம், நாம் வாழும் உலகிற்கும், பிரபஞ்சத்திற்கும் நமக்குமுள்ள தொடர்பை எல்லாம் தெரிந்து கொள்ளுமுன் நாம் ஓடிக் கொண்டிருக்

கிறோம். பசி வயிற்றைக் கிள்ள, உணர்வுகள் நம்மை முந்த, மனம் நிகழ்பவற்றிற்குச் சமாதானம் சொல்ல இதையே நிஜம் என்று எண்ணி இதுதான் வாழ்க்கை என்று எண்ணி ஓடிக் கொண்டிருக்கிறோம்.

இதை எல்லாம் தெரிந்து கொண்டால் என்ன பயன் என்று நீங்கள் கேட்கலாம்.

வாழ்வினுடைய அடிப்படைக் குறிக்கோளே மனிதன் இன்பமாக, ஆனந்தமாக எல்லாவற்றையும் அனுபவித்து வாழவேண்டுமென்பதுதான். நம்மையும் நம்மைச் சுற்றியுள்ளவற்றையும் நன்கு புரிந்து கொள்ளும் போது தான் வாழ்வை அனுபவிக்க முடியும்.

அதேபோல, எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளும் ஜீவனின் ஆர்வம் இருக்கிறதே அதனால் தான் விஷயங்களை மனிதன் "புரிந்து" கொள்கிறான். புரிந்து கொள்ளும்போது (Awareness) விஷயங்கள் நம் கைக்குள் கட்டுப்பாட்டுக்குள் வருகின்றன. நம் கட்டுப் பாட்டுக்குள் வரும்போது வாழ்வை நாம் விரும்புகிற படி அமைத்துக் கொள்ள முடியும்.

வாழ்க்கை என்பது தேவனாகும் முயற்சி.

### பிரபஞ்ச லயம்

அது ஒரு தொடர்ந்த போராட்டம். தொடர்ந்த முயற்சி. நம்முள் இருக்கும் மகத்தான சக்தியை உணர்ந்து நமக்கும், பிறருக்கும் இந்தச் சமுதாயத்திற்கு மாக வாழக் கொடுக்கப்பட்டிருக்கும் வாய்ப்புதான் இந்த வாழ்க்கை. அதை எப்படி சாதிப்பது என்பதற்கு வெளி உலக இயக்கங்களையும், பிரபஞ்ச இயக்கத்தை யும் நாம் புரிந்து கொள்ளும் போது தான் நம்

வாழ்க்கையை சீராக இயங்கும் வண்ணம் நன்கு அமைத்துக் கொள்ள முடியும்.

அண்ணாந்து பார்த்தால் கோள்களும், நட்சத் திரங்களும் ஈர்ப்புச் சக்தியின் காரணமாக ஒவ்வோ ரிடத்திலிருந்து இயங்குகின்றன. கீழே குனிந்து அணு அணைப்பைப் பார்த்தோமானாலும் அதேபோல ஈர்ப்பு சக்தியால் கவரப்பட்டு அணுத்துகள்கள் இயங்குகின்றன. அதாவது மேலும், கீழும், புறமும், உள்ளும் - எல்லாம் ஒரே அமைப்பில் - ஓர் ஒழுங்கில் - ஒரே அடிப்படையில் இயங்குகின்றன.

பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு கோளும், நட்சத்திரமும் ஈர்ப்புச் சக்திக்குக் கட்டுப்பட்டு இயங்கு கின்றன. அவை அதே சமயத்தில் தனியாகவும் இயங்கு கின்றன.

நமது மானிட நிலையும் அப்படித்தான். ஜீவன் என்ற இந்தத் தனி சக்தி, தனித்தன்மை கொண்ட தாகவும் அதே சமயத்தில் பிறவற்றுடன் தொடர்பு கொண்டதாகவும்தான் அமைக்கப்பட்டிருக்கிறது. பிரபஞ்சத்தின் சிறு பகுதிதான் மனிதன். வேறு விதமாகச் சொன்னால் இப்பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் ஒன்றை ஒன்று சார்ந்து - நம்பி - உதவிக் கொண்டு வாழ அமைக்கப்பட்டிருக்கின்றன.

கடல்நீரை நாம் உபயோகிக்க முடிவதில்லை. ஆனால் அது மழையாக ஆறுகள் வழியாக ஏரி குளங் களில் நிரம்பி பயிர், பச்சைகளுக்கு உயிர் தருகிறது. பயிர், பச்சைகளோ, பிற மிருகங்களுக்கும் நமக்கும் உணவாகின்றன. தாவர இனம் கார்பன் - டை - ஆக்ஸைடை எடுத்துக்கொண்டு ஆக்சிஜனை வெளி யிட்டு உதவுகிறது. அதாவது பிரபஞ்சம் - உலகம் - ஒரு சமநிலையில் செயல்படுகிறது. எங்கு பார்த்தாலும்

இந்தச் சமநிலை - பரஸ்பர உதவி - (Harmony) பிரபஞ்ச லயமாக, பிரபஞ்ச நியதியாகச் செயல்படுகிறது.

அது என்ன பிரபஞ்ச லயம்?

ஓசை ஓர் அழகுடன் அமைப்புடன் ஒழுங்குடன் வெளிப்படும் போதுதான் அதை இசை என்கிறோம். அதேபோன்ற இயற்கை ஒழுங்குதான் பிரபஞ்ச லயமாகச் செயல்படுகிறது. லயம் பிரபஞ்சத்திலிருக்கிறது. லயம் உலக அமைப்பின் இயக்கத்தில் இருக்கிறது. லயம் மனித வாழ்வில் இருக்கிறது. லயம் ஓசையில் இருக்கிறது. எங்கும் லயம் தான். இதுதான் பிரபஞ்சம். இதுதான் மனிதன்.

வயலிலே நடந்து கொண்டிருந்தேன். "அதோ ஒரு பாம்பு போகிறது!" என்று ஆச்சரியத்துடன் கூவினேன். அங்கிருந்த விவசாயி சொன்னார்: "பயப்படாதீர்கள்! அதை அடிக்க வேண்டியதில்லை. அது ஓர் அருமையான ஜந்து. பயிரை வெட்டும் எலிகளை எல்லாம் பிடித்துச் சாப்பிடுகிறது. எனவே அது நமக்கு உதவுகிறது!" என்றார்.

வீட்டில் பல்லியைப் பார்த்தேன். என் வீட்டுக்கு வந்த அமெரிக்கர்கள் "ஆ! பல்லி!" என்று அரண்டு போய்க் கூச்சல் போட்டார்கள்.

"பயப்படாதீர்கள். அவை நம்மை ஒன்றும் செய்வதில்லை. வீட்டுக்குள்ளே வரும் பூச்சி வண்டுகளை அவை சாப்பிடுகின்றன. பூச்சித் தொல்லையைக் குறைக்கின்றன. நாங்கள் இங்கே அவற்றை ஏற்றுக்கொண்டு வாழ்கிறோம்!" என்றேன்.

பார்க்கப்போனால், குரங்குக்கு ஓர் அனுமார் கோயில், நாய்க்கு ஒரு பைரவர் கோயில், மாட்டை

"கோ மாதா" என்று கும்பிட்டு பூஜை செய்து மாட்டுப் பொங்கல் கொண்டாடும் பழக்கம்—

மனிதன் இங்கே இந்த மகத்தான உண்மையை உணர்ந்திருக்கிறான். பாம்புப் புற்றுக்குப் பால் வார்த்து வணங்கி "எங்களை ஒன்றும் செய்யாதே" என்று பிரார்த்திக்கும் பழக்கத்தை எங்கள் கிராமத்தில் எங்கள் வீட்டில் கண்டிருக்கிறேன். பாம்பு நம் பிரார்த்தனைக்குக் கட்டுப்படுமா என்று விஞ்ஞான ரீதியில் கேட்கலாம். "ஆம் அது கேட்கும், கட்டுப்படும்" என்று சில அனுபவங்களையும், அனுமானங்களையும் வைத்துத்தான் வாழ்க்கை நடத்துகிறோம்.

திருவனந்தபுரத்தில் ஒரு கோயிலில் கொடிக் கம்பம் நட ஆழமான குழியைத் தோண்டிவிட்டு, யானையை ஏவி அந்தக் கொடிக் கம்பத்தை தூக்கி வைத்தார்கள். கொடிக் கம்பத்தைத் தூக்கிய யானை அதைக் குழிக்குள் போட மறுத்தது. விஷயம் என்ன வென்று பார்த்தால், அந்தக் குழியில் தவறிப்போய் விழுந்துவிட்ட பூனைக்குட்டி ஒன்றிருந்ததுதான்! யானைக்கு ஏன் இந்தக் கருணை உணர்வு? ஒரு சிறு பூனை செத்திருந்தால் என்ன குடி முழுகிப் போயிருக்கும் இந்த யானைக்கு?

இங்கேதான் நாம் சிந்திக்க வேண்டும்.

இந்த உலகம், பிரபஞ்சம் எல்லாமே ஒருவருக் கொருவர் உதவியாக - ஈர்ப்பு சக்தியினால் - ஈர்த்து உதவியாக வாழத்தான் படைக்கப் பட்டிருக்கிறது. அப்படித்தான் இயங்குகிறது.

இதை மனித இனம் - மனிதன் - புரிந்துகொள்ள வேண்டும். மாறாகப் பகைமையில், போரில் நாம் ஒருவரை ஒருவர் அழிக்க முயல்கிறோம் என்றால் இயற்கை நியதிக்கு எதிராகப் போகிறோம் என்றுதான்

பொருள். இயற்கை லயம் பரஸ்பர உதவிதான்; பரஸ்பர அன்புதான்.

வாழ்வை இயற்கையின் பாதையிலே பிரபஞ்ச லயத்திலே நாம் ஓட்ட வேண்டும். பிரபஞ்ச லயத்திற்கு எதிராக அல்ல.

**மூச்சுக்காற்று – பிராணாயாமம்**

இந்தப் பிரபஞ்சலயம் நம் மூச்சிலேகூட இருக்கிறது. மூச்சு இழுத்து வெளியே விடுகிறோம். அது ஓர் ஒழுங்கான ஓட்டமாக நடைபெறுகிறது. நமக்கும் இவ்வுலகிற்குமுள்ள ஒரு தொடர்பு இந்த மூச்சுதான். இந்த மூச்சை விடாமல், நாமாக மூக்கை இறுக்கினாலும் சரி, வெளியிலிருந்து வெளிவரும் காற்றைக் கட்டுப்படுத்தி நம்மை அடைய முடியாதபடி தடுத்தாலும் சரி, இந்த ஜீவனின் உயிர் பிரிந்து விடும்.

எனவே இந்த ஜீவனை உடலுடனும் – இந்தப்புற உலகுடனும் – பிரபஞ்சத்துடனும் – எது பிணைத்திருக்கிறது? நமது மூச்சுக்காற்று; அக்காற்றிலே உள்ள ஆக்சிஜன் – பிராணவாயு. அந்த ஆக்சிஜனிலே உள்ள எலக்ட்ரான்கள்! அவைதான் நமது நுரையீரலில் சக்தியை இடம் மாற்றுகின்றன. அந்த அணுத் துகளான எலக்ட்ரான் பல்வேறு ரசாயன மாற்றங்களில் இடம்பெற்று நமது உணவிலுள்ள பொருள்களை எரித்து சக்தி தருகிறது.

என்ன அதிசயம் பாருங்கள்!

இந்த மூச்சுக்காற்று மூலம் இந்தப் பிரபஞ்சத்துடன் தொடர்பு கொண்டிருக்கிறோம். இதை உணர்ந்துதான் "பிராணாயாமம்" என்ற மூச்சுப் பயிற்சியைச் செய்ய நம் பெரியவர்கள் கற்றுக் கொடுக்கிறார்கள்.

மூச்சு விடுவதும், இழுப்பதும் ஒரு செயல். இது ஜீவனின் செயல். இது பிரபஞ்சத் தொடர்பு கொண்டது. இந்தச் செயலினால்தான் ஜீவன் இயங்கு கிறது; பேசுகிறோம், நடக்கிறோம், ஓடுகிறோம், சாப்பிடுகிறோம், உறங்குகிறோம். அதாவது உள்ளே போகிற காற்று மாறுபாடடைந்து வெளிமூச்சாக வருகிறது. செயலும், காரணமும் என்ற ரீதியில் (Cause and Effect) அல்லது செயலும் அதனால் விளையும் மறு செயலும் என்கிற ரீதியில்தான் - இப் பிரபஞ்சம் இயங்குகிறது.

**காரண காரியத் தொடர்பு**

சூரியன் பூமியிலே படாதபோது இருட்டாக இருக்கிறது. செடி கொடிகள் பச்சையங்களை உபயோ கித்து உணவு உற்பத்தி செய்வதில்லை. அதற்கேற்ப இரவில் நாம் தூங்கச் செல்கிறோம். உடலுக்கு ஓய்வளிக்கிறோம். சூரியனும், பூமி விளைவுகளும் என்று பார்த்தால் எல்லாம் காரண காரியத் தொடர்புள்ளவையாகத்தான் அதற்கேற்ப நிகழ் கின்றன. ஒரு காரியம்; ஒரு காரணம்.

காரிய காரணம் என்று பார்த்தால் நாம் பிறந் திருக்கிறோம். பிறப்பு ஒரு காரியமானால் இதற்கொரு காரணம் இருக்க வேண்டும். கொஞ்சம் சிந்தியுங்கள். அதாவது நாம் ஒரு காரணத்திற்காகத்தான் படைக்கப் பட்டிருக்கிறோம். இதுதான் உண்மை.

தனித்தியங்கும் இந்த ஜீவனின் கடைசி நிலை என்ன? கடைசி லட்சியம் என்ன? என்ன காரணத் திற்காகப் படைக்கப்பட்டிருக்கிறது? இதைப் பற்றியும் கொஞ்சம் யோசியுங்கள்.

பல நூல்களையும் படித்தபோது, ஒரு பிரெஞ்சு நாட்டு அறிஞர் எழுதிய ஒரு நூலின் முன்னுரையைப் படிக்க நேர்ந்தது. அவர் சொல்கிறார், "ஏன் மனிதன் மதங்களை ஏற்படுத்தினான்? கடவுளை ஏன் சிருஷ்டித்தான்? கடவுள் என்றும், ஆண்டவன் என்றும் ஏதோ ஒரு மாபெரும் சக்தி என்பதெல்லாம் மூலாதாரத்தை நோக்கிய - தான் பிறந்த இடத்தை நோக்கிய பயணம்தான்" என்று கூறுகிறார். இந்த மத ஆர்வம் - வாழ்க்கைப் பயணம் - "முழுமையை நோக்கிய ஒரு பகுதியின் தாகம்" என்று அவர் கூறுகிறார். "The thirst of the part for the whole".

### விரிவடையும் பிரபஞ்சம்

ஒரு காலத்தில் இந்த முழுப் பிரபஞ்சமுமே ஒரே அணுத்துகளாலான குழம்பாக - சக்தியின் வடிவாக - இருந்திருக்கிறது. அதிலிருந்து சுழற்சியின் மூலம் அகன்று, மெலிதாகி, பிரிந்து, பல கோள்களும், நட்சத் திரங்களும் உருவாயின. இது விஞ்ஞான உண்மை.

அதாவது இப் பிரபஞ்சம் விரிவடைந்து கொண்டே போகிறது. (Expanding Universe) அப்படி யானால் இதன் முடிவு என்ன? எவ்வளவு தூரம் இது விரிவடையும்?

நாமாக அனுமானிக்க வேண்டியிருக்கிறது. இப்படி விரிவடையும் பிரபஞ்சம் மறுபக்கத்திலே சுருங்க வேண்டும்; சுருங்கிப் பின் மீண்டும் மூலாதார நிலையை அடைய வேண்டும். இந்த இரண்டு மாற்றங் களின் தொடக்கத்தையும் தான் யுகப்பிரளயம் என்கிறோம். விரிவடையும் பிரபஞ்சத்தின் பல பகுதி களும் ஒன்று சேர்ந்து சுருங்கி மூலாதாரத்தைத் தொடும் முயற்சி இருக்கிறதே அதைத்தான் பிரெஞ்சு

தத்துவ ஞானி கூறுகிறார், இது மூலத்தை அடைய மூலத்தின் சிறுபகுதியான ஜீவனின் தாகம் என்று.

**மூலம் எது?**

மூலம் எப்படிப்பட்டது. ஒளிமயமானது என் கிறார்கள் ஞானியர். செத்துப் பிழைத்தோரது அனுபவங்களில் ஒரு பேரொளி வந்து அன்புடன் அரவணைத்து அழைத்துச் சென்றதாகக் கூறுகிறார்கள்.

அதேபோல விஞ்ஞானத்தில் அணுத் துகளை ஆராயும் விஞ்ஞானிகள் "இந்தத் துகள்கள் எல்லாம் பொருளா அல்லது ஒளிக்கீற்றா? என்று தீர்மானிக்க முடியவில்லை" என்கிறார்கள். அங்கே, கடைசி நிலை யில் துகள் ஒளித்தன்மை பெறுவதாகக் கூறுகிறார்கள்.

மேலும் ஒளி கீழும் ஒளி!
மூலம் என்ற பேரண்டத்தில் ஒளி
அணுத்துகள் என்ற சிறு நிலையிலும் ஒளி

இப்போது மீண்டும் வாருங்கள். நாம் வடலூரா செல்வோம். வடலூரார் இப்போது பாடிக்கொண் டிருக்கவில்லை. இப்போது ஒரு பெரும் தாரக மந்திரத்தை - வாழ்க்கை சுலோகத்தை - நெஞ்சு நிறைய, உரத்த குரலில், உச்சரித்துக் கொண்டிருக் கிறார்.

அருட் பெருஞ் சோதி!
தனிப் பெருங் கருணை!

என்று.

எல்லாமே கடைசியில் ஜோதிதான்! மூலா தாரம் ஜோதி நிலைதான்! அங்கே மூலம் பிரிந்து பல பொருள்களாக வடிவம் பெறும்போது ஒன்றை ஒன்று

ஈர்த்த நிலையில் உறவாடுவதுதான் தனிப்பெருங் கருணை என்ற அன்பு சக்தி என்கிறாரா? ஓரிடத்தில் அதை ஈர்ப்பு சக்தி என்கிறோம். மற்றோரிடத்தில் அதை அன்பு என்றும், கருணை என்றும் கூறுகிறோம்.

மூலம் ஜோதி. இங்கே எல்லாவற்றையும் பின்னிப் பிணைப்பது அன்பு. இதுதான் விஷயம்.

## பிரபஞ்ச நியதி

பிரபஞ்சத்திலே செயல் நிகழ்ந்தவண்ணம் இருக்கிறது. விளைவுகள் வந்தவண்ணம் இருக்கின்றன. இது உலக நியதி; பிரபஞ்ச நியதி. இது ஏதோ எட்டாத தூரத்தில், பிரபஞ்சத்தில் இருப்பதாக எண்ணாதீர்கள். ஒளி எப்படிப் பேரண்டத்திலும், கீழ்த்துகளிலும் இருக்கிறதோ அதேபோல நம் உலகிலும், வாழ்விலும் இந்தக் காரண காரியம்தான் வாழ்வை இயக்குகிறது.

"சோளம் போட்டால் சோளம் விளைகிறது. நெரிஞ்சி முள் விதை விதைத்தால் நெரிஞ்சிச் செடி முளைக்கிறது. இதை இந்த உலகில் கண்டு உணரும் மக்கள் ஏன் இதே விஷயம்தான் தங்கள் வாழ்விலும் நிகழ்கிறது என்பதைப் புரிந்து கொள்வதில்லை?" என்று கேட்கிறார் தத்தவ ஞானி ஜேம்ஸ் ஆலன்.

நல்லெண்ணம், நல்ல செயல், நல்ல பலனைக் கொடுக்கும்; தீய எண்ணம், தீய செயலாகித் தீமையைக் கொடுக்கும் என்பதை நாம் ஏன் புரிந்து கொள்வதில்லை? யோசித்துப் பாருங்கள்! இதிலே நாம் உணர்ந்து புரிந்து கொள்ள வேண்டிய முக்கிய விஷயம் ஒன்றிருக்கிறது. நல்ல செயலை நாம் விரும்பித் தேர்ந்தெடுக்கிறோமா அல்லது தீய செயலை விரும்பித் தேர்ந்தெடுக்கிறோமா என்கிற விஷயம் நம் கைக்குள் இருக்கிறது. தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு

நம்மிடம் தானிருக்கிறது. அந்தத் தேர்வு செய்யும் வாய்ப்பை எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பதைப் பொறுத்துத்தான் பலன்கள் விளைகின்றன. காரணத்திற்கேற்ப காரியங்கள் நிகழ்கின்றன; அவ்வளவுதான்.

காரண காரியம் என்ற பிரபஞ்ச நியதி நம்மைப் பழிக்குப் பழி வாங்கிடக் காத்திருப்பதில்லை. நமக்கு அதிர்ஷ்டத்தைத் தரத் தானாக வருவதில்லை. பழியைப் பெறுகிறோமா பணத்தைப் பெறுகிறோமா என்பதெல்லாம் நம் செயல்கள் செய்யும் காரியம். நாம் எடுக்கிற முடிவைப் பொறுத்த காரியம்.

இதை எல்லாம் பார்க்கும்போது யாரோ சொல்வதுபோல் இருக்கிறது.

தம்பீ! மகனே! உன் விதி உன் கையில்தான்!
நெல்லைப் பயிரிடு, முள்ளைப் பயிரிடாதே!
நல்லெண்ணம் கொள், தீயெண்ணம் வேண்டாம்

என.

அப்படித்தான் பிரபஞ்ச நியதி சொல்கிறது. வாழ்வைச் சரியாக வாழ வழி காட்டுகிறது. “சோளத்தைப் பயிரிடு” என்று சொல்லிக் கொடுக்கிறது.

## விஞ்ஞானிகளும், ஞானிகளும்

விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பை விஞ்ஞான உண்மைகள் என்கிறோம். இதை விஞ்ஞானிகள் எப்படிக் கண்டு பிடித்தார்கள் என்று சொல்லும் போது திடீரென்று ஓர் “ஐடியா!” தோன்றியது என்றோ ஆழ்மனத்தில் ஓர் உணர்வு தோன்றியது (Intuition) என்றோ திரும்பத்திரும்பக் கூறுகிறார்கள். விஞ்ஞானி கண்டு பிடிப்பில் இந்த “ஆழ்மன உணர்வு -

அனுமானம்" முக்கியப் பங்கை வகிக்கிறது. இந்தப் பொருள்களாலான உலகில் - மலை, நதி, வீடு, உணவு, உடை என்று பொருள்களாலான உலகில் - வசதிகளை அதிகப்படுத்தும் முயற்சியில் இந்த விஞ்ஞான உண்மைகள் - தேடுபவர்களால் - கண்டுபிடிக்கப் படுகின்றன. பொருளை நம்மால் பார்க்க முடிகிறது. ஆனால் புலனாகாத சக்தியை நாம் பார்க்க முடிவதில்லை.

இந்தப் புலனாகாத சக்தி நம் வாழ்க்கையை இயக்குகிறது. வழிகாட்டுகிறது. அந்த வாழ்க்கை நெறிகளை நமது ஞானிகள் கண்டு பிடிக்கிறார்கள். அந்தக் கண்டுபிடிப்பு முறையை (Revelations) "எனக்குத் தெரிந்தது" என்றோ "ஆண்டவன் கூற்று" என்றோ "ஆண்டவன் என்னுடன் பேசினார்" என்றோ தெரிவிக்கிறார்கள்.

இப்படி மதத்தலைவர்கள், ஞானிகள் கண்டவை "வாழ்க்கை பற்றிய கண்டுபிடிப்புகள்."

**வாழ்க்கை நெறிகள்**

எப்படி இந்த முடிவுக்கு வருகிறோம்? இவர்கள் எல்லாரும் வெவ்வேறு நாட்டிலிருந்து வெவ்வேறு காலகட்டத்தில், ஒருவரை ஒருவர் தெரியாதவராய், சொன்ன உண்மைகள். இவை அனைத்தும் ஒரே விஷயங்களாக இருக்கின்றன.

காமம் (நெறியற்ற உறவு)
பகைமை
பொறாமை
பேராசை
வெறுப்பு
வஞ்சினம்
ஆணவம்

என்று ஏகோபித்துச் சொல்லி இருக்கிறார்கள். இந்தக் குணங்கள் நமது செயலாக மாறுமானால் அல்லது இவற்றின் அடிப்படையிலே நாம் இயங்குவோமானால் "நாம் பிரபஞ்ச நியதிக்கு பிரபஞ்ச லயத்திற்கு எதிராகச் செல்கிறோம்; செயல்படுகிறோம்" என்பது தான் பொருள். அது அதன் பலனைக் கொடுக்கும். அதேபோல் அன்பு, நல்லெண்ணம், பொறுமை, தூய்மை, மன்னிக்கும் மனோபாவம், எளிமை, நேர்மை என்று செயல்படுவோமானால் "பிரபஞ்ச கதியிலே நாம் இயங்குகிறோம். அது அதனுடைய நல்ல பலன்களைத் தரும்" என்று தெள்ளத் தெளிவாகக் கூறியிருக்கிறார்கள்.

ஞானிகள் கண்டுபிடித்தவை வாழ்வின் உண்மைகள். இவையும் விஞ்ஞானக் கண்டுபிடிப்பு போல பெரும் கண்டுபிடிப்புகள்தாம். ஆனால் இன்று விஞ்ஞான உலகில் வாழும் நாம் விஞ்ஞான உண்மைகளுக்குக் கொடுக்கிற அவ்வளவு முக்கியத்துவத்தை நம் ஞானிகள் கண்ட உண்மைகளுக்குக் கொடுப்பதில்லை. ஆனால் இந்த வாழ்வியல் உண்மைகள் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்கு சமமான கண்டுபிடிப்புகள், உண்மைகள், சட்டங்கள் - நியதிகள்!

இவை மீறப்படும்போது அதற்குரிய பலனைக் கொடுத்து விடுகின்றன. எந்தப் பலன் எந்தக் காரியத்திற்காக என்று நமக்குப் புரியாததனால் நாம் இவற்றிற்கு மதிப்பளிப்பதில்லை; வாழ்வில் உபயோகிப்பதில்லை. ஜேம்ஸ் ஆலன் இதைத்தான்:

"வாழ்வில் மறைந்துகிடக்கும் நியாயங்கள் நம் வாழ்வைச் செலுத்துகின்றன" என்கிறார்.

வாழ்வியல் உண்மைகளின் பலன்கள் தெள்ளத் தெளிவாக - மின்கம்பியைத் தொட்டால் மின் அதிர்வு ஏற்படுவதுபோல - நேரடியாகப் புரியுமானால் மனிதன் இதனை வாழ்க்கையில் மிகுந்த கவனத்துடன் அனுசரிப்பான்; மதிப்பான். "அரசன் அன்று கொல்லும். தெய்வம் நின்று கொல்லும்" என்பது போல நாட்பட்ட விளைவாக - ஊழ்வினையாக - இது வந்து சேர்கிறது. விளைவுகள், எப்படி, எங்கே, எப்போது வரும் என்று நமக்குத் தெரிவதில்லை. ஆனால் வருவதென்னவோ நிச்சயம். ஏனெனில் இது உண்மை. இது வாழ்க்கை விஞ்ஞானம். விஞ்ஞானிக்கு மாறாக இதைக் கண்டு பிடித்தவர்கள் ஞானிகள்.

நமது மதக்கோட்பாடுகள் இந்தக் காரண காரிய விளக்கத்தைத் தெரிவிக்கின்றன.

"மனிதனை நிழல் தொடர்வது போல, நமது செயல்களின் விளைவுகள் நம்மைத் தொடர்கின்றன" என்று புத்தர் கூறுகிறார்.

எதை விதைத்தாயோ
அதை அறுவடை செய்வாய்

என்று இயேசுபிரான் கூறுகிறார்.

இவை அனைத்தையும் ஒரு வார்த்தையிலே இந்துமதம் கூறுகிறது. அந்த வார்த்தை "கர்மா" என்பதாகும். "நம் செயலின், பலனை நாம்தான் அனுபவித்தாக வேண்டும்" என்பதுதான் கர்மம். கர்மம் என்பது செயலைக் குறிக்கும்; செயல் நல்லதா, கெட்டதா என்பது செய்கிற மனிதனைப் பொறுத்தது.

உன்னையறிந்து கொள் என்று சொன்னார்கள். உண்மைதான். அடுத்து இன்று நாம் உலகையும், பிரபஞ்சத்தையும் அறிந்துகொள்ள வேண்டும்; அவை

இயங்கும் அடிப்படையைப் புரிந்து கொள்ள வேண்டும். (Cause and Effect) காரண காரியம் என்ற விஞ்ஞான அடிப்படையிலேதான் வாழ்வியல் உண்மைகள் இயங்குகின்றன.

## அன்பு = ஈர்ப்பு சக்தி

அன்பு என்பதன் விஞ்ஞான வார்த்தை ஈர்ப்பு. ஈர்ப்பின் மூலம்தான் இப்பிரபஞ்சம் இயங்குகிறது. உலகமும், பிரபஞ்சமும் மனித வாழ்வும் ஒரு லயத்தில் இயங்குகின்றன. எல்லாமே ஒன்றுக்கொன்று உதவி யாகச் சார்ந்தே வாழ்கின்றன.

தனி மனித வாழ்வு மேம்பாடு அடைய வேண்டு மானால் நாம் இங்கு இயங்கும் பிரபஞ்ச லயத்தைப் புரிந்து கொள்ள வேண்டும்.

## மகா மந்திரம்

பிரபஞ்ச லயத்தில் நம்மைச் சேர்க்கும் அரிய மகாமந்திரத்தைச் சொல்லி இந்த அத்தியாயத்தை முடிப்போம்!

ஓம்! ஓம்!! ஓம்!!!

# 11

# வாழ்வில் மறைந்து கிடக்கும் நியாயங்கள்

---

ஒரு பாம்பு வீட்டிற்குள் புகுந்துவிட்டது. ஒரு சிறுவன் அதை அடிப்பதற்காகப் பெரிய கழியொன்றை வைத்துக்கொண்டு பாம்பைத் தேடிக் கொண்டிருந்தான். பாம்பு அவன் கால்களுக்கிடையில் இருந்த இடைவெளி வழியாக அவனைத் தாண்டிக் கொண்டு சென்றது. கால்களுக்கிடையே பாம்பு செல்வதைக் கண்ட இளைஞன் பதறிப் போனான். எந்த நேரமும் அது அவனைக் கடித்திருக்கலாம்!

அங்கு வந்த அவன் தாய், "அடப்பாவி! பாம்பைப் போய் அடிக்கலாமா? நாகதோஷம் இருந்ததால் எனக்குக் குழந்தையே பிறக்கவில்லை. பின் பாம்புக்குப் பால் வார்த்துப் பூஜை செய்தபின் நீ பிறந்தாய். உனக்கு ஒரு கேடும் வராது என்று பாம்பு சத்தியம் செய்து கொடுத்திருக்கிறது. உன்னை ஒரு நாளும் பாம்பு தீண்டாது. நீ ஏன் அதைப்போய் அடிக்க முற்பட்டாய்?" என்று பதை பதைத்தபோது மகன் சிந்திக்கத் தொடங்கினான்.

பாம்பு சத்தியம் செய்து கொடுப்பதாவது, பாம்பு கடிக்காமலிருக்குமா? பாம்பு போன்ற பிராணிகள் கூட சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு நடக்குமா?" என்ற கேள்விகள்!

"பாம்பு சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு நடக்குமா?" என்று கேட்பதற்குப் பதில் இந்த உலகம் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டுத்தான் நடக்கிறதா? இயங்குகிறதா? என்ற கேள்வியை நாம் கேட்க வேண்டும்.

வெளித்தோற்றத்திற்கு, இந்த உலகம் ஏதோ 'நாயைத் தின்னும் நாய் உலக'மாகத் தோன்றுகிறது. நீதி நியாயம் என்பதே இல்லாத ஓர் உலகமாகத் தென்படு கிறது. வல்லான் வகுத்ததே வாய்க்கால். அரசாங்க அதிகாரிகள் வைத்ததே சட்டம். கட்சிக்காரனே நீதிபதி என்கிற ஓர் அவலநிலை நாட்டில் நிலவும் போது, "இதில் அடிபடாமல், நம் வாழ்வைப் பார்த்துக் கொண்டு நாம் போய்விடுவோம். தத்துவமாவது கத்தரிக்காயாவது!" என்று மக்கள் வாழ்கிறார்கள்.

ஜேம்ஸ் ஆலன் என்ற தத்துவஞானி கூறுகிறார், "வாழ்வில் மறைந்து கிடக்கும் சில நியாயங்கள் இருக் கின்றன. அவைதான் நம்மை வழி நடத்திச் செல் கின்றன" என்று.

தனிமனித வாழ்விலும் சரி, சமுதாய வாழ்விலும் சரி இது உண்மை. அதாவது சில நியாயங்களைச் சுற்றித்தான் இந்த உலகமே இயங்குகிறது. அது மீறப் படும்போது அது விளைவுகளை ஏற்படுத்துகிறது. மனிதர்கள் விளைவுகளைக் கண்டு அஞ்சுகிறார்கள் அல்லது அங்கலாய்க்கிறார்கள். ஆனால் ஏன் இந்த விளைவுகள்? இத்தகைய விளைவுகள் வர என்ன மூல காரணம் என்று யாரும் அதிகம் சிந்திப்பதில்லை.

இந்த உலகம் - பிரபஞ்சம் - அனைத்துமே ஒரு காரண காரியத்தைத் தொடர்ந்த உலகமாக இருக்கிறது. விளைவுகள் - தானே - தற்செயலாக - திடீரென்று - நிகழ்வதில்லை. எல்லாவற்றிற்கும் ஒரு காரணம் இருக்கிறது. ஒரு சிந்தனையின் விளைவுதான் மற்றொரு செயல். இதையேதான், "வினை விதைத்தவன் வினை அறுப்பான்" என்றும் "தினை விதைத்தவன் தினை அறுப்பான்" என்றும் கூறுகிறார்கள். இதைத் தான் ஆங்கிலத்தில் Cause and Effect என்று கூறுகிறார்கள்.

உலகில் இன்று நிலவும் அவல நிலையைப் பார்க்கும் நாம் "எத்தகைய எண்ண விதையை விதைத்திருக்கிறோம் அது இத்தகைய பலன் தருகிறது" என்று எண்ணிப் பார்ப்பதில்லை.

வாழ்வில் ஒரு துன்பம் நேரும்போது, "மகனே! இத்துன்பம் உனக்கு ஏன் வந்தது தெரியுமா? நீ பிறன் கேடு நினைத்தாய். அதனால்தான் இது வந்தது. அல்லது நீ இத்தகைய பஞ்சமா பாதகம் செய்தாய், அதன் விளைவுதான் இது!" என்று கடவுள் நம்முன் தோன்றி நமது சிந்தனைக்கும் நாம் செய்த செயல்களுக்கும் இன்று அனுபவிக்கும் துன்பங்களுக்கும் இருக்கும் நேர்கோட்டினை, தொடர்பை எடுத்துக் காட்டுவதில்லை.

நம்மை நாம் அப்பழுக்கற்ற மனிதர்களாக எண்ணிக் கொண்டு, "ஆகா! இவ்வுலகில் நல்லவனுக்கு இப்படியா நேரும்? கடவுள் பார்த்துக் கொண்டா இருக்கிறார்!" என்று புலம்புகிறோம்.

"தங்கத்தில் இருக்கிற அசுத்தம் பஸ்மமாகிற வரையில் அது எரிக்கப்படும், தீயில் புடம்போடப் படும். அதைப்போல மன அழுக்குகள் தீய்ந்து போகிற

வரை, துன்பங்கள் என்ற அனுபவத்தீயில் புடம் போட்டுத்தான் வாழ்வு வெளிவர வேண்டும்" என்று கூறுகிறார் ஜேம்ஸ் ஆலன்.

'எந்த மன விகாரங்களால் - எந்தத் தீய எண்ணங் களால் என் வாழ்வு இந்த விளைவுகளை அனுபவிக் கிறது' என்பவற்றை ஆராயும்போது வாழ்வில் மறைந்து கிடக்கும் நியாயங்கள் - வாழ்வை இயக்கும் தர்மங்கள் - நமக்குப் புலனாகின்றன.

விதை இல்லாது செடியில்லை. அதேபோல எண்ணமில்லாது விளைவுகளில்லை. நமது எண்ணங் கள்தாம் நமது குணங்களாக மாறுகின்றன. ஒத்த உள்ளங்கள் பிற ஒத்த உள்ளங்களை — சூழ்நிலைகளை — ஈர்க்கின்றன என்கிற விதிக்கேற்ப நமது எண்ணங் களுக்கேற்ப நமது சூழ்நிலை அமைகிறது. மனிதன் இந்த காரண காரியத்தைப் புரிந்து கொள்ளாமல் "குய்யோ முறையோ!" என்று விளைவுகளை மட்டுமே கண்டு புலம்பிக் கொண்டிருக்கிறான். ஞானிகளோ மூல காரணத்தைக் கண்டு அதைக்கெல்லி எறிந்து எத்தகைய மனநிலையில் இருந்தால் தான் விரும்பும் பரவசநிலை வருமோ அதில் தோய்ந்து நிற்கும் முயற்சி யில் ஈடுபடுகிறார்கள்.

தீக்குள் விரலை வைத்தால் சுடுவது போல, தீய எண்ணத்தினால் விளைவுகள் உடனுக்குடன் நிகழ்வ தில்லை. அப்படி நிகழ்ந்தால் நமக்குக் காரண காரியம் புலப்பட்டுவிடும். மீண்டும் அந்தத் தவறுகளை மறந்தும் செய்ய மாட்டோம். தீக்குள் விரலை வைக்கும் போது சுடும் உணர்வு எழுவது போல ஒரு செயலுக்கும் அது விளைவிக்கும் மற்றொரு செயலுக்கு முள்ள நேரடித் தொடர்பும் நமக்குப் புரிவதில்லை. வினைகளின் விளைவு காலந்தாழ்ந்து நடைபெறுவ

தனால் நம்மால் இதை எளிதில் கிரகித்துக் கொள்ள முடிவதில்லை; புரிந்து கொள்ள முடிவதில்லை.

மின்சாரம் ஓடிக்கொண்டிருக்கும் ஒரு கம்பியைத் தொட்டோமானால் நமக்கு 'ஷாக்' அடிக்கிறது. இதைப்போன்ற பல விஞ்ஞான உண்மைகளைத் தெரிந்து வைத்துக் கொண்டு அதை நாம் வாழ்வில் கடைப்பிடிக்கிறோம். கையில் கனமான ரப்பர் உறைகளைப் போட்டுக் கொண்டு மின்சாரம் பாதிக்காதவாறு மின்சாரக் கம்பிகளை ரிப்பேர் செய்கிறோம்.

அதே அளவுக்கு வாழ்வின் உண்மைகளிடம் நமக்குப் பயமிருப்பதில்லை. வாழ்வின் உண்மைகளை நாம் அதே அளவுக்கு கவனமாகக் கையாளுவதில்லை. நாம் உணர்ந்திருக்கிறோமா உணராமலிருக்கிறோமா என்பதை எல்லாம் பார்க்காமல் உண்மைகள் - மீறப்படும் போது அவை தன் விளைவுகளை ஏற்படுத்தி விட்டுப் போகின்றன. அப்படி மீறப்படும் அதர்மச் செயல்களைத்தான் பஞ்சமா பாதகம் என்று பெரியவர்களும் ஞானிகளும் குறிப்பிட்டிருக்கிறார்கள். "திருடாதே, பொய் சொல்லாதே, ஏமாற்றாதே, வஞ்சிக்காதே பிறர் மனைவியை - பொருளை - இச்சிக்காதே" என்று வகைப்படுத்தி இருக்கிறார்கள்.

அந்த தர்மம் தாழாமல், என்று ஒரு 51 சதவிகித மக்கள் வாழ்கிறார்களோ அப்போது அந்தச் சமுதாயம் பிழைக்கும், தழைக்கும். என்று 51 சதவிகித மக்கள் இதைப் புறக்கணித்து உதாசீனம் செய்து வாழ்க்கை நடத்துகிறார்களோ அந்தச் சமுதாயம் அழிவை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும் நிலை ஏற்படும்.

இன்றைய காலகட்டம் நமக்கு நேர்ந்திருக்கும் அத்தகைய ஒரு சோதனைக் காலம். தனிமனித வாழ்வில் நல்லெண்ணங்கள் நிலவுகிறதா - பொது வாழ்வில் நல்லெண்ணம் கொண்டோர் மேவி நிற்கிறார்களா என்பதைப் பொறுத்துத்தான் சமுதாய நலம் அமையும்.

ஏனெனில் தனி மனிதர்களாலானதுதான் சமுதாயம். அந்தத் தனிமனித வாழ்வைச் சில மறைந்து கிடக்கும் நியாயங்கள் நடத்திச் செல்கின்றன. அதை மனிதர்கள் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை.

மனவியல் படித்த என் நண்பர் பரஞ்சோதி யிடம் ஒருமுறை பேசிக் கொண்டிருந்தேன். எங்கள் இருவருக்கும் அறிமுகமான ஒரு நண்பர் வந்தார். அவருக்கு நெடுநாட்களாகத் தோல் வியாதி. சதா சொறிந்து கொண்டே இருப்பார். தீராத புண்ணாக இருந்து வந்தது. "உங்களுக்குப் பிறரைக் கண்டிப்பது - கடுமையாக விமர்சிப்பது - மனிதாபிமானம் இல்லாமல் பிறரைக் குறை சொல்வது இதமாக இருக் கிறதா? - சொறிந்து கொள்வது இதமாக இருப்பது போல? இன்றிலிருந்து இப்படி பிறரைக் கண்டனம் செய்வதை விடுங்கள். உங்கள் வியாதி எப்படி மறைகிறது என்று வந்து சொல்லுங்கள்!" என்றார் பரஞ்சோதி.

மற்றொருவரிடத்தில், "பிற பெண்களைக் கண்டால் உங்கள் மனத்தில் சுயநலமான காம எண்ணம் ஆட்கொள்கிறதா? அது உங்களை விரட்டு கிறதா? அதைத் தாவி ஓடுகிறீர்களா? உங்களை அசிங்கப்படுத்திக் காட்டுவதற்காகவே - உங்கள் அழகைக் குறைப்பதற்காகவே இந்தத் தேமல் வந்திருக்

கிறது" என்றார். கேட்ட நண்பர் தலை குனிந்து கொண்டார்.

"எண்ணங்கள் ரகசியமானவை. அவற்றை மறைத்துவிடலாம்" என்று நம்புகிறார்கள் மக்கள். ஆனால் அவற்றை ஒருநாளும் நாம் ஒளித்து வைக்க முடியாது" என்று எழுதுகிறார் ஜேம்ஸ் ஆலன்.

எனது நண்பர் என்.வி.எஸ். மணியன் அவர்கள் கூறிய விஷயம் இன்னும் என்னைவிட்டு அகல வில்லை. "தோல் தொழிலில் ஈடுபட்டிருந்தேன். கொழுப்புப் பொருளை வாங்கி வாரந்தோறும் சப்ளை செய்யுமாறு ஒரு நண்பர் கேட்டுக் கொண்டார். கொழுப்புக்கு, ராத்தலுக்கு 25 காசு என்று கமிஷன் எடுத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லி இருந்தார். நான் இப்படியே நெடுநாள் சப்ளை செய்து வந்தேன். ஒருநாள் "என்ன இது? நான் வாங்கும் விலை அவருக்குத் தெரியாது நான் என்ன விலை விற்றாலும் வாங்குபவருக்கு நஷ்டம் வரப் போவதில்லை. ஆகவே ராத்தலுக்கு நமது லாபத்தை - கமிஷனை 50 காசாகக் கூட்டி விற்றால் நிறைய லாபம் வருமே என்று தீர்மானித்தேன். ஆகவே அன்று விலையை அதிகமாக்கி கொழுப்பை டின்களில் ஊற்றி அனுப்பி வைத்தேன்.

"அன்றுமாலை வாங்குபவரிடமிருந்து போன் வந்தது." "ஐயா! உடனே வரவும்!" என்றார்கள். சென்றேன். கொழுப்பை டின்னிலிருந்து ஊற்றினார் கள். எண்ணெய் டின்னுக்கடியில் உள்ளே கற்கள் கிடந்தன. எடை கூடுவதற்காக கற்களைப் போட்டு எனக்கு விற்றிருக்கிறார்கள் என்னிடம் விற்றவர்கள். "ஐயா! இது எனக்குத் தெரியாது! என்னிடம் விற்ற வர்கள் என்னை ஏமாற்றி இருக்கிறார்கள். கற்களின்

எடை போக கொழுப்புக்கு மட்டும் எடை போட்டுக் காசு கொடுங்கள்!" என்றேன்.

"நான் பேராசைப்பட்டு எவ்வளவு காசைக் கூட்டி இருந்தேனோ அந்த லாபம் அடியோடு போயிற்று. எவ்வளவு பணத்தைக் கூட்டி இருந் தேனோ அந்த அளவுக்குக் கல் இருந்தது! எனது லாபப் பேராசை தகர்ந்து போயிற்று. புத்திக் கொள்முதல். எவ்வளவு பேராசைப் பட்டேனோ அந்த அளவு பணம் போயிருந்தது! இது என்னால் மறக்க முடியாதது!" என்றார். "பேராசை பெரு நஷ்டம்" என்கிற பாலபாடத்தைக் கவனியுங்கள். அவை வெறும் வார்த்தைகளல்ல. மறைந்து கிடக்கும் உண்மைகள்; அனுபவங்கள் வடிகட்டித்தந்த உண்மைகள்.

அடித்தால் அடிக்கப்படுவோம். ஏமாற்றினால், நாம் ஏமாற்றப்படுவோம்.

நமக்கும் புத்திக் கொள்முதல்தான்!

ஒரு பெரிய பெயிண்ட் கம்பெனிக்கு ஒரு சிறிய கம்பெனி ஒரு கலர் சாயத்தை விற்று வந்தார்கள். அந்தக் கலர் சாயம் உற்பத்தி செய்யும் தொழில்நுட்பம் அந்தச் சின்ன கம்பெனியிடம் மட்டுமே இருந்தது. இதன் மூலம் நல்ல லாபம் வந்தது.

ஒருநாள் அந்தக் கலர் சாயக் கம்பெனி முதலாளிக்கு ஓர் எண்ணம் ஏற்பட்டது. "நம் சாயத் தின் விலையை அதிகமாக்கினால் என்ன? நம்மிடம் அவர்கள் வாங்கித்தானே ஆக வேண்டும்!" என்று எண்ணினார். விலையை அதிகமாக ஏற்றினார்.

ஆனால் என்ன நேர்ந்தது என்கிறீர்கள்? அந்தப் பெரிய பெயிண்ட் கம்பெனியில் தொழிலாளர்கள் கதவடைப்பு நடத்த, கொஞ்ச நாளில் அந்த பெரிய

பெயிண்ட் கம்பெனியையே மூடி விட்டார்கள். “உள்ளதும் போயிற்று நொள்ளைக் கண்ணா” என்கிற படி நிரந்தரமாக வந்து கொண்டிருந்த லாபமும் போய் சின்ன சாயக் கம்பெனியை இழுத்து மூட வேண்டிய நிலை ஏற்பட்டது.

வியாபாரத்தில் நியாயம் வேண்டும். தனி மனித உறவில் நியாயம் வேண்டும். பெண்களை, குழந்தை களை நடத்துவதில் நியாயம் வேண்டும். போரில் கூட நியாயம் வேண்டும். ராமபிரான் கூறினாரே “வெறுங் கையோடு நிற்கும் உன்னிடம் போரிட நான் தயாரில்லை. இன்று போய் நாளை வா!” என்று, அதுதான் அந்த நியாயம்.

பொறி இயல் நிபுணர் ஜெயராமன் என் வீட்டுக்கு வந்தார். “ஐயா! எங்கள் நிறுவனத்தில் பெரும்பாலோர் லஞ்சம் வாங்கும் அதிகாரிகள்தான். நாங்கள் ஒரு பத்துப் பதினைந்து பேர் லஞ்சம் வாங்குவதில்லை. காரணம் பயம்தான். ஏனெனில் லஞ்சம் வாங்குபவர்களது வீட்டில் நடக்கும் குடும்ப வாழ்க்கையைப் பார்க்கிறோம். கண்ணெதிரே தெரிகிறது. அவன் வீட்டில் உள்ள மனைவி நிரந்தர நோயாளியாய் இருக்கிறாள். அவன் வீட்டில் நேற்று அவன் மகன் மோட்டார் சைக்கிள் விபத்தில் காலொடிந்து மருத்துவமனையில் சேர்க்கப்பட்டான். மற்றொருவர், வீட்டில் நிம்மதி இல்லாது அல்லாடு கிறார். லஞ்சம் வாங்க எங்களுக்கு எண்ணமிருந் தாலும் இத்தகைய விபரீதங்கள் எங்களைப் பயமுறுத்திக் கொண்டே இருக்கின்றன. நியாயமாக வாழ்ந்துவிட்டுப் போய் விடுவது என்ற தீர்மானத் துடன் வாழ்க்கை நடத்துகிறோம்!” என்றார் அவர்.

ஒளி ஒரு நேர்கோட்டில் செல்லுவதாகச் சொல்லி வந்த போது ஐன்ஸ்டைன் தான் "ஒளி வளையும்" என்றும் "ஆகவே புறப்பட்ட இடத்திற்கே வந்து சேரும்" என்றும் நிரூபித்துக் காட்டினார். "எதை நாம் செய்கிறோமோ அது நமக்கே வந்து சேர்கிறது" என்ற தத்துவத்தையும் ஒளி புறப்பட்ட இடத்திற்கு வருகிறது எல்லாம் புறப்பட்ட இடத்திற்கு வந்து சேரும் தன்மை கொண்டதுதான் இப்பிரபஞ்சம் என்ற உண்மை யையும் — சேர்த்துப் பார்த்தால், நாம் நன்மை செய்யும் போது நன்மை நம்மை வந்தடைகிறது, தீமை செய்யும் போது திரும்ப தீமைதான் நம்மை அடைகிறது என்பது புரியும். அதே போல் எண்ணம் ஒரு சக்தி. அது நல்லெண்ணமாகப் புறப்படும்போது நன்மையாக நம்மை அடைகிறது. கெட்ட எண்ணங்கள் வளைந்து திரும்பி எல்லா அவலங்களுமாக வந்து நமது சூழ்நிலையை மாற்றி விடுகின்றன.

ஞானிகளும், இன்றைய மனவியல் அறிஞர் களும் பூரணமாக ஒரு விஷயத்தை நமக்கு இன்னும் சொல்லாமல் இருக்கிறார்கள் என்றால் அது இது தான்.

எத்தகைய எண்ணங்கள் நம்மிடம் எப்படிப் பட்ட குணங்களாக மாறுகின்றன? எத்தகைய குணங் கள் எப்படிப்பட்ட சூழ்நிலைகளாக நமது வாழ்வில் உருவாகின்றன என்கிற தெளிவை யாரும் இதுவரை விளக்கியதில்லை. இவை மறைந்து கிடக்கின்றன.

விஞ்ஞான விதிகள் போல ஒரு நாள் இவற்றைத் தெளிவாக மனவியல் அறிஞர்கள் எடுத்து விளக்கக் கூடும். அதுவரை சமயப் பேரறிஞர்கள் காட்டிய ஆன்மீக உண்மைகள்தான் இதை நமக்குப் புலப்

படுத்தக்கூடும் – அதை நோக்கி நாம் சிந்தை செலுத்தி னோமானால்.

மறைந்து கிடக்கும் எந்த நியாயங்கள் நம் வாழ்வை இயக்குகின்றன என்கிற அறிவைப் பெறும் போது நாம் மனித எல்லைகளிலிருந்து மீறி உயர்ந்து அதி மனிதநிலை அடையும் வாய்ப்பு ஏற்படுகிறது. தனிமனிதனாக சுய சோதனை செய்து கொள்வோம். ஒரு சமுதாயமாக நம்மை நாம் சுய சோதனை செய்து கொள்வோம். மறைந்து கிடக்கும் நியாயங்களை ஒட்டி வாழ்வை அமைத்து நம்மையும் இந்தச் சமுதாயத்தை யும் உயர்த்துவோம்.

என்ன நோய்கள் என்ன எண்ணங்களால் உருவாயின என்றும், எத்தகைய துரதிர்ஷ்டம் எத்தகைய எண்ணங்களால் வந்து சேர்ந்தன என்பதும் ஒருநாள் நமக்குப் புரியவரும். நியாயம் மறைந்து கிடப்பதில்லை, மிதந்து மேலே தெரிகிறது. நமது காரண காரிய அறிவை உபயோகித்து ஆன்மீக உணர் வுடன் அணுகும்போது நமக்கு வாழ்வின் தாத்பரியம் புலப்படத் தொடங்குகிறது. மறைந்து கிடக்கும் நியாயங்களைப் புரிந்து கொள்ள முடியுமா — முயன்று பாருங்கள்.

## 12

# உலகால் அறியப்படாத ரகசியம்

"பணம் என்பது தானாக வருகிறது!" என்றார் அந்தத் தொழிலதிபர். கம்பீரமான தோற்றம். நிமிர்ந்த பார்வை. கதர் வேஷ்டி சட்டை. அனுபவத்தின் முத்திரைகளாக நரை கண்களைக் கவரும் வண்ணம் அழகூட்டிக் கொண்டிருந்தது.

"தானாக வருகிறதா?" கேட்டேன் அகன்ற விழி களுடன்.

"எனக்குத் தெரியும், எனது பொருள் அற்புத மானது என்று. மக்களுக்கு உபயோகமான பொருள். எனக்குத் தேவைப்படும் ஒரு நியாயமான லாபம். இப்படித் தொழில் செய்தால் பணம் தானாக வருகிறது. வாடிக்கையாளர்கள் கடை தேடி வருகிறார்கள்" என்றார்.

"நாணயமும் நேர்மையும் கொண்ட வியா பாரியை மக்கள் விரும்புவார்கள். அவனது வியாபாரம் பெருகும்" என்கிறார் ஜேம்ஸ் ஆலன்.

அந்தத் தொழிலதிபரின் வாழ்வைப் பின்னோக்கிப் பார்த்ததில் ஒரு விஷயம் புலனாயிற்று. அவர் பணத்தை நாடி இறங்கவில்லை. இதன் மூலம் பணம் கிடைக்கும், லாபம் வரும் என்கிற அனுமானம்

அவரிடம் இருந்தது, உண்மை. ஆனால் அதுவல்ல அவரை உந்தியது. "இது ஓர் அருமையான பொருள். மக்களுக்குத் தேவையான பொருள், ஒரு தரமான பொருளை நயமான விலையில் கொடுக்க வேண்டும்' என்ற நன்னோக்கம் இருந்தது. அதற்காகத்தான் பாடு பட்டார். அதுதான் அவருக்கு வெற்றியைத் தந்தது.

மற்றொரு கோணத்தில் பாருங்கள்.

பணம் என்பது என்ன? உழைப்பை முதலீடாக வைத்தோமானால் பணம் வருகிறது. நெல் பயிரிடு பவன் உழைப்பை முதலீடாக வைத்து விதைக்கிறான்; நடுகிறான்; களை எடுக்கிறான்; நீர் பாய்ச்சுகிறான்; காத்திருக்கிறான்; அறுவடை செய்கிறான் - உழைப்பு, உழைப்பு என உழைப்பின் பலனைக் கடைசியில் பெறுகிறான்.

உழைப்பின் பலன்தான் பணம். உழைப்பு இருக்கும்போது பணம் தானாக வருகிறது. உழைப் பில்லாமல் பெறும் பணம் — லாட்டரிச்சீட்டு — ஏமாற்றிப் பெறும் பணம் எல்லாம் நியாயமற்றது; எனவே நிச்சயமற்றது; நிலையற்றது.

பெரிய பெரிய தொழிலதிபர்கள் சொல்கிறார் கள். பெற்ற பணத்தைத் தக்க வைத்துக் கொள்வதற்குக் கூடக் கண்காணிப்பு தேவை என்கிறார்கள் அவர்கள். கண்காணிப்பும் ஒருவித உழைப்புதான்.

ஆகவே வெறும் பணத்தின் மீது கருத்தைச் செலுத்துவதை விட அதற்கு மூலகாரணமான பணத்தை உருவாக்கும் விஷயங்கள் மீது சிந்தனையை யும் நேரத்தையும் உழைப்பையும் செலுத்த வேண்டும். பலர் அறுவடை செய்ய வேண்டும் என்று ஆசைப்படு கிறார்களே ஒழிய அதற்கு விதைக்க வேண்டும், நாற்று நடவேண்டும் என்கிற வழிமுறைகளில் பாடுபடத்

தயாரில்லை. பணம் பெற்றிருப்பவனைப் பார்த்து, எளிதாகப் பொறாமைப் படுகிறார்கள்.

பொருளை நாடி - விவசாயியிலிருந்து விஞ்ஞானி வரை, தாலுக்கா அலுவலகக் கணக்கெழுத் தாளரிலிருந்து கதாசிரியர் வரை - உழைக்கிறார்கள்.

வெற்றி பெற்றவர்கள் எல்லாம், எந்தத் தொழிலைச் செய்து பெருமைப்பட்டார்கள்; எந்த வேலையில் இறங்கி மன நிறைவு பெற்றார்கள்; எந்தத் தொழில் அவர்களுக்கு தன்னம்பிக்கையையும் தன் காலில் நிற்கும் சுயகௌரவத்தையும் கொடுத்தது என்று பார்த்தோமானால் அங்கேதான் சூட்சுமம் இருக்கிறது.

"நாம் ஒரு காரணத்திற்காகப் பிறந்திருக்கிறோம். அதைப் புரிந்து கொள்ள வேண்டும். காலப்போக்கில் அது தெரியவரும் - கவனம் செலுத்தினால்" என்கிறார் கள் ஞானிகள்; அந்தச் சூட்சுமத்தை விளக்குகிறார்கள்.

மனவியல் அறிஞர்களோ, "நீ விரும்பியதைச் செய். உன் உள்ளுணர்வு சொல்வதைக் கேள். உன்னை நம்பு. உன் மனம் கூறுவதைக் கவனி. எந்த எண்ணம் அடிக்கடி எழுந்து உன்னை உந்துகிறதோ அந்த வழி யில் நட. அதிலே உனக்கு ஆத்ம நிறைவு கிடைக்கும்" என்கிறார்கள்.

அமெரிக்க நாட்டில் ஒரு சர்வே செய்தார்கள். "உங்களுக்குப் பிடித்த வேலையில் நீங்கள் இருக்கிறீர் களா?" என்று கேட்டதற்கு, சுமார் 95 சதம் பேர் 'இல்லை' என்று பதில் சொன்னார்கள்.

ஊருக்குச் செல்பவர்கள், "ஏதோ கிடைத்த வண்டியில் ஏறிக் கொள்கிறார்கள் - எந்த ஊருக்குப் போக வேண்டும் என்கிற தெளிவில்லாமல்" என்று வைத்துக் கொள்ளுங்கள். அது போல, ஏதோ

'சோற்றுப்பாட்டிற்கு ஒரு வேலை' என்று ஏதோ ஒன்றைத் தேர்ந்தெடுத்து 'எல்லாம் சரிதான்!' என்று வாழ்க்கையை நடத்துகிறார்கள்; நகர்த்துகிறார்கள் பலர்.

வீட்டில் அப்பா, அம்மா, அத்தை, பாட்டி, ஆசிரியர் என்று பலர் கூறும் யோசனையைக் கேட்டுப் பலர் வேலையில் இறங்குகிறார்கள்; தேர்ந்தெடுக்கிறார்கள்.

உலகம் நம் காதுபடச் சதா சொல்லிக் கொண்டிருக்கிறது:

"வங்கி வேலைக்குப் போ. நிறையப் பணம் கிடைக்கும். நல்ல இடத்திலிருந்து பெண் கொடுப்பார்கள்."

"சொந்தத் தொழிலில் இறங்கு. ஒருநாள் பெரிய பணக்காரனாவாய்!"

"தாலுக்கா ஆபீஸ் வேலையில் இறங்கு. ஆயுசு பூராவுக்கும் யாரும் உன்னை அசைக்க முடியாது!"

"ஆசிரியர் வேலைக்குப் போ! அதிக கஷ்டமில்லை!" இப்படிப் பல வாசகங்களைக் கேட்கிறோம்.

நமக்கோ வாலிப வயது; அநுபவமோ இல்லை; பெரியவர்களைச் சார்ந்தே பழகி இருக்கிறோம். எனவே அவர்கள் யோசனையை ஏற்று வாழ்க்கையை அமைத்துக் கொள்கிறோம்.

பின் கொஞ்சநாளில், "நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன், இங்கே?" என்ற கேள்வி ஆத்ம சோதனையாக எழுகிறது. "என்ன சாதிக்கிறேன், இதில்?" என்ற கேள்விக்குறி நம்மை வாட்டுகிறது.

"இது செக்கு மாட்டு வாழ்க்கை. உப்பு சப்பில்லாத வாழ்க்கை. என் மனம் இதில் இல்லை. என்

திறமைக்கு இங்கு வழியில்லை” என்ற எண்ணம் கோபமாக எழுகிறது.

## ஆத்ம சோதனை

சிலருக்கு ஏற்பட்ட ஆத்ம சோதனைகள்: “போஸ்டாபீசில் வேலை, கொஞ்சம் அதிகச் சம்பளம்; அதே சமயம் கல்லூரி ஆசிரியராகவும் வேலை நியமனம் கிடைத்தது; கொஞ்சம் குறைந்த சம்பளம். நான் ஆசிரியர் வேலையைத் தேர்ந்தெடுத்தேன்!” என்கிறார் ஹூஸ்டன் நகரத்து நண்பர் பரஞ்சோதி.

அக்கவுண்டண்ட் ஜெனரல் அலுவலகத்தில் வேலை இருந்தது. நாடகம் சினிமாவில் மிகவும் வாய்ப்பு இருந்தது. லாப நஷ்டம், பாதுகாப்பு என்று பார்க்காமல் கலைத்துறையைத் தேர்ந்தெடுத்தார் பாலசந்தர்.

கம்ப்யூட்டர் கம்பெனியில் வேலை. எனினும் மனத்திலோ எழுதும் உந்துதல். அன்று உந்துதலைப் பின்பற்றிய சுஜாதா இன்று எழுத்துலகில் ஒரு தனிச் சிறப்பிடத்தைப் பெற்றிருக்கிறார்.

அவர்களுக்கு வீட்டிலும் வெளியிலும் எதிர்ப்பு இல்லை என்று எண்ணுகிறீர்களா? லாப நஷ்டங்கள் ஏற்படுவதில்லை என்று கூற முடியுமா? உள்ளுணர் வால் உந்தப்பட்டுத் தன் வாழ்நாளில் தன் துறையைத் தேர்ந்தெடுத்துக் கொள்பவர்கள் ஆத்ம திருப்தியை முக்கியமாகக் கணக்கில் எடுத்துக் கொள்கிறார்கள்.

தன்னை நம்புகிறார்கள். தன் காலில் நிற்கிறார் கள். தன்னால் சாதிக்க முடியும் என்ற பெருமையில் வாழ்கிறார்கள். தனக்கும் பிறருக்கும் இந்தச் சமுதாயத் திற்கும் பயன்படுகிறார்கள். அவர்கள் சவால்களைக் கண்டு அஞ்சுவதில்லை. சவால்களும் சோதனை

களும் தான் மனிதனது முழுத் திறமைகளையும் வெளியே கொண்டுவருகின்றன என்பது அவர்களுக்குத் தெரியும்.

காந்தி ராட்டை சுற்றுகிறார்; நூல் நூற்கிறார். வெளி நாட்டுத் தலைவர்கள் எல்லாம் அங்கே உட்கார்ந்து அவருடன் பேசிக் கொண்டிருக்கிறார்கள். பல விஷயங்களையும் விவாதிக்கிறார்கள். "ராட்டை சுற்றுவதன் மூலம் அந்நியத் துணியைப் பகிஷ்கரித்து விட முடியுமா?" என்று பல தலைவர்கள் அன்று கேட்டார்கள்; பரிகசித்தார்கள். இதன் விளைவாக லண்டன் மாநகரில் பல துணி நெய்யும் தொழிற் சாலைகள் மூடப்பட்டன. ஆயிரக் கணக்கான தொழிலாளர்கள் வேலை இழந்தார்கள்.

'அதுதான் சரியான வழி' என்று மகாத்மா காந்தியின் உள்ளுணர்வு சொல்லியது. "நான் நூற்ற நூலில் நெய்த வேட்டியை நான் கட்டிக் கொள்ளும் போது எழும் பெருமை இருக்கிறதே, அது அளவிட முடியாதது. வெள்ளையனை, அதன் மூலம் மன அளவில் வெளியேறச் செய்கிறேன்!" என்று சொல்லி மகிழ்ந்தார் காந்திஜி. லட்சோபலட்சம் தொண்டர்களும் தொடர்ந்தார்கள்.

மகாத்மா காந்தி, "உப்பெடுப்போம். வரி கொடோம்!" என்றார். தண்டி யாத்திரை புறப் பட்டார்.

"உப்பு, என்ன சல்லிக்காசு பெறாத பொருள். என்ன இந்தக் கிழவர் இப்படிச் செய்கிறாரே? இதன் மூலம் வெள்ளையன் வெளியேறி விடுவானா?" என்று கேட்டனர் - நேரு, படேல் போன்ற தலைவர்கள் கூட. பின்னால் அவர்களே அதிசயப்பட்டார்கள். மக்களை

இப்படி ஒன்றுதிரட்டிப் போராட வைக்கும் வலிமை இதற்கு இருக்கிறதே என்று.

ஒரு தலைவன் தனக்கேற்பட்ட உள்ளுணர்வின் வழியே சென்றான்; தன்னை நம்பினான், வென்றான்.

சிறந்த படிப்பும் ஆக்கத்திறனும் கொண்டவர்கள் கூட, தங்களை நம்பி, தாங்கள் விரும்பும் துறையில் இறங்குவதில்லை. தங்களை உலகுக்குக் காட்டிக் கொள்ளாமலே காலமாகிறார்கள். ஏனெனில் பணம் என்றும், பாதுகாப்பு என்றும், நிரந்தரமான சம்பளம் என்றும், சமுதாய எதிர்பார்ப்பு என்றும் சொல்லிக் கொண்டு அவர்கள் தங்களை இழக்கிறார்கள்.

'உன் இதயம் என்ன சொல்கிறது? உன் கனவு களின் பின்னால் நட. நீ விரும்பியதைச் செய். உன் உள்ளுணர்வு கூறுகிறபடி போ.'

என்றுதான் இன்றைய மனவியல் கூறுகிறது.

"இதுதான் இன்றைய ஆன்மிக மனவியல்" என்கிறார் மார்ஷா சைனிடார் என்ற எழுத்தாளர்.

நமது உள்மனம் – ஆழ்மனம் – என்று சொல்லும் பகுதி நமக்குப் பல சமயம் வழிகாட்டுகிறது. திடீரென்று வரும் ஒரு 'ஐடியா' வாக மனத்தில் தோன்றுகிறது. இந்த ஆழ் மனத்துக்கு, பிரபஞ்ச அறிவு என்று சொல்லப்படும் மூலத்துடன் தொடர்பிருக் கிறது. அப்படி மூலத் தொடர்புடன் வரும் எண்ணம் தான் உள்ளுணர்வு. அதை முழுமுதற்பொருள் என்ற மூலம் காட்டும் வழி என்று சொல்லலாமா?

நமது வாழ்வு, நமது படிப்பால், பட்டத்தால் பெரிய மனிதர்களின் தொடர்பால் ஏற்படுகிறது என்று பலரும் எண்ணுகிறோம். ஆனால் அதையும் கடந்து மனிதன் உள்ளுணர்வால் வழி நடத்தப்படும்

போது தான், தன்னைத்தானே புரிந்து கொள்கிறான். பிரபஞ்ச லயத்துடன் இணைந்து செயல்படுகிறான்.

ஏதோ சில தொழில்கள் உயர்ந்தவை என்றும் சில தொழில்கள் தாழ்ந்தவை என்றும் நாம் நினைக்கிறோம். இந்த பிரபஞ்சத்தில் ஒவ்வொன்றுக்கும் ஒரு இடம் இருக்கிறது; ஒரு பணி இருக்கிறது.

நாட்டுத் தலைமைதான் பெரிது என்பதில்லை. மண்பாண்டம் செய்பவனும் ஒரு சிறந்த கலைஞனாக ஆத்ம நிறைவு காண முடியும். நம்மை உந்தும் துறை தஞ்சாவூர் ஓவியமாகவோ, காண்டா மிருகத்தைக் காப்பாற்றுவதாகவோ, மரங்களை நடுவதாகவோ இருக்கலாம்.

எந்தத் தொழிலாக இருந்தாலும் அதில் வாழ்வதற்குத் தேவையான பொருள் இருக்கிறது. ஈடுபாடும், கட்டுப்பாடும், உறுதியான தீர்மானமும், சளைக்காத மனமும் இருந்தால் ஒருநாள் அதற்குரிய பலனைப் பெறமுடியும்.

ஆரம்பகாலக் கட்டங்கள் சோதனைக் காலங்களாக இருக்கலாம். ஆனால் அவை நமது மன உறுதியையும் 'என்னால் முடியும்' என்ற நம்பிக்கையையும் வளர்க்கும் வாய்ப்புக்கள் – நம்மை உயர்த்தும் படிகள் – என்பதை நாம் உணர வேண்டும்.

"எதில் இடைவிடாத நாட்டம் இருக்கிறதோ அதைச் செய்யுங்கள். பணம் தானாக வரும்" என்பது தான் மனவியல் உண்மை.

இதன் மூலம் நாம் என்ன பெறுகிறோம்?

என்னை நான் உணர்ந்து கொண்ட அற்புதம்.

என்னைப் பற்றி எனக்கே ஏற்படும் நம்பிக்கை.

என் காலில் நான் நிற்கும் பெருமை.

என்னால் சாதிக்க முடியும் என்ற துணிவு.

பயனுள்ள வாழ்வு தரும் மன நிறைவு.

நாம் சட்டை வாங்குகிறோம். பொருத்தமான அளவைப் பார்க்கிறோம். நமக்குப் பிடித்த நிறத்தைப் பார்க்கிறோம். துணியின் தன்மையைப் பார்க்கிறோம். அது தைக்கப்பட்டிருக்கும் 'டிசைனை'ப் பார்க் கிறோம்.

இப்படி எல்லாம் ஒரு சட்டையைத் தேர்ந் தெடுக்கும் நாம் வாழ்நாள் பூராவும் ஈடுபடப் போகும் தொழில் நமக்குத் திருப்தி தருகிறதா, நம் திறமைக்கு .ஏற்றதா, நமக்குப் பெருமை தருகிறதா, ஊர் உலகிற்குப் பயனுள்ளதா என்றெல்லாம் ஏன் பார்ப்பதில்லை? இதை எல்லாம் தானே மனத்தில் கொண்டு நம் உள் மனம் வழிகாட்டுகிறது; ஏன் அந்த உள் மனத்தின் ஜீவதாகத்தைப் பின் பற்றி நாம் செல்வதில்லை?

'வாழ்நாளைக் கணக்கெழுதும் குமாஸ்தாவாக கழிக்கப் போவதில்லை!' என்று வெளியேறினார் பெர்னாட்ஷா. கணக்கெழுதுபவராகக் காலத்தைக் கழித்து விடவில்லை.

ராமானுஜன் அவருக்குப் பிடித்த கணிதத் துறையில் இறங்கினார். அவரைப் 'பெயிலா'க்கிய ஆங்கிலத் துறையில் இறங்கிப் போராடவில்லை.

ஜான் கென்னடி அரசியலில் இறங்கினார்; தம் தந்தையின் தொழிலான வியாபாரத்தில் அல்ல.

இவர்கள் தங்கள் தொழிலை ஒரு வேலையாக, சுமையாக, உழைப்பாக எண்ணுகிறார்களா? இல்லை. எனது நண்பர், ஒரு பேராசிரியர், டாக்டர் மர்க்கரூசோ சொல்கிறார்: "நான் நிறைய படிக்கிறேன். படிப்பதில் எனக்குக் கொள்ளை ஆசை, படித்ததைப்

பிறருடன் பகிர்ந்து கொள்கிறேன். இதற்குப் போய்ப் பேராசிரியர் என்ற பதவி கொடுத்துப் பணமும் தருகிறார்கள்! வேடிக்கையாக இருக்கிறது!"

இதைத்தான் கர்மயோகம் என்று சொல்கிறோமா! வேலை சுமையாகவா இருக்கிறது? ஆனந்தமாக — நாம் ஆழ்ந்து போகும் அநுபவமாக — அல்லவா இருக்கிறது!

உலகை வெல்வது பணத்தாசை அல்ல; எது நம் மனத்தில் ஜீவதாகமாக சதா எழும்பிக் கொண்டிருக்கிறதோ அந்த துறையில் இறங்குங்கள். சில சமயம் இது உள்ளுணர்வாக எழும். சில சமயம் நாம் எண்ணிய எண்ணத்தை நிறைவேற்றும் பொருட்டு எல்லாம் கூடி வரும். அதுதான் சரியான பாதை. வாழ்வின் பயன் காண வழி.

ஜான் கார்டனர் என்ற அமெரிக்கச் சிந்தனையாளர் எழுதுகிறார்: "எது அர்த்தம் நிறைந்த வாழ்க்கையோ, எதை நாம் பூரணமாக நம்புகிறோமோ அதிலே இறங்கி உழைக்கும் சிரமம் (ஆனந்தம்) இருக்கிறதே அதுதான் உலகம் அறியா ரகசியம்."

# 13

# பிரபஞ்சமும் வாழ்வும் – ஒரே அச்சில்

பானை மண்ணிலிருந்து செய்யப்படுகிறது
  உபயோகிப்பதோ உள்ளே உள்ள வெற்றிடத்தைத்தான்
கதவும் ஜன்னலும் அறையை உண்டாக்குகின்றன
  உபயோகிப்பதோ ஒன்றுமில்லாத வெற்றிடத்தைத்தான்

இப்படி எழுதுகிறார் லாட்சு, சீனாவின் மிகப் பெரிய ஞானி. 'வாழ்க்கைப் பாதை' என்ற நூலில். அவர் கூறும் இந்தத் தத்துவத்தைச் சீன மொழியில் "டவ்*" (Tao) என்கிறார்கள். இந்தத் தத்துவம் மிக ஆழமானது – அற்புதமானது; இன்று அமெரிக்காவில் மிகவும் பிரபலமாகி வரும் சிறந்த தத்துவம் இது.

என்ன சொல்கிறார் சீன ஞானி?

"பானையைச் செய்கிறோம் ... உள்ளே இருப்பதோ வெற்றிடம். அந்த வெற்றிடத்தில்தான் அரிசி பொங்குகிறது. ஜன்னல், கதவு என்று வைத்து

* இது வல்லின டா அல்ல. 'வாடா மல்லி' என்பதில் உள்ள 'டா' போல மென்மையாக 'டவ்' (DOW) என்று உச்சரியுங்கள். பலர் தமிழில் 'டாவோயிசம்' என்று எழுதுவதும் இதைப் பற்றித்தான்.

வீடு கட்டுகிறோம். படுக்கவும், புழங்கவும் உள்ளே இருக்கும் வெற்றிடம்தான் பயன்படுகிறது."

சகஜமாக நாம் பானையைத்தான் பார்க்கிறோம்; நமக்குச் சாதம் பொங்க உபயோகப்படும் வெற்றிடத்தைப் பார்ப்பதில்லை; நினைப்பதில்லை. அதேபோல வீட்டில் சுவர்களையும் ஜன்னல்களையும் கதவுகளையும்தான் பார்க்கிறோமே ஒழிய உள்ளே உபயோகப்படும் வெற்றிடத்தைப் பற்றி நினைப்பதுமில்லை; பார்ப்பதுமில்லை.

ஆனால், கவனியுங்கள்; அந்த வெற்றிடம்தான் உபயோகப்படுகிறது.

பானையும் உபயோகப்படுகிறது.

வெற்றிடமும் உபயோகப்படுகிறது.

நாம் வாழும் அன்றாட வாழ்க்கையைப் பற்றியும், இந்த உலகைப் பற்றியும், இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றியும் யோசித்து யோசித்துப் பார்த்தோமானால் சில விஷயங்கள் புரிகின்றன. பல சமயம் இவை பற்றி நாம் புரிந்து கொள்ள முயல்வதில்லை. அதனால்தான் தத்துவ ஞானி ஜேம்ஸ் ஆலன் கூறுகிறார்: "வாழ்வில் பல விஷயங்கள், கண்ணுக்கு நேரே புலப்படாமல், மறைந்து கிடக்கின்றன" என்று. "என்ன அந்த உண்மைகள்?" என்று புரிந்து கொள்ள முயன்றோமானால் நம் வாழ்வைச் சிறப்பாக நாம் அமைத்துக் கொள்ள முடியும்.

இந்த மறைந்து கிடக்கும் உண்மைகளை நமது முன்னோர்கள், சீன ஞானிகள் எல்லாரும் கண்டு எழுதி வைத்தார்கள்.

முந்நூறு ஆண்டுகளுக்கு முன் விஞ்ஞான அறிவு இல்லை. ஆனால் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்ன

தாக எல்லாரிடமும் மனம் - சிந்தனை - என்ற அற்புதக் கருவி இருந்தது. அந்தச் சிந்தனையைக் கொண்டு எவ்வளவு தூரம் போக முடியுமோ அதுவரை நமது முன்னோர்கள் சென்றிருக்கிறார்கள். எந்தக் கடைசி உண்மையால் இப்பிரபஞ்சம் இயங்குகிறதோ அந்தக் கடைசி உண்மையை மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே கண்டு பிடித்திருக்கிறார்கள்.

ஏன் நமது ஞானிகள் கண்ட ஞான விளக்கமெல்லாம் இன்று புதுமையாகப் போற்றப்படுகின்றன என்றால், ஞானிகள் அன்று கண்ட அதே முடிவுக்கு இன்றைய விஞ்ஞானிகள் வந்து கொண்டிருக்கிறார்கள். விஞ்ஞானிகள் பரிசோதனைகள் மூலம் - ஆய்வின் மூலம் — நிரூபிக்கிறார்கள். நமது ஞானிகள் அநுபவத்திலிருந்து வெளிப்படுத்தி இருக்கிறார்கள். உள்ளதை உள்ளபடி அறியும் ஞானத்தின் மூலம் அறிந்தார்கள்.

*நீங்கள் கேட்கக் கூடும்.*

*என்ன அந்த உண்மைகள்?*

*நம் வாழ்க்கைக்கு எந்த விதத்தில் அவை பயன் படும்?*

- **இப்பிரபஞ்ச இயக்கத்தின் மூலம் எல்லாம் ஒன்றே. அந்து ஒன்றுதான் முழுமுதற்பொருள்.**
- **எல்லாமே காரண காரியத் தொடர்பால்தான் நிகழ்கின்றன.** (Cause and Effect). **காரண காரியத் தொடர்பைத்தான் 'கர்மா' என்றும் 'கர்மவினை' என்றும் 'ஊழ்வினை' என்றும் கூறுகிறோம்.**
- **இப்பிரபஞ்சத்தின் அமைப்பிலே ஓர் ஒழுங்கு, ஒரு நியதி இருக்கிறது. அதே ஒருங்கமைப்புதான் சிறு**

அணுவிலும் இயங்குகிறது. மனித ஜீவனிலும் இயங்குகிறது.

- இப்பிரபஞ்சத்தில் உள்ள எல்லாப் பொருளும், துகளும் ஒன்றுடன் ஒன்று இணைக்கப்பட்டிருக்கின்றன.
- எதிரும் புதிருமான இரண்டு மாறுபட்ட நிலைகளில் பிரபஞ்சமும் வாழ்வும் இயங்குகிறது. நேர்மின் சக்தி, எதிர்மின் சக்தி என்பது போல, ஆண் பெண் என்ற அமைப்புப் போல, நேர்—எதிர் குணங்களால் இப்பிரபஞ்சம் இயங்குகிறது.
- இந்த இரண்டு மாறுபட்ட சக்திகளும் ஒன்றுக்கொன்று உதவியாக இயங்குகின்றன. பொருளிலிருந்து சக்தி உண்டாவதும் (Matter and Energy) பின் சக்தி பொருளாக மாறுவதும் இதே இணைப்பின் அடிப்படையில்தான்.

*விஷயங்கள் கனமாகப் போகின்றன என்று யோசிக்கிறீர்களா? எதுவும் கனமில்லை! கனமில்லாத ஒரு பலூனை எடுத்துக் கொள்வோம்!*

## விரிவும் சுருக்கமும்

*ஒரு பலூனை ஊதும்போது அது பெரிதாகிக் கொண்டே வருகிறது. ஒரு நான்கு நாள் கழித்து அந்த பலூனைப் பார்த்தால் அது சுருங்கிப் போய்க் கிடக்கிறது. நேரும் எதிருமான இயல்பு இப்படித்தான் இந்தப் பிரபஞ்சத்தில் இயங்குகிறது. அதாவது இப் பிரபஞ்சம் ஒரு பக்கத்தில் விரிவடைகிறது. பலூன் போல* (Expanding Universe); *மறு பக்கத்தில் அது சுருங்கு கிறது.*

## இரு வேறு நிலை

அதேபோல இந்தப் பிரபஞ்ச இயக்கத்தைப் பாருங்கள். பிரபஞ்சம் பூராவும் பல்வேறு நட்சத்திரக் குடும்பங்கள். நமது நட்சத்திரக் குடும்பத்தின் தலைவன் சூரியன். அதைச் சுற்றிப் பல்வேறு கோள்கள். ஒரு கோள் நெருங்கி நெருங்கிச் சூரியன் அருகில் வந்தால் பஸ்மமாகிவிடும்; மாறாகத் தூரத்தில் விலகி விலகிப் போகுமானால் எங்கோ போய்விடும். நேரும் எதிருமான இரண்டு சக்திகளின் ஈர்ப்பு நிலையில் கோள்கள் இயங்குகின்றன. இப் பிரபஞ்சம் பூராவிலும் இத்தகைய இரண்டு நிலை களைக் காண்கிறோம். ஒன்று பொருள், மற்றொன்று சக்தி. அந்தப் பொருளின் உள்ளே போய்ப் பார்ப்போ மானால் அங்கே புரோட்டான் - எலக்ட்ரான் எனப் படும் நேர்மின் துகள் - எதிர்மின் துகள் என்ற இரண்டு நிலைகளைத் தான் காண்கிறோம்.

## தனித்தும் இணைந்தும்

எல்லாவற்றையும் பார்க்கும்போது ஒரு புதிய உறவு நமக்குப் புலப்படுகிறது. இந்தக் கோள்கள் தனித்தும் இயங்குகின்றன. அதே சமயம் கோள்கள் சூரியனுடன் இணைந்தும் இயங்குகின்றன. எலக்ட் ரானும் அப்படித்தான். அவற்றிற்குத் தனித் தன்மை இருக்கிறது. அதே சமயம் அவற்றிற்குப் புரோட்டா னுடன் தொடர்பு இருக்கிறது.

இப்பிரபஞ்சத்தை விட்டு மனித வாழ்க்கைக்கு வருவோமானால் இங்கேயும் அதே தத்துவம்தான் ஆண் பெண் என்று இயங்குகிறது. நேர் சக்தியும், எதிர் சக்தியுமாக - மாறுபட்ட குணங்களின் அமைப்பு களாக - அதே சமயம் ஓர் ஒற்றுமையில்! அதாவது

இவ்வாழ்வில் ஆணும் பெண்ணும் - குடும்பம் என்ற அமைப்பில் - தனித்தும் இயங்குகிறார்கள், இணைந்தும் மற்றவருடன் தொடர்பு கொண்டும் இயங்குகிறார்கள்.

இந்த ஜீவனுக்குத் தனித்தன்மை இருக்கிறது. அதே சமயம் பெண் என்ற மற்றொரு மாறுபட்ட மனித ஜீவனுடன் மட்டிலும் தொடர்பு கொண்டில்லை; பிற எல்லாவற்றுடனும் - மனித ஜீவனுக்குத் தொடர்பு - இணைப்பு - இருக்கிறது. இந்த ஜீவன் மற்றெல்லா தனிப்பகுதியும் போல இந்தப் பிரபஞ்சத்தின் மூலத்துடனும் தொடர்பு கொண்டிருக்கிறது. இந்த தொடர்பைத்தான் "(படைப்பின்) ஒரு பகுதிக்கு அந்த முழுமை என்ற மூலாதாரத்தின் மீது இருக்கும் தாகம்" "அதனுடன் ஒன்றும் தாகம்" என்றெழுதுகிறார் ஒரு பிரெஞ்சு நாட்டு தத்துவ ஞானி. (Thirst of the part for the whole.)

## மூலாதாரத்தை தேடும் ஜீவதாகம்

"ஏன் இந்த உலகில் மதங்கள்? ஏன் மனிதன் கடவுளைச் சிருஷ்டித்தான்?" என்ற கேள்விகளுக்கெல்லாம் விடையளிக்கும் வகையில், "மகனே! இது எல்லா ஜீவன்களிலுமுள்ள அடிப்படைத் தாகம். முழுமையை நோக்கி மூலத்தை நோக்கி ஓடுகின்ற தாகம் இயல்பிலேயே உள்ள ஜீவனில் இருக்கிறது. ஒரு காலத்தில் அந்த மூலம் விரிவடைய விரிவடைய, அதனுடைய ஒரு சிறு பகுதியாகத்தானே வெளி வந்தாய் நீ! தாய் வீடு போகும் ஜீவனின் தாகம் தான் அது!" என்று சொல்லாமல் சொல்கிறார் அவர்.

மனித ஜீவன் தனித்து இயங்குகிறது; பிற ஜீவன்களுடன் - மூலம் உட்பட்ட எல்லாவற்றுடனும் - ஒரு

தொடர்புடன் இயங்குகிறது - நாம் தனியாக வாழ முடியாது!

தியானத்தில், மனத்தை ஒருமுகப்படுத்தும் போது மனம் எங்கோ ஒன்றுடன் ஐக்கியமாகி நிற்கிறது. ஓடுகின்ற உலகில், ஓடாத ஒன்றுடன் ஐக்கிய மாகி நிற்கிறோம். அங்கே இந்தப் பிரபஞ்சத்தின் மூலத்திலே ஐக்கியமாகி நிற்கிறோம்.

இவ்வுலகில் அப்படித்தான் எல்லாப் பொருட் களும் இரண்டு மாறுபட்ட நிலையில் செயல்படு கின்றன. இருளும் ஒளியுமாக, வடதுருவம் தென் துருவ மாக, காந்த சக்தியில் இரு துருவங்களாக இயங்கு கின்றன. வாழ்விலும் அதே - இரு மாறுபட்ட நிலையில் - குணங்களில் தான் மனித வாழ்க்கை துவங்குகிறது. அணுகுண்டைக் கண்டுபிடித்த காலஞ் சென்ற பிரபல அமெரிக்க விஞ்ஞானி ஓப்பன் ஹீமர் நமது உபநிடதத்தை அடிக்கடி படிப்பாராம்.

உபநிடதம் சொல்கிறது:

அசைகிறது, அசைவில்லை,
தூரம்தான் – அருகிலேதான்
எல்லாம் உள்ளே
எல்லாம் வெளியிலே

உள்ளே இருக்கும் ஆன்மிக உலகையும் வெளியே காணும் அன்றாட உலகையும் எப்படி அழகாகப் புரிந்து கொண்டு உபநிடதம் சொல்கிறது, பாருங்கள்!

**பி**ரபஞ்சத்தில் மட்டிலுமே இந்த மாறுபட்ட குண இயல்புகள் இயங்குவதில்லை. இங்கே வாழும் ஜீவன்களின் குணங்களிலும் இந்தப் பேரண்ட அமைப்புதான் நிலவுகிறது. பொருளும் சக்தியும் போல ஆணும் பெண்ணும். இருளும் ஒளியும் போலச்

சாவும் வாழ்வும். உள்ளும் வெளியும் போல ஆத்மாவும், பரமாத்மாவும்.

பல்வேறு மாறுபட்ட குணங்களை - எதிரும் புதிருமான இயல்புகளை - மனித வாழ்வில் சந்திக்கிறோம்.

| | | |
|---|---|---|
| பற்று | – | துறவு |
| யுத்தம் | – | அமைதி |
| பகைமை | – | இரக்கம் |
| கஞ்சத்தனம் | – | ஈகை |
| தளர்வு | – | உறுதி |
| தோல்வி | – | வெற்றி |
| ஏழ்மை | – | வளமை |
| பெறுதல் | – | கொடுத்தல் |
| ஆண் | – | பெண் |
| லாபம் | – | நஷ்டம் |
| நன்மை | – | தீமை |
| நேர் மின் துகள் | – | எதிர் மின் துகள் |

'இரு வேறு உலகத்து இயற்கை' என்கிறார் திருவள்ளுவர். அப்படி இரண்டு மாறுபட்ட இரட்டைத்தன்மையைத் தான் வாழ்வில் எங்கும் பார்க்கிறோம்.

இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் பொருள் – சக்தி அல்லது இருள் - ஒளி என்று எந்த ஒரு மாறுபட்ட குணத்தை எடுத்துக்கொண்டு அதிலே நடந்தாலும் சரி, அதன் எதிர் நிலையில் போய் நிற்போம். அதாவது 'கிழக்கே போகிறேன்' என்று போய்க் கொண்டே இருந்தோமானால் நாம் மேற்குத் திசையில் வந்து நிற்போம். ஏனெனில் பிரபஞ்சம்

வளைந்தது. அதாவது கெடுதல் என்று வந்தால்கூட அது ஒரு சமயம் நல்லதில்தான் முடிகிறது.

பொதுவுடமை, பொதுவுடமை என்று போய்க் கொண்டிருக்கும் ஒரு சமுதாயம் முடிவில் தனி உடைமையில்தான் வந்து நிற்கும். பிறர் நலம் - பிறர் நலம் என்று பேணும் துறவி கூடக் கொஞ்ச நேரத்தில் தன் உடல், தன் வயிறு, தன் பசி என்று சுயநலத்திலே தான் வந்து நிற்பார்.

இதைத்தான் மிக அழகாகக் கிறிஸ்துவ ஞானி அசிசி சொல்கிறார்.

"கொடுப்பதிலே தான் பெறுகிறேன்" கொடுத்தால் - அது பெறுவதில் தான் முடியும் என்று. இது தான் உலக இயக்கம். பிரபஞ்ச இயக்கம் என்று மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த சீன ஞானிகள் கூறுகிறார்கள்: திருமூலர், திருவள்ளுவர் எல்லோரும் கூறுகிறார்கள்.

இதை ஒரு குறியின் மூலம் - வரை படத்தின் - மூலம் மக்கள் கருத்தை வெளியிட்டார்கள். இருளும் ஒளியும் போல, ஆணும் பெண்ணும் போல 'யின்' என்பதும் 'யாங்' என்பதும் என்று இதை விளக்குகிறார்கள். கறுப்பான இருளுக்குப் போய்க் கொண்டிருந்தால், மறுபக்கத்தில் ஒளியாக அது மாறுகிறது. நடுவில் இருக்கும் கறுப்பு வெள்ளைப் புள்ளிகள் எதைக் குறிக்கின்றன தெரியுமா? அதாவது இருளுக்குள் ஒளியின் விதை அடங்கி இருக்கிறது என்பதையும், ஒளிக்குள்ளே இருளின் விதை அடங்கி இருக்கிறது

என்பதையும் தான். பிரபஞ்சம் என்பது, மாறுதலும் உருமாற்றமும் என்பதுதான் அவர்கள் கண்ட முடிவு.

### இரண்டும் சேர்ந்ததுதான் முழுமை

வாழ்வில் இருளும் வேண்டி இருக்கிறது. ஒளியும் வேண்டி இருக்கிறது. பானையும் வேண்டி இருக்கிறது; வெற்றிடமும் வேண்டி இருக்கிறது. இவ்வுலகில் பிறப்பும் இருக்கிறது, சாவும் இருக்கிறது. இடையே நம் வாழ்வு. அதுபோல ஒரு கோடியிலே இருக்கும் நாம் தொடர்ந்து போனால் மறு கோடிக்குப் போகிறோம். இடையிலே அர்த்தநாரீசுவரர். நம்மிடம் ஆண்மையும் இருக்கிறது; பெண்மையும் இருக்கிறது. மனித உடலில் ஆண் ஹார்மோன்களும் பெண் ஹார்மோன்களும் ஓடுகின்றன. "இந்த கோடிக்குப் போகாதே. அந்த கோடிக்கும் போகாதே. நிதானத்தைக் கடைப்பிடி" என்று சொல்கிறதா அர்த்தநாரீசுவர தத்துவம்? பிரிட்ஜோகேப்ரா என்ற பிரபல அமெரிக்க விஞ்ஞானி அப்படித்தான் எழுதுகிறார்.

அமாவாசை இருட்டே வாழ்வு என்றால் முடியுமா? நடுப்பகலின் சூரிய ஒளியே எல்லா நேரமும் என்றால் தாங்குமா? வெப்பமும் குளிரும் அப்படித்தான். சுய நலமும் பர நலமும் அப்படித் தான்; உறுதியும் தளர்வும் அப்படித்தான்; வெற்றியும் தோல்வியும் அப்படித்தான். இரவும் பகலும் போல. இது மாறி மாறி வரும். இதுதான் உலகம். இதை நாம் புரிந்து கொண்டோமானால் சமாளிப்பது எளிது. பயம் இருக்காது. ஏமாற்றம் ஏற்படாது.

இதைத்தான் வாழ்வில் நாம் புரிந்து கொள்ள வேண்டும். மிதமிஞ்சிய நிலையில் எதிலும் போகக் கூடாது. ஒரு சம நிலையிலே எதிலும் நாம் இருக்க

வேண்டும். இந்தக் கோடிக்கோ அல்லது மறு கோடிக்கோ போகக்கூடாது. அப்போதுதான் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகக் கையாள முடியும். இந்த சமநிலையில்தான் (Balance) பிரபஞ்சமே இயங்கும்போது நம் வாழ்க்கையில் இதைப் புரிந்து கொள்ள வேண்டாமா?

பிரபஞ்சத்தில் இருக்கிற அதே அமைப்புதான் மிகச் சிறிய அணுவிலும் இருக்கிறது. அந்த அமைப்பு மாறுபட்ட குணங்கள் - அதிலே காணப்படும் ஒற்றுமை - உள்ளே இருக்கும் ஓட்டமும் துடிப்பும் தான், அணுவிலும் இருக்கின்றன. நம் வாழ்விலும் இருக்கின்றன. தியான அநுபவத்தை எண்ணிப் பார்த்தோமானால் “நான்தான் இந்தப் பிரபஞ்சமாக விரிந்து கிடக்கிறேனா?” என்பது போன்ற ஒரு மலைப்பு. மறுபுறம் இம்முழுப் பிரபஞ்சமும் நம் முள்ளே அடங்கிச் சிறுத்து இருப்பது போன்ற ஒரு நினைப்பு.

இதிலே எது உண்மை?

தம்பீ! இந்தப் பிரபஞ்சமும், அணுவும், மனித வாழ்வும் எல்லாம் ஒரே அச்சில்தான் வார்க்கப்பட்டிருக்கின்றன. அதிசயமான பிரபஞ்சம் இது! அதிசயமான மனிதன் நீ! எல்லாம் உனக்குள்! எல்லாம் வெளியே!

# 14

# உள்நோக்கிய பயணம்

கட்டுப்பாடில்லாத தனி நபர் –

கட்டுப்பாடற்ற சுதந்திர சமுதாயம் –

இயற்கை ஒழுங்கில் செல்லாத கோள்களும் நட்சத்திரக் கூட்டங்களும்.

இவைகள் எல்லாம் எங்கே செல்கின்றன? அவை அழிவை நோக்கிப் பயணம் செய்கின்றன. "நான் யாருக்கும் கட்டுப்பட்டவனல்ல" என்று எந்தக் கோளும், நட்சத்திரமும் இயங்குவதில்லை; இயங்க முடியாது. எல்லாவற்றிற்கும் ஓர் எல்லை, ஒரு வரம்பு இருக்கிறது.

எந்த ஒரு நட்சத்திரமும் சரி, செவ்வாய், சுக்கிரன், சனி போனற் கோள்களும் சரி எல்லாம் தனித்தும் இயங்குகின்றன; இணைந்தும் இயங்குகின்றன. மனிதனும் அப்படித்தான்.

எல்லாம் ஒன்றை ஒன்று நம்பி, ஒன்றுக்கொன்று உதவியாக, இயங்குகின்றன; இப் பிரபஞ்சத்தில் எல்லாமே இணைக்கப் பட்டிருக்கின்றன.

வெளி உலக அமைப்பும், இப் பிரபஞ்ச அமைப்பும் அதன் மாறுதலும் – நம்மைப் பாதிக் கின்றன.

நம் உள் மனதின் அமைப்பும், மாறுதலும் வெளி உலகை - இப் பிரபஞ்சத்தை பாதிக்கின்றன. அதாவது உள் மன அமைப்புதான் - நம் மன எண்ணங்களின் சக்திதான் - வெளி நிகழ்ச்சிகளாக மலர்கின்றன; பரிணமிக்கின்றன.

நம் மனதில் எழும் எண்ணத்திற்கு என்ன சக்தி உண்டோ அதே எண்ண சக்தியால்தான் இப்பிரபஞ்சமும் படைக்கப்பட்டிருக்கிறது. நாம் நம்முடைய மன எண்ணங்களை வலிமையாக்கிக் கொள்வதன் மூலம் பிரபஞ்ச சக்தி செய்யக் கூடிய எல்லாவற்றையும் செய்யலாம். நிலம், நீர், தீ, காற்று, வானம் என்ற ஐந்து இயற்கை சக்திகளையும் கட்டுப்படுத்தலாம்.

நமக்கும் இப் பிரபஞ்சத்திற்கும் ஏற்பட்டிருக்கும் தொடர்பு மூலம் நமது பிரச்னைகளை அந்த மேலிடத்திற்கு அந்த மாபெரும் பிரபஞ்ச சக்தியிடம் அனுப்பி விடலாம்.

நமக்கும் பிரபஞ்ச சக்திக்கும் இருக்கும் தொடர்பு மூலம் பிரபஞ்ச சக்தியையே நாம் நம் நிலைக்கு இழுத்து நமக்குள்ளே கொண்டு வரலாம்.

ஞானிகளும் யோகிகளும் இதைத்தான் செய்கிறார்கள்.

மனிதன் இந்த உண்மையை உணரும்போது ஒன்றைத் தெரிந்து கொள்கிறான்; தானேதான் இந்தப் பிரபஞ்சம் - இந்தப் பிரபஞ்சமும் தானும் வேறு வேறல்ல; என்ற உண்மையை.

## பிரபஞ்ச மூலம்

இவ்வுலக உயிர்களும், - மனிதனும், தாவரமும், மிருகங்களும், மற்றும் கல்லும், மண்ணும், பூமியும், சந்திரனும, நட்சத்திரமும் - எல்லாம் ஒரு மூலத்தி

லிருந்து, ஒரே ஒரு மூலப் பொருளிலிருந்து தான் உருவாயின.

அதன் வளர்ச்சியைத்தான் விரிவடையும் பிரபஞ்சம் (Expanding Universe) என்கிறார்கள். அதாவது இப் பிரபஞ்சம் ஒரு காலத்தில் ஒரே ஒரு மூலப் பொருளாய் – கருவாய் – இருந்தது.

காலப்போக்கில் இது விரிவடையத் துவங்கிற்று. அதன் விளைவாகப் பல்கோடி பால் வீதிகள், அதிலே பல்கோடி நட்சத்திரங்கள், அதிலே பல்கோடி கிரகங்கள் – கோள்கள் – பூமி சந்திரன் போல, அமைந் திருக்கின்றன. இவை விரிவின் விளைவுகள்.

இப்படி விரிவடைந்து கொண்டே போகும் பிரபஞ்சம் அதன் மறு செயலில் எல்லாம் சுருங்க – ஒன்றை ஒன்று நெருங்கத் துவங்குகிறது.

அப்படி சுருங்கும் – ஒன்றை ஒன்று நெருங்கும் – கோள்களும் நட்சத்திரங்களும் ஒன்று சேர்ந்து மீண்டும் ஒரே மூலப்பொருளாய் உரு எடுக்கின்றன. இப்படி விரிவடைதலும், சுருங்குதலும் நிகழ்ந்த வண்ணம் இருக்கின்றன; இதைத்தான் ஊழிக் கூத்து – யுகப்பிரளயம் – என்கிறோம்.

### விரிவடையும் பிரபஞ்சம்

பிரபஞ்சத்தின் இந்தத் தன்மையை மனிதனிடத் தும் காணலாம். மனிதனுடைய இயக்கத்தின் முழுக் கட்டுப்பாடும் அவன் மூளையில், மனதில் இருக்கிறது. அங்கு எழும் எண்ணங்களில், உணர்வில், அடங்கி இருக்கிறது.

மனதில் எழும் எண்ணங்களுக்கும், உணர்வு களுக்கும் அளவே இல்லை.

சதா சர்வ நேரமும் ஏதேதோ எண்ணங்கள் எழுந்த வண்ணம் இருக்கின்றன. அதாவது பிரபஞ்சம் போல, மனதிலிருந்து கிளம்பும் எண்ணங்கள் விரிவடைந்து கொண்டே இருக்கின்றன.

அதிக நிலைப்பில்லாத — வலிமை இல்லாத காரணத்தால் — இந்த எண்ணங்களின் புற உலகப் பாதிப்பு மிகக் குறைவே.

இப்படி விரிவடையும் எண்ணங்கள் ஒரு பக்கம் நிகழும்போது மனிதன் என்ன செய்கிறான்?

எண்ணங்கள் வெளிநோக்கிச் சென்று விரிவதை மாற்றி உள் நோக்கி செலுத்தி அவற்றை சுருக்கிறான்.

அப்படி உள் நோக்கி எண்ணங்களை நிலைப் படுத்துவதைத்தான் தியானம் என்கிறோம். எண்ணம் உள்நோக்கி, ஒன்றே ஒன்றில் நிலைபெறுத்தப்படும் போது நாம் மூலத்துடன் ஐக்கியமாகிறோம். இதையே 'சமாதிநிலை' என்கிறோம்.

தாயைத் தேடும் குழந்தைபோல மனிதன் - இந்த ஆத்மா - தன் மூலத்தைத் தேடும் முயற்சிதான் தியானம்.

## உள்ளே காணும் முயற்சி

மனிதன் பிறந்ததிலிருந்து வெளி உலக நிகழ்ச்சி களால் பாதிக்கப்படுகிறான். அவற்றிற்கேற்ப அவன் அனுபவம் உருவாகிறது.

உணவு, காற்று, இருக்க இடம், பாதுகாக்க உடை என்று எல்லாமே வெளிஉலகின் மோதல்கள்தான்.

நாம் வாழ்கின்ற உலகம் வெளி உலகம்: நமது தேவைகளும் உணவு, காற்று என்று வெளி உலகால் பூர்த்தி செய்யப்படுகின்றன.

இப்படி வெளி உலகம் ஒன்றையே உணர்ந்து நம்பி வாழ்வை முடித்துக்கொள்ளும் வாழ்வு மிருக, தாவர வாழ்க்கை என்று சொல்லலாம்.

இப்படி வெளிஉலகிற்கு மட்டுமே ஈடு கொடுத்து உருவான மனிதன் எப்போது முதன் முதல் உள்ளே பார்த்தான்?

தனக்குள்ளே போனான்?

தன்னுள் ஒரு தனி உலகைக் கண்டான்?

அத்துடன் ஐக்கியமானான்?

— என்ற கேள்விகள் எல்லாம் “ஆயிரம் டாலர் கேள்விகள்”.

விரிவது சுருங்க வேண்டும் என்கிற பிரபஞ்ச நியதிபோல இதுவும் ஜீவனின் நியதியாக இருக்க வேண்டும்.

மனிதன் உள்நோக்கிப் பார்த்து தன்னை உணர்ந்தபோது பல படி முன்னேறி விட்டான் என்று தான் சொல்ல வேண்டும்.

மனிதனின் இந்த உள்நோக்கிய முயற்சியை — தான் வந்த, மூலத்துடன் ஐக்கியமாகும் சமாதி நிலையை — தன்னை உணர்ந்த நிலையைத்தான் மதங்கள் எல்லாம் பேசுகின்றன; விளக்குகின்றன.

ஒரு பிரெஞ்சு தத்துவ ஞானி எழுதுகிறார்: மனிதன் ஏன் உள் நோக்கிப் போகிறான் என்ற கேள்விக்கு விடையை. “பிரபஞ்சத்திலிருந்து வந்தோம். நாம் அதன் சிறுபகுதி. அந்த பிரபஞ்ச மூலத்துடன், அதன் பகுதி மீண்டும் ஐக்கியமாவது என்பது அந்த சிறு பகுதியின் ஜீவதாகமாக இருக்கிறது.”

இதைத் தெளிவு படுத்தும் முயற்சியில்தான் எல்லா மதங்களும் ஈடுபட்டிருக்கின்றன.

## பிரபஞ்சத்தின் இருவகை இயல்பு

இப் பிரபஞ்சத்தில் இரண்டு நிலைகள் இருக்கின்றன. ஒன்று பொருளால் ஆன உலகம், மற்றொன்று (பொருளால் ஆகாத - புலனாகா சக்தியால் ஆன) தெளிவு - ஞானம் - என்ற உலகம். அந்த ஞானத்திற்கு உருவம் இல்லை. வடிவம் இல்லை. அது புலனாகாப் பெருஞ்சக்தி.

கொஞ்சம் தள்ளி நின்று பார்த்தால் இப் பிரபஞ்சத்தில் ஏற்படும் மாறுதலையே பொருள். சக்தி என்றும், பிறப்பு - இறப்பு என்றும், ஒளி - இருள் என்றும், வெற்றி - தோல்வி என்றும், விரிவு - சுருக்கம் என்றும் காண்கிறோம்.

இதுதான் உலகத்து இயற்கை. ஒன்று மற்றொன்றாக மாறும் தன்மை.

இரண்டும் தனித்தனியானவை என்றும் சொல்லலாம்; இல்லை இரண்டும், ஒன்று மற்றொன்றாக மாறும் இயல்புடைய ஒரே காசின் இரு பக்கங்கள் என்றும் சொல்லலாம்.

உண்மை என்னவென்றால் இரண்டும் ஒரே மூலத்தின் இரு வேறு காட்சிகள், இரு வேறு நிலைகள் என்பதுதான்.

ஒன்றைப் பார்க்கும்போது அது மறைந்து மற்றொன்றாகிறது. எனவே தான் "இதை 'மாயை' - நிலையானதல்ல. எல்லாமே மாறிக் கொண்டிருக்கிறது. விரிவை நோக்கி, அல்லது சுருக்கத்தை நோக்கி" என்று கூறுகிறோம்.

ஆகவே எது நிலையானது?

மாறுதல் ஒன்றுதான் நிலையானது.

இந்த மாறுதலுக்கு காரணமான மூலம்தான் நிலையானது.

## ஞானிகளும் – விஞ்ஞானிகளும்

இப்படி இருவேறு வகைப்பட்ட உலகையும் சில நிரந்தர விதிகள் – நியதிகள் – இயக்குகின்றன.

பொருள் உலக நியதிகளைத்தான் பௌதிக உண்மைகள் அல்லது – பொதுவாக – விஞ்ஞான உண்மைகள் என்கிறோம்.

இவை நாம் வாழும் பொருள் உலகைத் தெளிவு படுத்துகின்றன. அவற்றின் இயல்பைப் பிரதிபலிக் கின்றன.

பொருள் உலகைப் பார்க்கும்போது கல் என்பது எல்லோருக்கும் கல்தான்.

மண் எல்லோருக்கும் மண்தான். நட்சத்திரமும் அப்படித்தான்.

ஆனால் மனித வாழ்வு என்று வரும்போது ஒன்றை ஒரு மனிதன் நன்மை என்கிறான். அதையே மற்றோர் மனிதன் தீமை என்கிறான்.

ஒரு மனிதன் எல்லை போடாமல், வேலி யில்லாமல் சுதந்தரமாக வாழ விரும்புகிறான். மற்றோர் மனிதன் வேலி போட்டு, பாதுகாப்புடன் வாழ விரும்புகிறான்.

ஒரே பொருளைப் பார்க்கும் இருவர், அவர் களது பார்க்கும் விதத்தில் – மனோபாவத்தால் – வேறு படுகின்றனர். இதில் எது சரி என்று யாரும் சொல்ல முடியாது.

நம் தேவை, நம் அனுபவம், தான் பார்க்கும் விதம் இவற்றிற்கேற்ப ஒவ்வொரு மனிதர்களும் தீர்மானிக்கிறார்கள்.

எனவே இப்படிப்பட்ட உலகம் - மனிதன் வாழும் உலகம் - பொருள் உலகிலிருந்து - பௌதிக விதிகள் கட்டுப்படுத்தும் உலகிலிருந்து வேறுபடுகிறது.

ஒன்று பொருள் உலகம்; பௌதிக உலகம்;

மற்றது பொருள் அல்லாத, பொருளைக் கடந்த சூட்சும, காட்சிக்கு அப்பாற்பட்ட உலகம்.

ஒன்றிலே பௌதிக - விஞ்ஞான உண்மைகள் ஆள்கின்றன. மற்றதிலே வாழ்க்கை நெறிகள் - தர்ம நியாயங்கள் ஆள்கின்றன.

ஒன்றைக் கண்டுபிடித்தவர்களை விஞ்ஞானிகள் என்கிறோம்.

மற்றதைக் கண்டுபிடித்தவர்களை ஞானிகள் என்கிறோம்.

ஒன்றை நியூட்டன் விதி, ஐன்ஸ்டைன் விதி என்று பெயரிட்டு உபயோகப்படுத்துகிறோம்.

மற்றதை பஞ்ச சீலங்கள் என்றும் பஞ்சமா பாதகங்கள் என்றும் பெயரிட்டு புத்தர் கண்ட எட்டு வழிப்பாதை என்றும் மோசசின் பத்துக் கட்டளைகள் என்றும் அழைக்கிறோம்.

புலனாகிற உலகம் விஞ்ஞான உண்மைகளுக்கு கட்டுப்பட்டு இயங்குகிறது.

புலனாகாத உலகின் தர்ம நெறிகள் தான் புலனாகின்ற நமது உலகை இயக்குகிறது. அந்த தர்ம நெறிகள் - ஞானிகள் கண்ட உண்மைகள்; கண்டு பிடிப்புகள்; பௌதிக உண்மைகள் போல இவை நிரந்தர உண்மைகள்.

### தர்ம நியாயங்கள்

ஊசியால் உடம்பைக் குத்தினோமானால் வலிக்கிறது. பலனை உடனடியாக உணர்கிறோம்.

மாறாக தர்ம நெறிகளை மீறினால் அதன் பலன்கள் உடனடியாகத் தெரிவதில்லை. வாழ்வின் தர்மங்கள் மறைந்து கிடக்கின்றன.

ஒரு தவறு செய்ததும் - தர்ம நியாயங்களை மீறி செயல்பட்டதும் - நம்முன் கடவுள் தோன்றி "நீ இதை மீறினாய் எனவே இது தண்டனை" என்று சொல்வதில்லை. இயற்கையின் எந்தச் சட்டத்தை மீறியதால், எந்த தர்ம நியாயத்தை மீறியதால் - இந்த விளைவு என்பதை நாம் தான் பின்னோக்கிப் பார்த்து காரண காரியங்களைக் கண்டுபிடிக்க வேண்டும். தெளிவு பெற வேண்டும். தெளிவு பெற்றபின் அதை மீறாமல் வாழ வேண்டும்.

## அறிவும் அன்பும்

எனவே, வாழ்க்கை என்பது தன்னை அறியும் முயற்சி, இவ்வுலகை அறியும் முயற்சி; மூலத்தை அறியும் முயற்சி.

இந்த அறியும் முயற்சியைத்தான் அறிவு என்கிறோம். வள்ளுவர் கடவுளை "வாலறிவன்" — தூய அறிவினன் — என்கிறார். அதேபோல இப் பிரபஞ்சத்தை அதிலுள்ள கோள்களை இணைத்திருப்பது ஈர்ப்பது சக்தி. மனித உலகை - ஜீவ உலகை - இணைத்திருப்பது அன்பெனும் ஈர்ப்பு சக்தி. அதன் மூலம் நாம் பிற ஜீவன்களைத் தொடலாம். மூலத்தைத் தொடலாம். இதுதான் உலகை - பிரபஞ்சத்தை - ஆளும் சக்தி, அன்பு.

எனவேதான் நம் முன்னோர்கள்

'அன்பே சிவம்' என்றார்கள்.

'அறிவே தெய்வம்' என்றார்கள்.

'சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே' என்றார் தாயுமானவர்.

"அன்பெனும் பிடியில் அகப்படு மலையே" என்று பாடினார்கள்.

அறிவின் வழியே செல்வதை ஞான மார்க்கம் என்கிறோம்.

அன்பின் வழியே அடைவதை பக்தி மார்க்கம் என்கிறோம்.

அறிவின் வழியே "நான் யார்?" என்று தேடிய ரமணரிடம் அன்பையும் பார்க்கிறோம். அன்பின் வழியே கபீர்தாசரிடமும், நாயன்மார்களிடமும் அறிவையும் தெளிவையும் காண்கிறோம்.

எல்லாமே மூலத்தை நாடும் முயற்சி.

"நாம்தான் இந்த பிரபஞ்சம்; இப்பிரபஞ்சம்தான் நாம்" - என்ற தெளிவு உணர்வு உள்நோக்கிய பயணத்தில் கிட்டுகிறது.

அன்பு, அறிவு என்ற இரண்டு குணங்களைக் கைக்கொண்டு வாழ்ந்தால் 'ஆனந்த நிலை'யை சமாதி நிலையை அடையலாம். அறிவும் அன்பும் ஒன்று சேர்ந்த நிலை ஒளியாக — உள்ளொளியாக — இருக்கிறது; பரிபூரண நிலைக்கு — ஆனந்த நிலைக்கு — அமைதி நிலைக்கு (இல்லாத உலகிற்கு) — சமாதி நிலைக்கு நம்மை அழைத்துச் செல்கிறது. இதைத்தான் "தேஜோ மயானந்தம்" என்கிறார் தாயுமானவர். தேஜோமயம் — ஒளிமயம் — ஆனந்தமயம் என்கிறார்.

அன்றாட வாழ்வை ஆனந்த மயமாக்க வேண்டுமா?

உள்ளொளியை நாடுங்கள்.

அதற்கு அன்பு, அறிவு என்ற இரண்டு கருவிகள் தான் தேவை.

நாம் எல்லோரும் இப்படி வாழ்ந்தால் எப்படிப் பட்ட சமுதாயமாக இருக்கும் இது?

எண்ணிப்பாருங்கள்!

  

# எம்.எஸ். உதயமூர்த்தி

## வாழ்க்கைக் குறிப்பு

மனவியலைப் பற்றித் தொடர்ந்து கடந்த இருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ்ப் பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதி வருபவர் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி. மனோதத்துவங்களை வாழ்க்கைக்கு எப்படிப் பயன்படுத்துவது என்பதைச் சுமார் 14 நூல்களில் வடித்துத் தந்திருக்கிறார் அவர். சிறந்த ஆசிரியர் என்ற விருதும், 'புல் பிரைட்' அறிஞர் (Fulbright Scholar) என்ற கௌரவமும் இவருக்கு உண்டு.

எம்.எஸ். உதயமூர்த்தி விளநகர் என்ற கிராமத்தில், மயிலாடுதுறை தாலுக்காவில், தஞ்சை மாவட்டத்தில் பிறந்தவர். இவரின் பெற்றோர் திரு. சிங்காரம், கமலம்மாள் ஆவர். மயிலாடுதுறை உயர் நிலைப்பள்ளியில் படித்த பின் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் இளநிலை பட்டப்படிப்பும், முதுநிலைப் பட்டப்படிப்பும் பெற்றார். சென்னை பல்கலைக் கழகத்தில் தனது பாடமான வேதியியலில் மற்றோர் முதுநிலைப் பட்டம் பெற்றபின் மேல் படிப்புக்கு அமெரிக்கா சென்றார்.

அமெரிக்கா செல்லுமுன் சீர்காழி இந்து உயர் நிலைப் பள்ளியிலும், குடந்தை அரசினர் கல்லூரி யிலும் ஆசிரியராகப் பணியாற்றினார். பின் கிண்டி பொறியியற் கல்லூரியில் உதவி பேராசிரியராக பணி புரிந்தார்.

அமெரிக்காவில் விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் மருத்துவ ரசாயனத்தில் 'டாக்டர்' பட்டம் பெற்று ஒரு பத்தாண்டுகள் விஸ்கான்சினிலுள்ள மவுண்ட் செனாரியோ கல்லூரியிலும், மின்ன சோட்டா, ஐடகோ பல்கலைக் கழகங்களிலும் பேராசிரியராகப் பணியாற்றினார்.

பின் ஆசிரியத் துறையை விட்டு விலகி, விஸ்கான் சினில் உணவு தயாரிக்கும் நிறுவனம் ஒன்றில் அதன் தலைமை நிர்வாகியாக நான்காண்டுகள் பணியாற்றி னார். 1982இல் (Barclay Chemicals) பார்கிளே கெமிக்கல்ஸ் என்ற ரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்யும் தனது சொந்த நிறுவனத்தைத் துவங்கினார். "அமெரிக்காவில் தொழில் துறையில் உள்ளவர்கள் யார் யார்" என்ற நூலில் (Directory of Who is Who in Business and Finance in the U.S A.) அவரது பெயர் இடம் பெற்ற பெருமையும் இவருக்குண்டு. அந்நிறுவனத்தை தனது குமாரரிடம் ஒப்படைத்துவிட்டு 1987இல் நிரந்தரமாக இந்தியா வந்தார். இன்று சென்னையில் வசிக்கின்றார் அவர்.

சுய வளர்ச்சி பெற வாசகர்கள், 'எண்ணங்கள்' 'மனம், பிரார்த்தனை, மந்திரம்', 'நெஞ்சமே அஞ்சாதே நீ', 'தட்டுங்கள் திறக்கப்படும்' என்ற அவரது நூல் களைப் படியுங்கள்.

சுய பொருளாதார மேம்பாடு பெற அவரது 'சிந்தனை, தொழில், செல்வம்' என்ற நூலை தாரக மந்திரமாக உபயோகியுங்கள்.

சமுதாய ஈடுபாட்டின் அவசியத்தை உணர அவரது 'நாடு எங்கே செல்கிறது' என்ற நூலையும், 'நம்மால் முடியும் தம்பி, நம்பு', 'நீ தான் தம்பி

முதலமைச்சர்' என்ற நூல்களையும் படித்துப் பாருங்கள்.

எம்.எஸ். உதயமூர்த்தியின் உந்துதல்கள் கன்யாகுமாரியிலிருந்து கிருஷ்ணகிரி வரை, வேதா ரண்யத்திலிருந்து வால்பாறை வரை இளைஞர்களை, பெண்களை படித்த மக்களை ஒரு உத்வேகம் பெறச் செய்திருக்கிறது. டைரக்டர் பாலசந்தர், 'உன்னால் முடியும் தம்பி' என்ற தலைப்பில், கதாநாயகனுக்கு உதயமூர்த்தி என்ற பெயரைச் சூட்டி, ஒரு திரைப் படத்தை வெளியிட்டிருக்கிறார். பாலசந்தரிலிருந்து பள்ளி இளைஞர்கள் வரை, அவரது எழுத்துக்கள் ஒரு பாதிப்பை ஒரு உத்வேக உணர்வை ஒரு நம்பிக்கையை உருவாக்கி இருக்கிறது. இதன் விளைவாக, ஒரு அமைதியான மாற்றம் நாட்டில் ஏற்பட்டுக் கொண் டிருக்கிறது.

தனது அறிவுக்கும், திறமைக்கும் ஏற்ற ஒரு புதிய சமுதாயத்தைத் தமிழகம் பெற வேண்டும் என்று விரும்பும் எம்.எஸ். உதயமூர்த்தி, இதற்காக **மக்கள் சக்தி இயக்கம்** என்ற ஒரு புதிய இயக்கத்தை ஆரம்பித் திருக்கிறார்.

தொகுப்பு: **G. சீனிவாசன்** Ex. P.T.C.

## டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி
## எழுதிய பிற நூல்கள்

வெற்றிக்கு முதல்படி
எண்ணங்கள்
வாழ்க்கையை அமைக்கும் எண்ணங்கள்
சிந்தனை தொழில் செல்வம்
மனம் பிரார்த்தனை மந்திரம்
உயர்மனிதனை உருவாக்கும் குணங்கள்
தன்னம்பிக்கையும் உயர்தர்ம நெறிகளும்
பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி?
நம்மால் முடியும் தம்பி நம்பு!
மனித உறவுகள்
நெஞ்சமே அஞ்சாதே நீ
தட்டுங்கள் திறக்கப்படும்
ஆத்ம தரிசனம்
நாடு எங்கே செல்கிறது?
தலைவன் ஒரு சிந்தனை
நீதான் தம்பி முதலமைச்சர்
சாதனைக்கோர் பாதை!
சொந்தக்காலில் நில்!
வெற்றி மனோபாவம்
என்னைச் செதுக்கிய எண்ணங்கள்
வாழ்க்கை வெளிச்சம்

விபரங்களுக்கு:

**கங்கை புத்தக நிலையம்,**
தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை – 600 017

